அதிக பக்கங்கள்

# கல்கி

KALKI 18.8.2002
ரூ. 6.00

பெண் சுதந்திரச் சிறப்பிதழ்





நம்புங்க, இவர் பொன்னம்மா!

# PARK AVENUE

**PRESTIGIOUS TWO/THREE BEDROOM DELUXE APARTMENTS.**

**AT 5A, Trivandrum Road, Vannarpettai, Tirunelveli - 3.**

- கிரானைட், மார்பிள் ப்ளோரிங்
- மாடுலர் ஸ்விட்சஸ்
- கார் பார்க்கிங்
- ஜெனரேட்டர்
- 24 மணி நேரமும் தண்ணீர் சப்ளை

**Price**

2 Bed Rooms Rs. 8 Lakhs

3 Bed Rooms Rs. 12 Lakhs




FOR DETAILS :

## CORAL CONSTRUCTIONS


3, KAMARAJAR SALAI, TIRUNELVELI - 7.

PHONE : 0462 - 531755 CELL : 98421 - 82917, 98430 - 66785

# உள்ளே...

## வாழ்த்துகிறார்கள்



प्रधान मंत्री
Prime Minister

**MESSAGE**

I am happy to know that Kalki group of magazines is celebrating the Diamond Jubilee of Kalki magazine and birth centenary of one of its founding members, Shri Sadasivam.

Media is an important custodian and purveyor of values in society. This responsibility enjoins higher standards of probity and principled professionalism on journalists. It is a matter of great satisfaction that magazines and periodicals like 'Kalki' have made a significant contribution in this direction.

I felicitate the Management, Staff and the contributors and readers of 'Kalki', on this occasion and wish all success to their endeavours.

(A.B. Vajpayee)

New Delhi
July 27, 2002

பக்கம் – 78

கல்கி இண்டர்நெட் முகவரி : www.kalkiweekly.com ✉ மெயில் : kalkiweekly@vsnl.com



## கல்கி வைர விழா–
## கல்கி சதாசிவம்
## நூற்றாண்டு விழா

### நிகழ்ச்சித் தொகுப்பு

பக்கம் – 68



# தி.மு.க.

தி.மு.க. தலைமை நிலையமான அண்ணா அறிவாலயத்தின் பரபரப்பான முன் பகுதிதான் நமக்குத் தெரியும். பின் புறத்தில் ஆர்ப்பாட்டமில்லாமல், அமைதியாக இயங்கிக் கொண்டிருக்கிறது. பேராசிரியர் அன்பழகன் நூலகம். தி.மு.க. அறக்கட்டளையால் நடத்தப்படும் நூலகம் இது. தி.மு.க.விலேயேகூட பல பிரமுகர்களுக்கு இதுபோன்ற நூலகம் இயங்குவது தெரியாமல் இருக்கக் கூடும். இங்கு கிட்டத்தட்ட 20,000 புத்தகங்கள் இருக்கின்றன.



பெரும்பாலும் சமுதாயம், இலக்கியம் சம்பந்தப்பட்டவை. இதில் சிறப்பு என்னவென்றால் 99 சதவிகித புத்தகங்கள் நன்கொடையாகக் பெறப்பட்டவைதான்.

1987ல் அறிவாலயம் துவக்கப்பட்ட போது 1000 புத்தகங்களுடன் அமைக்கப்பட்ட நூலகம் இது. திராவிட இயக்கப் பற்றுள்ள சி.கே. சுந்தரராசன் கன்னிமரா நூல் நிலையத்திலிருந்து ஓய்வு பெற்றவர். அவரைக் கண்டெடுத்து பொறுப்பாகப் போட்டு விட்டார்கள்.

"இந்த நூலகம் பெரும்பாலும் ஆராய்ச்சி மாணவர்களுக்குத்தான் பயன்படுகிறது" என்கிறார் சுந்தரராசன். துவங்கியதிலிருந்து இதுவரை சுமார் 5000 ஆராய்ச்சியாளர்கள் இந்த நூல் நிலையத்தைப் பயன்படுத்தியிருக்கிறார்கள். 1824ல் பதிப்பிக்கப்பட வீரமாமுனிவர் எழுதிய 'சதுரகராதி' என்ற புத்தகம் இங்கு இருக்கிறது. பத்திரிகைகளைப் பொறுத்தமட்டில் 1885ல் வெளிவந்த 'தத்துவ விவேசிய' என்ற பகுத்தறிவுச் சிந்தனை ஏடு பாதுகாத்து வைக்கப்பட்டிருக்கிறது. "திராவிட இயக்கத்தைப் பற்றிய ஆராய்ச்சியில் ஈடுபடுபவர்கள் இந்த நூலகத்தையும் பெரியார் திடலில் உள்ள நூலகத்தையும் தவிர்க்க முடியாது" என்கிறார் நூலகர் சுந்தரராசன்.

எல்லா தினப் பத்திரிகைகளும் வாங்கப்பட்டாலும் நான்கு பத்திரிகைகள் தான் பாதுகாத்து நிரந்தரமாக வைக்கப்படுகின்றன. பெரியார், அண்ணா, கலைஞர், பாரதி, பாரதிதாசன் ஆகியோர் எழுதிய புத்தகங்களும், அவர்களைப் பற்றிப் பிறர் எழுதிய புத்தகங்களும் பார்வைக்கும் பயன்படுவதற்கும் வசதியாக ஒரே இடத்தில் அடுக்கப்பட்டிருக்கின்றன. இந்த நூலகத்தை அதிக அளவில் பயன்படுத்துபவர்களில் கலைஞரும் ஒருவர். "இதை லைப்ரரியாகப் பயன்படுத்துங்கள், அரட்டையடிக்கும் 'லாபி'யாகப் பயன்படுத்த வேண்டாம்" என்பது கலைஞரின் அறிவுரை. ○

# அ.தி.மு.க

**அ**.தி.மு.க. தலைமை நிலையத்தில் இப்போது மிகவும் சுறுசுறுப்பாக இருப்பது செங்கோட்டையன், ஓ.எஸ். மணியன் மற்றும் சுலோசனா சம்பத் ஆகியோரைக் கொண்ட மூவர் அணி!

ஜெயலலிதா அறிமுகப்படுத்தியிருக்கும் "இதயம் காப்போம்" திட்டத்தின் பலனை



யாராவது தேவையானவர் பெற வேண்டுமென்றால், முதலில் அவர் லோக்கல் ஒன்றியச் செயலாளர் சிபாரிசைப் பெற வேண்டும். அவர் மூலம் மனுவைத் தலைமை நிலையத்துக்கு அனுப்ப வேண்டும். அதை மூவர் அணி பரிசீலித்து போயஸ் தோட்டத்துக்கு அனுப்பி வைக்கிறது. கட்சிக்காரர்கள் என்று இல்லாமல் உண்மையாகவே இதய அறுவை சிகிச்சைத் தேவைப்படுபவர்களுக்கு அவர்கள் எந்தக் கட்சியைச் சேர்ந்தவர்களென்றாலும் உதவி செய்யப்படுகிறது. இந்தத் திட்டம் முழுக்க, முழுக்க கட்சி நிதியில்தான் நடத்தப்படுகிறது.

துவங்கிய சில மாதங்களிலேயே உதவி பெறுபவர்களின் எண்ணிக்கை ஆயிரத்தைத் தொட்டு விட்டதாம். அதிகபட்சமாக ஐம்பதாயிரம் ரூபாய் வரை உதவி செய்கிறார்கள். சில கேஸ்களில் ஆபரேஷனுக்கு ஆகும் முழுத் தொகையையும் கொடுக்கிறார்கள். இந்த மனு பரிசீலனைச் சம்பந்தமாக எந்தவிதமான தாமதமும் இருக்கக் கூடாது என்று அம்மா உத்தரவிட்டிருக்கிறாராம்.

இப்போது தலைமை நிலையத்தில் 'இதயம் காப்போம்' உதவி மனுக்களுக்குப் போட்டியாக வந்து குவிவது, மாநகர, மாவட்ட கட்சி நிர்வாகிகளைப் பற்றிய மனுக்கள்தான். நிர்வாகிகளின் ஊழல் போக்கு குறித்து மட்டுமல்லாமல், அவர்களது ஒழுக்கத்தைப் பற்றி வரும் மனுக்கள்தான் பெரிய தலைவலி. இதில் மற்றவரைக் கவிழ்க்க போடப்படும் மொட்டை பெட்டிஷன்களும் உண்டு. முதலில் மூவர் அணி ரகசியமாகவும் நேரடியாகவும் பரிசீலிக்கிறது. இந்தக் கீழ் கோர்ட் விசாரணை முடிந்தபின்தான் அம்மா கோர்ட்டுக்குச் செல்கிறது. அப்புறம் அவரது முடிவுதான்.

– ஸ்ரீநிவாசன்

படங்கள்: ராஜன்

# சீ.பீ.எம்.

ஒரு கூட்டுக் குடும்பம் எப்படியிருக்கும்? அப்படித்தான் இயங்கிக் கொண்டிருக்கிறது மார்க்ஸிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் தலைமை அலுவலகம். இங்கு நடப்பது "கம்யூன்" வாழ்க்கை. ஆனால் மைனஸ் பெண்கள். சி.பி.எம்.மின் அகில இந்திய செயலாளர் சுர்ஜித்திலிருந்து, துவங்கி, வருடங்களுக்கு முன்பு நிறுத்திவிட்டார். அவர் நிறுத்தியவுடன் மற்றவர்களையும் விடச் சொல்லி வற்புறுத்தினார். அவரது முயற்சி காரணமாக உமாநாத், டி.கே. ரங்க ராஜன், சௌந்தர்ராஜன் ஆகியோர் புகை பிடிப்பதை விட்டு விட்டார்கள். இப்போது எங்கள் அலுவலகத்தில் யாரும் சிகரெட் பிடிக்கக் கூடாது" என்று சொல்கிறார் அலுவலகப் பொறுப்பாளரான ஜவ ஹர். எந்த நேரத்திலும் குறைந்த பட்சம் ஐந்து பேர்களாவது அலுவல கத்தில் இருக்கிறார்கள். மாநில செயலாளர் வரத ராஜனும் இங்குதான் இருக்கிறார். கூட்டுவது, சமைக்க உதவி செய்வது பாத்திரம் கழுவுவது என்று பல வேலைகளை யும் தோழர்களே பார்த்துக் கொள்கிறார்கள். அவரவர் துணிகளை அவர்களே தோய்த்துக் கொள்ள வேண்டும்.



வெளியூர் பிரமுகர்கள் யார் வந்தாலும் இங்கேதான் தங்குகிறார்கள். இதில் ஜோதி பாசு மட்டும் விதிவிலக்கு. இங்கே, நாயனார், பிரகாஷ் கரத், சீதாராம் எச்சூரி என்று பல முக்கியப் பிரமுகர்கள் தங்கினாலும் எல்லோருக்கும் ஒரே விதமான உணவுதான். செயற்குழு போன்ற கூட்டங்கள் நடக்கும் போது ஹோட்டலில் ஆர்டர் கொடுப்ப தில்லை. இங்கேயே சமைத்துப் போட்டு விடுகிறார்கள். அந்த சமயத்தில் முக்கியப் பிரமுகர்களும் சமையல்காரருக்குத் துணை யாக களத்தில் குதித்து விடுகிறார்கள்.

"ஒரு காலத்தில் செயின் ஸ்மோக்கராக இருந்தவர் சங்கரையா. ஆனால் பத்து

மாடியில் மட்டும் ஏ.ஸி. அறைகள் உண்டு. வசதிக்கு என்பதைவிட கூட்டம் நடக்கும்போது சத்தம் வெளியே கேட்கக் கூடாது என்பதற்காகத்தான் ஏ.ஸி. அறைகளாம்!

மூன்று கட்டிடம் தள்ளி சி.பி.எம்.மின் அரசியல் எதிரியான பா.ஜ.க. அலுவலகம் இருக்கிறது. "கொள்கை ரீதியாக எதிர்ப் புறத்தில் இருந்தாலும் தனிமனித உறவுகள் தடையில்லாமல் தொடருகின்றன. அவர்கள் அலுவலகத் திறப்பு விழாவிற்குக் கூட அழைப்பு கொடுத்தார்கள். சென்று வந் தோம்" என்கிறார் ஜவஹர். சபாஷ்!

# காங்கிரஸ்

மூப்பனார் மறைவுக்குப் பின் டல்லடித்துக் கொண்டிருந்த சத்திய மூர்த்தி பவனுக்கு மறுபடியும் மவுசு வரப் போகிறது. த.மா.கா. காங்கிரஸுடன் இணைந்த நிலையில் கட்சி தலைமை அலுவலகம் இங்கிருந்து தான் செயல்படப் போகிறது. 1950களில் ஆவடி காங்கிரஸ் மாநாடு நடத்தி முடித்த பின் கையில் இருந்த பணத்தில் காமராஜ் வாங்கியதுதான் சத்தியமூர்த்தி பவன் இருக்கும் மனை மற்றும் தேனாம் பேட்டை காங்கிரஸ் வளாகம். இதில் காமராஜுக்குப் பேருதவியாக இருந்தவர் ஹிந்து கஸ்தூரி ஸ்ரீநிவாசன். தமிழ்நாடு காங்கிரஸ் அறக் கட்டளையால் நிர்வகிக்கப்படுகின்றவை இந்தச் சொத்துக்கள். ஒன்றுபட்ட காங்கிரஸாக இருந்த வரை பிரச்னை ஏதும் இல்லை. பிளவுக்குப் பின் இந்திரா காங்கிரஸ் தேனாம்பேட்டையில் இயங்கி வந்தது. சில வருட காலம் மத்திய அரசு அலுவலகம் சத்தியமூர்த்திபவனில் இயங்கி வந்தது. வாழப்பாடியார் தலைவராக வந்தவுடன் மீண்டும் அலுவலகம் சத்திய மூர்த்தி பவன் வந்தது.



குமரி அனந்தன் தலைவராக இருந்தபோது கட்டிடத்தின் உட்புற வாயிலைக் கொஞ்சம் இடம் மாற்றினார். இதுதவிர வாசல் கேட்களும் இடம் மாற்றப்பட்டன. மறுபடி த.மா.கா.வின் கோட்டையானபோது மீண்டும் வாசல் கேட்டுக்கள் இடம் மாற்றப் பட்டன (வாஸ்து!)

சத்தியமூர்த்திபவனில் தரைத் தளத்துக்கு கீழே பாதாள தளம் ஒன்று இருப்பது பலருக்குத் தெரியாது. பழைய குப்பைகளைக் கொட்டி வைக்கும் கிடங்காக மாறிவிட்டது இது. இந்தப் பாதாள தளத்தைச் சுத்தப் படுத்தி ஏ.ஸி. செய்து நூல் நிலையம் அமைக்கலாம் என்ற கருத்து மூப்பனாருக்குச் சொல்லப்பட்டது. அவரும் ஆர்வமாக இருந்தார். மூப்பனாருக்கு உடல் நலம் சரியில்லாதபோது விட்ட அமைக்கலாம் என்று ஏற்பாடானது. "கட்சிப் பணத்தை வேஸ்ட் செய்ய வேண்டாம்" என்று தடுத்து விட்டார் மூப்பனார். 1996ல் த.மா.கா. சத்திய மூர்த்தி பவனில் செயல்படத் துவங்கிய போது, காங்கிரஸ்காரர்கள் அதை கைப் பற்றப் போவதாக பரபரப்பாகச் செய்தி அடி பட்டுக் கொண்டிருந்தது. அப்போது, அறக்கட்டளையோடு த.மா.கா. ஒரு குத்தகை ஒப்பந்தம் போட்டுக் கொண்டது. எனவே இப்போதைய நிலையில் ஒன்றுபட்ட காங்கிரஸ் அலுவலகம் இங்கு செயல்பட இருந்தாலும் இன்னமும் சிறிது காலம் எல்லாம் முறையாக மாற்றப்படும்வரை த.மா.கா. பெயரிலேயேதான் கட்டிடம் இருக்கும். மூப்பனார் இருக்கும்போது அவர் போட்ட முக்கியமான கட்டளை. "இரவு யாரும் தங்கக் கூடாது" என்பது தான்.

# சி.பி.ஐ.




சென்னை தியாகராய நகர் செவாலியே சிவாஜி சாலையிலுள்ள இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் தலைமை அலுவலக கட்டிடத்தின் நுழைவாயிலில் தரையில் கண்ணாடிப் பதிக்கப்பட்டு இருக்கிறது. கண்ணாடிக்கு கீழே நான்கு ஜோடி பாதங்கள். யாருடையவை இந்தப் பாதங்கள்? "பிரபல நாட்டியக் கலைஞர் உதயசங்கருக்குச் சொந்தமான இடம் இது. அவர் பலகாலம் இங்கு நடனப் பள்ளி நடத்திக் கொண்டிருந்தாராம். கட்டிடத் துக்கு அறுபது வயது இருக்கும். '1970களில் இந்தக் கட்டிடமும் அதை ஒட்டிய மனையும் விற்பனைக்கு வந்தபோது, எங்கள் பாராளுமன்ற உறுப்பினரான ரேணு சக்கரவர்த்தி மூலம் கொஞ்சம் குறைந்த விலைக்குத்தான் வாங்கினோம்'' என்று பழைய வரலாற்றைச் சொல்கிறார் மாநிலச் செயலாளரான நல்லகண்ணு. உதயசங்கர் 'கல்பனா' என்ற திரைப்படமும் எடுத்திருக்கிறார். உதயசங்கர் கட்டிடத்தை விற்றபோது போட்ட ஒரே கண்டிஷன் தரையில் பதித்துள்ள நான்கு ஜோடி பாதச் சுவடுகளும் பாதுகாக்கப்பட வேண்டும் என்பது தான். எனவேதான் கண்ணாடி பாதுகாப்பு. உதயசங்கர், அவரது மனைவி, அமலா சங்கர், மகள் மமதா சங்கர், மகன் ஆனந்தா சங்கர் ஆகியோரது பாதங்கள்தான் அவை. இந்தக் கட்டிடத்தை சி.பி.ஐ. வாங்க யத்தனிக்கும்போது மற்றொரு பிரபல நடிகரும் கொஞ்சம் அதிகத் தொகை கொடுத்து வாங்க முயன்றாராம். ஆனால் கம்யூனிஸ்ட் இயக்கத்தின்மேல் ஈடுபாட்டுடன் இருந்த உதயசங்கர் பணத்தைப் பற்றிக் கவலைப்படாமல் சி.பி.ஐ.க்கு விற்று விட்டாராம். உதயசங்கர் இறந்தபோது, சத்தியஜித்ரே வரைந்த அவரது படம் ஒன்றையும் சட்டம் போட்டு மாட்டியிருக்கிறார்கள்.




"அவரது, மனைவி, மகள், மகன் ஆகியோர் சென்னைக்கு வரும்போதெல்லாம் இங்கு வந்து தங்கி, மலரும் நினைவுகளில் பெருமிதம் கொள்வார்கள்'' என்றார் நல்லகண்ணு. இங்கு உள்ள தென்னைமரம் ஒன்றில் ''ஆனந்தா'' என்று செதுக்கப்பட்டிருக்கிறது. கேட்டில் உதயசங்கர், அமலா சங்கர் என்ற பெயர்ப் பதிக்கப்படகல்லையும் எடுக்காமல் அப்படியே விட்டு விட்டார்கள். ○

# திருமந்திரம்

## மூலமும் தெளிவுரையும்

## 1800 பக்கங்கள்

## 3 தொகுதிகள் ரூ.450




தமிழ் இலக்கியப் பரப்பில் பல்லாயிரம் பாடல்கள் உண்டு. அவற்றில் உள்ள எண்ணற்ற அடிகள் அனைத்தையும் யாரும் எப்போதும் நினைவில் வைத்திருப்பதில்லை. ஆனால் சில அடிகளை நாம் மறப்பதே இல்லை. 'தமிழ்' என்றவுடனே நினைவுக்கு வரும் மிகச் சிறந்த அடிகள்

"ஒன்றே குலம் ஒருவனே தேவன்"

"யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்"

என்பவை. இவற்றை அருளியவர் சித்தரும், சிவயோகியுமான திருமூலர் ஆவார். இவர், நந்தியிடம் உபதேசம் பெற்றவர். தமிழகத்தில் ஒரு ஞானப்பரம்பரையை உருவாக்கிய சிவயோகி. தில்லையில் பதஞ்சலி முனிவருடன் இறைவனின் திருக்கூத்தைக் கண்டு களித்தவர்; திருவாவடுதுறைக் கோயிலில் இருந்த ஓர் அரசமரத்தடியில் மூவாயிரம் ஆண்டு சிவ யோகத்தில் அமர்ந்து, ஆண்டுக்கு ஒரு பாடலாக மூவாயிரம் பாடல் பாடியவர். இந்த 3000 பாடல்களைக் கொண்ட இத் திருமந்திரம், சைவத் திருமுறைகளுள் பத்தாம் திருமுறையாகும்.

சைவ சித்தாந்தத்தின் அரிய கருத்துக்கள் எளிய சொற்களில் விரைவாகவும், இனிமையாகவும் எப்படி வெளிவருகின்றன என்பதைக் காணுங்கள்.

திகைக்கின்ற சிந்தையுள் சிங்கங்கள் மூன்று
நகைக் கின்ற நெஞ்சகள் நரிக்குட்டி நான்கு

இதில் அமைந்துள்ள தத்துவக் கருத்துக்கள் எண்ணி எண்ணி மகிழத்தக்கன.

திருமூலரின் தலையான கொள்கை அன்பே சிவம் என்பதாகும். இதனை அறியாதார் அறிவிலார் என்பது அவருடைய கருத்து.

அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவது ஆரும் அறிகிலார்

சிவன் அன்பு வடிவானவன் என்னும் இவ்வுண்மையை வற்புறுத்தும் இத் திருமந்திரமே சைவசித்தாந்த முதல் நூலாகும். இதனைக் கொண்டே பதினான்கு சித்தாந்த நூல்களும் எழுந்தன. சித்தாந்தம் என்ற தொடரை முதல் முதலில் வழங்கியது இந்நூல்.

இந்நூலில் அறம்
பேசப்படுகிறது. தத்துவம்
பேசப்படுகிறது. சமயம்
பேசப்படுகிறது. எல்லாவற்றுக்கும்
மேலாக இதன் ஆசிரியர்
யோகத்துக்குத் தனி இடம்
கொடுத்துள்ளார். அதாவது,
இந்நூலில் இல்லாத எப்பொருளும்
இல்லை எனலாம்.

தோத்திரமாகவும், சாத்திரமாகவும்,
வாழ்க்கை நூலாகவும் அமைந்த
'திருமந்திர' நூலினை அனைவரும்
கற்றுணர வேண்டும் என்ற நோக்கில்
தெளிவான உரையோடு
வெளியிடுகிறோம். மகாயோகியான
திருமூலரின் சிந்தனைகளைத் தாங்கிய
திருமந்திரம் அனைவர் கையிலும்
திகழ்வதாக!

---

இந்நூலினைத் தபாலில் பெற,27.8.2002 க்குள் கடிதம் எழுதுக. மூன்று தொகுதிகளையும் V.P.P. யில் அனுப்புகிறோம். சலுகை விலை, தபால் மற்றும் கட்டுச் செலவு சேர்த்து ரூ.250 மட்டும் செலுத்தி நூல்களைப் பெற்றுக் கொள்ளலாம். நேரில் 27.8.2002க்குள் ரூ.225 மட்டும் செலுத்தி நூலினை உடனே பெற்றுக் கொள்ளலாம். நேரம் : காலை 10 மணி முதல் இரவு 8 மணி வரை. இடைவேளையின்றி. ஞாயிறு மற்றும் தமிழக அரசு விடுமுறை நாட்களில் விற்பனை இல்லை.


கடிதம் எழுத வேண்டிய முகவரி :
**வர்த்தமானன் பதிப்பகம்**
15, சரோஜினி தெரு, தியாகராயநகர், சென்னை - 17.
(உஸ்மான் சாலை - கீதாஞ்சலி ஹோட்டல் அருகில்)
☎ : 435 0561.


**இச்சலுகை 27.8.2002 வரை மட்டுமே !**



பெண் சுதந்திரம் பற்றியப் பேச்சு இன்று பரவலாக கேட்கிறது. அதிகாரமும் உரிமையும் மறுக்கப்படுவதை எதிர்க்கும் விதமாக பெண்களின் குரல் இன்று ஓங்கி ஒலிக்கிறது. ஆனால் இந்தச் சுதந்திரம் சரியான பாதையில்தான் செல்கின்றதா? விவாதிக்கிறார்கள் இங்கே.



• வெண்ணிலா

"பெண் சுதந்தரம்' என்றெல்லாம் இனியும் பேசாதீர்கள் என சலித்துக் கொள்கின்றனர் அநேக ஆண்கள். மனைவியைக் கை நீட்டி அடிப்பது, பிள்ளைகளிடம் பேதம் பார்ப்பது, இவையெல்லாம் கணிசமாக குறைந்

• பாரதி



# பெண்ணியம் என்பது பிரக்ஞை!

• சாருநிவேதிதா

இருந்தாலும், பெண்களைப் பிணைத்திருக்கிற அடிமைச் சங்கிலி அரூபமாக இன்னும் இருக்கத்தான் செய்கிறது''

என்கிறார் கவிஞர் வெண்ணிலா.

வீட்டு வேலைகளில் பங்கீடு, அலுவலகம் செல்ல அனுமதித்தல், புடைவை, நகைகள் சுயமாக வாங்கிக் கொள்ளும் சின்ன சந்தோஷம், இவையெல்லாம் சுதந்திரத்தின், குடும்பங்கள் ஜனநாயகப்படுத்தப்பட்டதின் குறியீடுகளாகப் பேசப்படுகின்றன. இவையா உண்மையான அடையாளங்கள் என்ற கேள்வியையும் வைக்கிறார் அவர்.

''பயணத்தில் வெறித்துப் பார்க்கும் கண்களைச் சந்திக்காமல் கடக்க முடிகிறதா? சுயமாக திறமைகளை மதிப்பிட்டு வாழ்வைத் துணையின்றி அணுக முடிகிறதா? ஏதோ ஒரு கண்காணிப்பிற்குள், கட்டுப்பாட்டுக்குள் இருந்து கொண்டிருக்கிறோம் என்ற மனத்தடையை விலக்க முடிகிறதா...? இத்தனை நுட்பமான சங்கிலிகள், என்று அறுந்தொழிந்து பெண் என்ற உணர்வற்று, மனிதர் என்ற உணர்வோடு வாழ முற்படும் காலமே, பெண் சுதந்திரம் சாத்தியமாகும் காலம். அதற்கான கோரிக்கைகளும் போராட்டமும் இன்னும் வலுப்பட வேண்டும்'' என்கிறார் அவர்.

இந்த விஷயத்தில் பிரான்ஸில் தமக்கு நேர்ந்த ஓர் இனிய அனுபவத்தைச் சொல்கிறார் எழுத்தாளர் சாருநிவேதிதா.



• இந்திரன்

"பிரான்ஸின் புறநகர்ப் பகுதியில் கடைசி ரயில் பிடித்து நண்பரின் வீட்டுக்குச் சென்று கொண்டிருந்தோம். நள்ளிரவு ஒரு மணி. கடும் குளிர். மைனஸ் ஐந்து டிகிரி. தெருவில் யாருமில்லை. இருபது வயது மதிக்கத்தக்க பெண் ஒருவர் நடந்து வந்து கொண்டிருந்தார். எதிரில் வந்த என்னை நிறுத்தி 'சிகரெட் இருக்கா?' என்றார். கொடுத்தேன். பற்ற வைக்க முடியுமா என்றார். பற்ற வைத்தேன். பிறகு போல 'தாங்ஸ்' என்று சொல்லிவிட்டு நடந்தார்.

இங்கே புகைப்பதைக் குறிப்பிடவில்லை. ஆனால் நடுஇரவில் சர்வ சகஜமாக நடந்து போக முடிகிறது அந்தப் பெண்ணால். ஒரு தயக்கமின்றி, வெட்கமின்றி சிகரெட் கேட்க முடிகிறது. இது இங்கு சாத்தியமா? இதுதான் காந்தி சொன்னச் சுதந்திரம் என்று நினைக்கிறேன்" என்கிறார் சாரு!

பெண் அடிமைத்தனத்திற்குத் துணை போவதாக சினிமா, டீ.வி மீது குற்றம் சுமத்துகிறார் அவர்.

"பெண் சுதந்திரத்திற்கு மிகப் பெரிய தடையாக உள்ளவை சினிமாவும், டீவியும் தான். சமூகத்தால் சட்டத்தால் எதெல்லாம் தடை செய்யப்பட்டுள்ளதோ அதைச் சர்வ சாதாரணமாகச் செய்கிறார்கள்.

"பெண் அடிமைத்தனத்தைக் கடுமையாக டீ.வி தொடர்கள் பிரசாரம் செய்கின்றன. பெண்விடுதலை பேசுவோர் டீ.வி தொடர்களைப் புறக்கணிக்க வேண்டும்" என்ற கோரிக்கையையும் வைக்கிறார் சாரு நிவேதிதா.



"முன்பு நம் அம்மாக்களுக்கும் பாட்டிகளுக்கும் இருந்த சுதந்திரம் இன்று கம்மியாகிவிட்டது. காரணம் பழைய தலைமுறை பெண்களுக்குக் குடும்பப் பராமரிப்பு மட்டுந்தான். இன்று பொருளீட்டும் வேலையோடும் குடும்பப் பொறுப்பும் சேர்த்து ஓவர் லோடாகியிருக்கிறது பெண்களுக்கு" என்கிறார்கள்.

**சா**ரு நிவேதிதாவை மறுக்கிறார் கவிஞர் இந்திரன்.

"சிகரெட் பிடிப்பதும் ஸ்லீவ்லெஸ் போடுவதும் அல்ல பெண்ணியம். பெண்ணியம் என்பது பிரஞ்கை. ஆண் பெண் பேதம் பாராட்டுகிற ஜெண்டர்பயஸ் இல்லாமல் சிந்தித்து ஆரோக்கியமாகச் செயல்படும் ஒரு பெண்ணைத்தான் நான் பெண்ணியவாதியென்று சொல்வேன். இப்படிப்பட்ட பெண்ணியவாதிகள் நகரத்தைக் காட்டிலும் கிராமத்தில்தான் அதிகமாக இருக்கிறார்கள்" என்று சொல்லும் அவர், அதற்கான உதாரணத்தையும் சொல்கிறார்.

''ஒன்றுக்கும் உதவாதக் குடிகார கணவனை முறியடித்துக் கொண்டு வயல் வேலைக்குப் போய் குழந்தைகளைப் படிக்க

## எங்கேயோ கேட்ட கதை

ஒரு கோவில் திருவிழாவில் வயலின் கச்சேரி நடந்து கொண்டிருந்தது. வித்வான் அற்புதமாக ஆலாபனை செய்து கொண்டிருந்தார்.

வயலின் கம்பிகளில் வில்லை மேலும் கீழுமாக சரசரவென்று லாகவமாக இழுத்து இழுத்து இனிமையாக இசைத்துக் கொண்டிருந்தார்.

இதைப் பார்த்த கிராமத்து ஆள் ஒருவன் மடியில் இருந்த பேனாக் கத்தியை வெளியே எடுத்தபடி, மேடைக்கு அருகே போய் கத்தியை நீட்டினான்.

அதைப் பார்த்த வயலின் வித்வான் பயத்தில் நடுங்கி மெல்ல தைரியத்தை வரவழைத்துக் கொண்டு அவனை அருகில் அழைத்தார்.

''என்னப்பா விஷயம் ஏன் கத்தியோடு வந்து



நிற்கிறாய்?'' என்றார் பரிதாபமாக.

அவன் சொன்னான். ''இத்தனை நேரம் நீ இழுத்து இழுத்து உன் கையில் இருக்கிற கம்பி அறுவமாட்டேங்குதே. இந்தக் கத்தி ஷார்ப்பா தீட்டினது இதுனால நறுக்கு. ஒரே வெட்டில் துண்டு பண்ணிரும்'' என்றான்.

தொகுப்பு: க. மூர்த்தி

வைக்கும் பெண்களைக் காட்டிலும் பெரிய பெண்ணியவாதி யாராக இருக்க முடியும்? பெண்ணியம் ஒரு சிந்தனையாக மட்டுமில்லாமல் வாழ்க்கையாகவும் இருக்கிறது."

பெண்களுக்கு எதிராக எழும் வன்முறைகள் குறித்து இன்று எழுந்திருக்கிற குரல்கள் பெண்களின் குரலாக இருப்பதே வரவேற்கக்கூடிய ஒன்று என்கிறார் இந்திரன்.

"பெண் சுதந்திரம் ஒரு கான்செப்ட். இதற்குப் பல பரிமாணங்கள் இருக்கிறது. உடற்கூறு, உளவியல், சமூக அமைப்பு, பண்பாடு, கலாசாரம் என்று பல தளங்களில் யோசிக்க வேண்டிய விஷயம்" என்கிறார் பச்சையப்பன் கல்லூரி பேராசிரியை பாரதி.

"பெண்ணடிமைத்தனம் என்று குற்றம் சாட்டுகிறார்கள். ஆனால் இந்தப் பெண்களுக்குக் கொஞ்சம் இடம் கொடுத்தாலும் ஆதிக்கம் செய்கிறார்கள். இவர்களா அடிமைகள்? என்று குமுறும் குரல்களையும் பரவலாகக் கேட்கிறோம். (குறிப்பாக தொலைக்காட்சியின் விவாத அரங்குகளில்) அடிமைத்தனம் என்றால் எப்போதும் கைகட்டி வாய் பொத்தி நிற்பது என்று யார் சொன்னார்கள்? சமூக அழுத்தத்திற்கு ஆளான எந்த மனித சக்தியும் சந்தர்ப்பம் கிடைக்கும்போது அதற்கான பக்குவத்துடன் செயல்படாது. ஆதிக்க சக்தியாகத்தான் விகார உருவம் எடுக்கும். இது அடிமைத்தனத்துக்கே உரிய இயல்பு. பக்குவம் மெதுவாகத்தான் வரும்! அடிமைகள் எவருமே அடுத்தவரின் சுதந்திரத்தை மதிக்க மாட்டார்கள். எனவேதான் இங்கே ஆண்கள் சுதந்திரமாக இயங்க வேண்டுமானால் பெண்களும் சுதந்திர உணர்வை அடைந்தாக வேண்டும். அதனை உறுதி செய்வதை விட்டு விட்டு ஆணாதிக்கம் என்றாலே கோபப்படுவதும் பெண்ணுக்குப் பெண்ணேதான் எதிரி என்று பதிலடி கொடுப்பதும் ஒருபோதும் உதவாது.

"பெண் விடுதலை இயக்கம் என்பதை, பெண் விடுதலை பேசும், எழுதும் பெண்களுடன் சேர்த்துக் குழப்பிக் கொள்ள வேண்டியதும் அவசியமில்லை. இவர்கள் வேறு கிரகத்திலிருந்து வந்து குதித்தவர்கள் அல்ல. இந்தச் சமூக அழுத்தத்திலிருந்து உருவானவர்கள்தான். இவர்களையே எப்போதும் முன்னுதாரணங்களாக எடுத்துக் கொள்ள வேண்டியதும் அவசியமில்லை. விடுதலை உணர்வை படிப்பறிவே இல்லாத சாதாரணப் பெண்களிடம்கூட பார்க்க முடியும். முன் எப்போதையும்விட பெண் விடுதலை இயக்கத்தினர் மீது காட்டமான விமர்சனங்கள் ஒலிக்கத் தொடங்கியிருக்கிறது. இப்போது பொறுப்பற்ற தனி நபர்களின் செயல்களைச் சுட்டிக் காட்டும் போதெல்லாம் பெண் விடுதலை இயக்கத்தின் மீது பழி போட்டுப் பேச எவரும் தயங்குவதில்லை. சுதந்திரம் என்பது பொறுப்புடன் கூடியது, சமூக அக்கறைக் கொண்டது என்று உணர்ந்துகொண்டு செயல்படும் பெண்நிலைவாதிகளும் இங்கே இருக்கிறார்கள். அதையும் கவனத்தில் எடுத்துக் கொள்ள வேண்டும்.

"இயக்கத்தை விடுங்கள். பெண்களின் சமூக பார்வை விசாலமடையவும், பெண்களைக் குறித்த ஆண்களின் பார்வை சகஜமடையவும் நமது கல்வி முறையில் சில மாற்றங்களைக் கொண்டு வந்தாலே போதும். சமத்துவம் சுலபமாகிவிடும்!'' என்கிறார் இவர்.

— அப்பு, சுந்தரா

உ

சிவமயம்

தஞ்சை மாவட்டம், திருவிடைமருதூர் வட்டம், பாஸ்கரராஜபுரம்,

## ஸ்ரீ ஆனந்தவல்லி அம்பாள் ஸமேத ஸ்ரீ பாஸ்கரேஸ்வரசுவாமி ஆலய

# மஹா கும்பாபிஷேகம்.

பல்வகை வளமும் பாங்குற அமைந்த சோழவளநாட்டில் தென்திசையில் புண்ணிய நதியாம் காவேரியின் வடபாகத்தில் திருவாலங்காடு எனும் திருப்பதியின் எதிர்கரையில் அமைந்துள்ள **பாஸ்கரராஜபுரம்** என வழங்கும் **பாஸ்கரபுரக்ஷேத்திரம்** பாரத பூமி செய்த தவப்பயனாம் 17-ம் நூற்றாண்டில் மஹாராஷ்டிரத்தில் அவதரித்து வாரணாசியில் கல்வி பயின்று வேந்தாந்த மீமாம்ஸா வித்யாகரண நியாய காவ்யா ஸ்தோத்திர பெருநூல்களையும் **ஸ்ரீ வித்யா உபாஸனாகரமங்களையும்** அருளிச் செய்தவரும் ஜகன்னாத பண்டிதர் முதலிய பல சிஷ்யர்களைக் கொண்டவரும் **ஸ்ரீ ஆதிசங்கரபகவத் பாதாளுக்கு** பின் ஸ்ரீ வித்யின் பெருமையை நிலை நாட்டியவருமான **ஸ்ரீ பாஸ்கரராயரால்** நிர்மாணித்து பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கிற **ஸ்ரீ ஆனந்தவல்லி அம்பாள் ஸமேத ஸ்ரீ பாஸ்கரேஸ்வர ஸ்வாமிக்கு** மற்றபடி ஆலயத்தில் எழுந்தருளியிருக்கும் **ஸ்ரீ மஹா கணபதி ஸ்ரீ தண்டபாணி ஸ்ரீ ஓங்காரேஸ்வரர், ஸ்ரீ விசாலாக்ஷி ஸமேத ஸ்ரீ விஸ்வநாதர், ஸ்ரீ ஜீவன் முக்தீஸ்வரர், ஸ்ரீ மீனாட்சி சுந்தரேஸ்வரர், ஸ்ரீ லெக்ஷ்மி நாராயணர், ஸ்ரீ தெக்ஷிணாமூர்த்தி, ஸ்ரீ சண்டிகேஸ்வரர் முதலிய பரிவாரங்களுக்கும், ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதித் ஜகத்குரு ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகள்** அவர்கள் **ஸ்ரீ விஜேயேந்திர சரஸ்வதி சுவாமிகள்** அவர்களின் பூரண அநுக்கிரஹத்துடன் நாளது சித்ரபானு வருடம் ஆவணி மாதம் 6ம் தேதி தொடங்கி 10ந் தேதி (26.8.2002) திங்கட் கிழமை உத்திரட்டாதி நக்ஷத்திரம் கூடிய சுபதினத்தில் காலை 9.30 மணிக்குமேல் 10-மணிக்குள் துலா லக்னத்தில் **அஷ்டபந்தன மஹா கும்பாபிஷேகம்** நடைபெற உள்ளதால், அன்பர்கள் தங்களால் இயன்ற பொருளுதவி செய்து கும்பாபிஷேகத்தை கண்டுகளித்து **ஸ்ரீ பாஸ்கரேஸ்வரஸ்வாமியின்** அருளை பெறுமாறு கேட்டுக் கொள்கிறோம்.

இப்படிக்கு,

**G. ராமச்சந்திரன்,**

**S. கணபதி** M.Sc., சென்னை.

மற்றும் **கிராமவாசிகள்**

பாஸ்கரராஜபுரம் & மஹாராஜபுரம்

பாஸ்கரராஜபுரம்
1.7.2002

திருக்கோயில் ஆய்வாளர்
**திருமதி S. பிரேமா,**

**குறிப்பு:** ஆவணி மாதம் 11ந் தேதி (27.8.2002) முதல் 45 தினங்களுக்கு **மண்டலாபிஷேகம்** நடைபெறும். பக்தர்கள் கலந்து கொண்டு சிறப்பிக்க வேண்டுகிறோம்.

**நன்கொடைகளை அனுப்ப வேண்டிய முகவரி: G. ராமச்சந்திரன்,** பாஸ்கரராஜபுரம், திருவாலங்காடு அஞ்சல், மயிலாடுதுறை (Rms) 609 810. ☎ : 04364 - 232342

ஸ்டாப்!
நிறுத்து;
திரும்பிப் போ....

ஏற்கனவே எல்லாரும்
போன ரூட்லதானே
போறேன். வண்டியை
விடுங்க....

பெட்ரோலிய துறை
ஊழல்

HIGHLY INFLAMMABLE



# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா
- பாரதியார்.

## ராம் அநியாயக்!

பெட்ரோலியம் துறை அமைச்சர் ராம் நாயக் ராஜினாமா செய்ய வேண்டும் என்று எதிர்க் கட்சியினர் கேட்பதில் தவறே இல்லை. பெட்ரோலிய பொருட்கள் விற்பனை உரிமை வழங்கப்பட்டதில் மிகப் பெரிய ஊழல் நடந்திருப்பது வெளிச்சத்துக்கு வந்துள்ளது. அனேகமாக எல்லா விற்பனை உரிமைகளும் பி.ஜே.பி.யினருடைய சொந்த பந்தங்களுக்குத் தான் வழங்கப்பட்டுள்ளன. தமிழ்நாட்டில் பா.ம.க. சார்ந்தவர்களுக்கு அடித்தது அதிர்ஷ்டம்.

இந்த உண்மை வெளியானதும் உரிமங்கள் அனைத்தையும் (2000 ஆண்டுக்குப் பிறகு வழங்கப்பட்டவை) ரத்து செய்ய உத்தர விட்டுவிட்டார் பிரதமர். ஆகவே, நாயக் ராஜினாமா செய்வதுதான் முறை.

டீலர்களைத் தேர்வு செய்யும் வாரியம் மூலமாகத்தான் அனைத்து உரிமைகளும் வழங்கப்பட்டன என்று நாயக் சத்தியம் செய்கிறார். ஆனால், அந்த வாரியங்களில் தலைமை வகித்து வந்த முன்னாள் நீதிபதிகளைப் பதவி நீக்கம் செய்து வீட்டுக்கு



2002 ஆகஸ்ட் 18
சித்ரபானு ஆவணி 2
மலர் : 61
இதழ் : 3

அனுப்பிவிட்டது பெட்ரோலியம் துறை. நடுநிலையாளர்களை நீக்கிவிட்டு யதேச்சாதிகாரம் செலுத்தியிருக்கிறது இந்த அமைச்சகம் என்பது மிகத் தெளிவு. எனினும் ஒரு நீதிபதி இந்த ஊழலை ஆய்ந்து அறிக்கை தர வேண்டும் என்று எதிர்க்கட்சிகள் ஏன் கேட்கின்றன?

ராம் நாயக் பேரில் நீதிமன்ற வழக்கு தொடரப்பட்டு நடைபெறுமானால், அவர் மிகச் சுலபமாகச் சட்டத்தின் ஓட்டைகளில் புகுந்து தப்பித்துக் கொள்வார். பெட்ரோலியம் துறை ஊழலும் வெகு விரைவில் மக்கள் மனங்களிலிருந்து மறைந்து போய்விடும். அதனால்தான் தனி விசாரணை கேட்கின்றன எதிர்க் கட்சிகள்.

இதைப் போன்ற நூற்றுக் கணக்கான ஊழல்களில் கோடிக்கணக்கான ரூபாய் ஆதாயம் அரசியல்வாதிகள் பெறுவதை நாம் மீண்டும் மீண்டும் பார்த்தாகிவிட்டது. இப்போதுகூட பி.ஜே.பி.யினர் இந்தக் கோணத்தில்தான் வாதாடுகிறார்கள்.

'காங்கிரஸ் ஆட்சிக் காலத்தில் மட்டும் இத்தகைய ஊழல் நடக்கவில்லையா?.. அந்த காலகட்டத்தில் வழங்கப்பட்ட விற்பனை உரிமங்களையும் சேர்த்து ரத்து செய்வதுதான் முறை என்கிறார்கள். காங்கிரஸ் செய்த ஊழல்கள் தொடரக் கூடாது என்பதற்காகத்தான் மக்கள் மாற்றுக் கட்சிக்கு வோட்டளித்தார்கள் என்பதை மறந்து, காங்கிரஸ் செய்த தவறை பி.ஜே.பி.யும் செய்யும் உரிமை பெற்றிருப்பதுபோல் பி.ஜே.பி.யினர் வாதாடுகிறார்கள். இத்தகைய வாதம் அபத்தமானது மட்டுமல்ல; 'ஊழல் என்பது வாழ்க்கைமுறை என்பதாக நியாயப்படுத்தும் அபாயகரமான போக்கும்கூட.

இத்தகைய சூழலில்தான் எதிர்க்கட்சி ஆளுங்கட்சி என்ற பாகுபாடு இன்றி இந்தியாவின் அனைத்து கட்சிகளும் சேர்ந்து தேர்தல் கமிஷன் சிபாரிசு செய்த சீர்த்திருத்தங்களைக் கேலிக் கூத்தாக்கியுள்ளன.

லஞ்ச - ஊழல் மட்டுமின்றி, கொலை, கொள்ளை, பாலியல் பலாத்காரம் போன்ற கிரிமினல் குற்றங்களில் ஈடுபட்டவர்கள்கூட அரசியலில் மலிந்துவிட்டதைத் தொடர்ந்து, உச்சநீதிமன்றம் ஓர் ஆணை பிறப்பித்தது.

தேர்தல் விதிமுறைகளைச் சீர்திருத்தி லஞ்ச-ஊழலும் இதர குற்றங்களும் புரிந்தோரை அரசியலினுள் அனுமதியாமல் தடுக்கும்படி தேர்தல் கமிஷனையே கேட்டுக் கொண்டது.




தேர்தல் கமிஷனும் அத்தகைய ஒரு விதிமுறையை இயற்றியது.

உடனே, 'சட்டமியற்ற தேர்தல் கமிஷனுக்கோ நீதிமன்றத்துக்கோ அதிகாரமில்லை; நாடாளுமன்றம்தான் சட்டம் இயற்ற வேண்டும். நாங்க பார்த்துக்கறோம்' என்று நமது எம்.பி.க்கள் தேர்தல் கமிஷன் சிபாரிசுகளை ஒரு மசோதாவாக்கும் பணியில் இறங்கினர்.

அந்த மசோதாவின் இறுதி வடிவத்தைப் போன்ற கேலிக் கூத்து உலகில் வேறு எதுவும் இருக்க முடியாது.

சட்டத்துறை அமைச்சர் அதில் தண்ணீரைக் கொட்டினார் என்றால், இப்போது அனைத்துக் கட்சிக் கூட்டம் அதை மேலும் தடியால் அடித்துவிட்டது.

கொலை, கொள்ளை போன்ற குற்றங்களில் ஈடுபட்டதாக வழக்கு தொடரப் பெற்றவர், தேர்தலில் நிற்கக் கூடாது; தேர்தல் வேட்பு மனுவோடு, சம்பந்தப்பட்டவரின் சொத்து விவரம் இணைக்கப்பட வேண்டும் - இவைதான் தேர்தல் கமிஷன் முக்கியமாக வலியுறுத்திய ஷரத்துகள்.

சட்டத்துறை அமைச்சர் ஜனா கிருஷ்ணமூர்த்தி, நாடாளுமன்ற மசோதாவாக அதைக் கொண்டுவரத் தீர்மானித்து அறிவித்தபோது, இரண்டு பாதகக் குற்றங்கள் செய்தவர் தேர்தலில் நிற்கலாகாது என்பதாக மாற்றி அமைத்தார். அனைத்துக் கட்சிக் கூட்டமோ கொலை - கொள்ளை போன்றவை செய்தவருக்கும் தேர்தலில் நிற்கும் உரிமை உண்டு; அதைப் பறிக்கலாகாது என்கிறது! மேலும், சொத்து விவரத்தை வேட்பு மனுவுடன் சமர்ப்பிக்கத் தேவையில்லை; தேர்தலில் ஜெயித்தபின் அவைத் தலைமையிடம் தெரிவித்தால் போதும் என்பதாகவும் அனைத்துக் கட்சிக் கூட்டத்தில் முடிவெடுக்கப்பட்டிருக்கிறது.

ஒரு பக்கம் பெட்ரோலியம் ஊழல் தொடர்பாக நாயக் ராஜினாமாவைக் கோரி எதிர்க்கட்சிகள் ரகளை செய்கின்றன. மற்றொரு பக்கம், எதிர்காலத்தில் இடையூறின்றி ஊழல்களைத் தொடர அனைத்துக் கட்சிகளும் ஒற்றுமை காட்டுகின்றன.

நமது அரசியல்வாதிகளின் தரம் அதலபாதாளத்துக்குத் தாழ்ந்து போனது என்பதை உணர்த்த இதைவிட வேறென்ன சான்று தேவை!

# நடிப்பு என் துடிப்பு

**— சிலம்பரசன்**

இளைஞனாக இருப்பதால் என்னிடம் 'துடிப்பு' பற்றிக் கேட்கிறீர்கள் என்று நினைக்கிறேன். சிறு வயதிலிருந்தே என் மனத்துக்குள் நெருப்பாக இருக்கிற துடிப்பு, சினிமாவில் நடிக்க வேண்டும் என்பதுதான். ஒருவனுக்கு என்னதான் பின்புலம் இருந்தாலும் அவனுக்குள்ளும் ஒரு துடிப்பு இருக்க வேண்டும். அப்போதுதான் தேர்ந்தெடுத்துக் கொண்ட துறையில் முன்னேற முடியும். எனவே என்னைப் பொறுத்தமட்டில் அக்னியாக என்னுள் ஒளி வீசிக் கொண்டிருப்பது நடிப்பு என்ற துடிப்புதான். ஒரு துறையில் மிகவும் ஆர்வம் காட்டி, துடிப்புடன் முன்னேறும் பலரைக் காண்கிறோம். ஆனால் அவர்களில் பலர் துள்ளுகிறார்கள்; அதன் காரணமாக காணாமல் போய்விடுகிறார்கள். துடிப்பு இருக்க வேண்டும், துள்ளல் மறக்கப்பட வேண்டும்.



குழந்தையின் இதயத் துடிப்பில் அம்மாவின் குரல் கேட்க முடியும். வெளியில் போன மகளைக் காணவில்லை என்று தாய் படும் துடிப்பு பல குடும்பங்களில் காண முடியும். 'அந்தச் செய்தியைக் கேட்டவுடன் துடித்துப் போய்விட்டேன்' என்று துக்ககரமான செய்திகள் வரும்போது சிலர் சொல்வதுண்டு. இளமைத் துடிப்பில் பலர் தவறு செய்துவிட்டு பின்னால் வருந்துவதையும் பார்க்கிறோம். 'ரொம்ப துடிப்பான பையன் இவன்' என்று ஓர் இளைஞரை வேலைக்கு பரிந்துரைக்கும் போது சொல்வார்கள். எனக்கு ஜாக்கி சானின் துடிப்பான பாடலும், நடனமும் பிடிக்கும். துடுக்கு வேறு, துடிப்பு வேறு. துடுக்குத்தனம் பல சமயங்களில் நம்மை மாட்டி வைத்துவிடும். துடிப்பாக இருப்பதுடன், விழிப்பாகவும் இருந்தால் வாழ்க்கையில் வெற்றி நிச்சயம்.

மாடு இழுக்க முடியாத அளவுக்கு பாரத்தை வண்டியில் வைத்து சாட்டையால் மாட்டை அடித்து ஓட்டுவதைப் பார்த்தால் எனக்கு இதயம் துடிதுடிக்கும், படபடக்கும். பள்ளிக்குப் போக வேண்டிய சிறுவர்கள் வறுமை காரணமாகச் சோற்றுக்குப் பிச்சையெடுத்துக் கொண்டு அலைவதைப் பார்த்தால் நெஞ்சம் துடிதுடிக்கும்; இப்படி சமுதாயத்தில் நடக்கும் பல விஷயங்கள் என்னைத் துடிதுடிக்க வைத்தாலும், எனது இப்போதைய நிலையில் பரிதாபப்பட மட்டுமே முடிகிறது. எதிர்காலத்தில் மனத்துக்கு நிறைவாக சமுதாயத்துக்கு ஏதேனும் செய்யும் வாய்ப்பு கிடைக்கும் என்று நம்புகிறேன்.

— கௌசி

# வார்த்தை இல்லாதது...

அங்கே இருந்தால்
ஊற்றெடுக்கும் என
ஒடுங்கினேன் இயற்கைக்குள்

மலைச்சாரல் அருவி
வனம் வானம்
மொட்டு மேகம்
சிற்றோடை சொர்க்கம்

இயற்கையில் எல்லாமே
கவிதைப் பிரவாகம்

பூச் சிரிப்பைச்
சிக்க வைக்க இல்லை
ஒற்றை வார்த்தை

வானவில்லை
வெளிச்சமிடாமல்
உவமை வெளிறியது.

தென்றலின் ஸ்பரிசம்
சிக்கவில்லை சொல்லுக்குள்.
அருவி அட்டகாசத்தில்
அரண்டது அசை.

காட்டுப்பூவின்
கம்பீர வாசனையில்
கருகியது தளை.

கூழாங்கல்லின்
கருப்பை இதம் சுமக்காமல்
மலடானது மொழி.

நதியின் ஏகாந்தத்தில்
நசுங்கியது சீர்.
பனித்துளிப் பிரபஞ்சத்தில்
சிறுத்தது வார்த்தை.

ஆண்டாள் பிரியதர்ஷினி

# முடி அழகு!



ஆண்களுக்குப் பரவாயில்லை. கிராப்புத் தலையை, வகிடு எடுத்து வாரிக் கொண்டால் போதும். பெண்கள் அப்படியா? ஹேர் ஸ்டைலை அவ்வப்போது மாற்றிக் கொள்ளாவிட்டால் அவர்களுக்குப் பிறவிப் பயனே இல்லாமல் போய்விட்ட மாதிரி ஒரு நினைப்பு!

"எம்.ஓ.பி வைஷ்ணவா, எத்திராஜ், டபிள்யூ.ஸி.ஸி., ஸ்டெல்லா மாரிஸ் என்று பல கல்லூரிகளுக்கும் கிட்டத்தட்ட 20,000 படிவங்கள் கொடுத்து ஒரு சர்வே செய்தோம். அதன் முடிவை வைத்துத்தான் 'ஸ்பார்க்கின் கார்டு' உறுப்பினர் திட்டத்தை அறிமுகப்படுத்தினோம்" என்கிறார் 'கன்யா' பியூட்டி பார்லர் லதா மோகன்.

முடியை வெட்டிக் குறைப்பது. ஸ்டைலை மாற்றுவது. முடி நிறத்தையே மாற்றுவது என்று இரண்டு நாள் விழா நடத்தியது 'கன்யா'. இதற்காக, உலகப் புகழ் பெற்ற லோரியால் அழகு நிறுவனத்தைச் சேர்ந்த அதன் க்ரியேடிவ் டிரெயினிங் நிபுணர் மெல்ராய் டிக்ஸன் மும்பையிலிருந்து வந்திருந்தார். லண்டன் ஸேக்ஸ் அகடமியில் முடியழகுப் பயிற்சி பெற்றவர். பன்னிரண்டு வருடங்களாக மற்றவர்களுக்குப் பயிற்சி கொடுத்து வருகிறார்.

"இலவசமாக முடிவெட்டுவோம். கலரிங்குக்கு இருபது சதவிகிதத் தள்ளுபடி உண்டு" என்கிறார் லதா மோகன். (அட, ஆடிக் கழிவு இங்கேயுமா?) "இப்போதான் வீட்டுப் பெண்மணிகளுக்கும், கல்லூரி மாணவிகளுக்கும் தங்கள் முடியை விதவிதமாக அழகுபடுத்திக் கொள்ளுவதில் விழிப்புணர்வு வந்திருக்கிறது" என்கிறார். (ஐயோ, விழிப்புணர்வு வேற எதுலயும் வரலியா?) ஸ்பார்க்கின் கார்டு மெம்பருக்கு, பிற்பகல் ஒருமணி முதல் நான்கு மணி வரையிலான 'பிரேக்' டயத்தில், இருபது சதவிகிதத் தள்ளுபடி உண்டாம். ரெகுலர் டயத்தில்? பதினைந்து சதவிகிதம்தான்.

மெல்ராய் டிக்ஸன் 'கன்யா'வின் பதினைந்து ஊழியர்களுக்குப் பயிற்சி கொடுத்துக் கொண்டே முடிவெட்டினார்.

"நான் பிலிப்பைன்ஸிலுள்ள மணிலாவிலிருந்து வருகிறேன். பூனாவில் என் தலைமுடியை ஒரு வழி பண்ணிவிட்டார்கள். இங்கே வந்தபோதுதான் என் மகள் சொன்னாள். அவள் இங்கே ரெகுலர் கஸ்டமர். இப்போதான் நிம்மதியா, திருப்தியா இருக்கு" என்றார் நீதா ப்ரேம். (மணிலா போனதும், 'கன்யா'வுக்கு ஒரு மக்ஸேஸே விருது வாங்கிக் கொடுத்துருங்க!)

500 ரூபாய் கொடுத்து உறுப்பினர் ஆகிவிட்டால், பத்து ட்ரீட்மெண்ட்டுகள் செய்து கொள்ளலாமாம். ஸ்பார்க்கின் கார்டு மெம்பர்களுக்கு ஹேர் கட் இலவசம், அறிமுகச் சலுகையாக.

நம்ம ஊர்க்காரர் ராஷ்டிரபதி பவனுக்குப் போவதற்கு முன்னால் மெல்ராய் டிக்ஸன் சென்னைக்கு ஒரு விஸிட் வந்திருக்கக் கூடாதோ?

— சித்தார்த்

# ஆஹா, ஆயுர்வேத தொடர்–3

## டாக்டர் எல்.மகாதேவன்



**'இளமையாக இருப்பதற்கும், முதுமை அண்டாமல் இருப்பதற்கும் எடுக்கப்படும் சிகிச்சை அஷ்டாங்கத்தில், எந்தப் பிரிவில் வருகிறது?' என்ற பரிசுக் கேள்விக்கான விடை: ஜரா**



ஆயுர்வேத தத்துவத்தின் அடிப்படை பஞ்சபூத தத்துவம் மற்றும் பிரதோஷ தத்துவம்.

'அண்டத்தில் உள்ளதுதான், பிண்டத்திலும் உள்ளது' என்கிறார் திருமூலர். நமது உள்ளும் புறமும் பஞ்ச பூதத்தினால் ஆனது. பஞ்ச பூதத்தில் உண்டாகி, பஞ்ச பூதத்தில் நிலைத்து, பஞ்ச பூதத்தில் அழியும் தன்மை உடையவன்தான் மனிதன். இதுதான் ஆயுர்வேதத்தின் அடிப்படையும்!

பஞ்சபூதங்கள் என்னென்ன? பலருக்கும் தெரிந்ததுதான். ஆகாயம், வாயு, அக்னி, நீர், பூமி...

வாயுவும் ஆகாயமும் சேர்ந்து மனித உடம்பில் வாயு என்கிற வாத தத்துவத்தை ஏற்படுத்துகின்றன. இந்த வாயு அசையும் தன்மை உடையது. அசைய வைக்கும் தன்மை உடையது.

மூன்றாவது பூதமாகிய அக்னி, உடம்பில் பித்த ஸ்வரூபமாகச் செயல்படுகிறது.

நீர் மற்றும் நிலம் சேர்ந்து கப தத்துவமாகச் செயல்படுகிறது. இந்த மூன்று தத்துவங்களை 'வாத, பித்த, கப தத்துவம்' என்று ஆயுர்வேத சாஸ்திரம் சொல்கிறது.

இதற்கு 'தோஷம்' என்றும் சொல்வோம். 'தோஷம்' என்றால் குறை. 'தூஷயந்தி இதி தோஷஹா'... தான் கெட்டுப் போவதால், உடம்பிலிருக்கும் தாதுக்களைக் கெட்டுப் போகச் செய்து, நோயை உண்டாக்கும் தன்மை உடையன என்பதால் தோஷங்கள் என்று சொல்கிறோம்.

மனித உடம்பும் பஞ்ச பூதத்தினால் ஆனதே. இந்தப் பஞ்ச பூதங்களே, தோஷ வடிவங்களாக உடம்பின் செயல்பாட்டை

# மக்கரா... டக்கரா?




நிர்ணயிக்கின்றன.

இந்து புராணப்படி, நம் கடவுள்களை பிரம்மா, விஷ்ணு, சிவன் என்று முப்பெரும் சக்திகளாக வழிபடுகிறோம். அந்தப் பிரிவு, ஆயுர்வேத சாஸ்திரத்துக்கும் பொருந்தும்படியிருக்கிறது.

இச்சா சக்தி (பித்தம்), கிரியா (கபம்), ஞானம் (வாயு)... என வழிபடுகிறோம்.

வாயுவுக்கு உருவமில்லை... அதேபோல ஞான சக்தியாகிய பிரம்ம தேவனுக்கும் நாம் வழிபடும் உருவம் என்பது இல்லை.

அக்னிதான் பித்தம். வெப்ப சக்தி. சிவனும் அக்னி ஸ்வரூபமானவர். அதைச் சமனம் செய்வதற்காகத்தான் சந்திர சூடனாகவும், கங்காதரனாகவும், அபிஷேகப் பிரியராகவும் சிவனிருக்கிறார்.

மூன்றாவதாக உள்ளது கப தத்துவம். ஜலத்தினால் ஏற்படுவது. குளிர்ச்சியைச் சமனப்படுத்துவதற்காக, வெப்பம் தரும் துளசி, மகா விஷ்ணுவுக்கு அணிவிக்கப்படுகிறது.

மனித உடம்பை, ஒரு மாருதி காருக்கு ஒப்பிட்டால் வாயுதான் ஆக்ஸிலரேட்டர், கபம்தான் பிரேக். பித்தம்தான் க்ளச். இருபத்து நான்கு மணி நேரமும் இந்த வாத பித்த கபங்கள் நம் உடலை இயக்கிக் கொண்டேயிருக்கின்றன. ஆக்ஸிலரேட்டர், பிரேக், க்ளச் எல்லாமே சீராக இயங்கினால்தான் வண்டியும் மக்கர் பண்ணாமல், டக்கராக ஓடும்!

முத்தோஷங்களில் முதன்மையானதும், முக்கியமானதும் வாயு. பித்தத்தையும், கபத்தையும் இயக்குவதும் வாயுதான். வாயுவுக்கு ஏகப்பட்ட குணங்கள்; அநேக செயல்பாடுகள். நம் மூச்சையே

இயங்க வைப்பது வாயுதானே!

ஒருவன் உற்சாகமாக இருக்கிறான் என்றால் அதற்கும் வாயுதான் காரணம். 'பிரஸ்பந்தனம்' என்று சொல்லக் கூடிய ஹிருதய செயல்பாடுகளுக்கும் வாயுதான் காரணம். புலன்களின் செயல்பாடு (perception) இதற்கும் வாயுதான் காரணம். நுகர்வது, பார்ப்பது, கேட்பது, ருசிப்பது இதெல்லாம் வாயுவின் செயல்பாடுகள்தான். மலம், சிறுநீர், மாதவிடாய் போன்றவையும் வாயுவின் செயல்பாடுதான்.

'பித்தம்' என்று எடுத்துக்கொண்டால், ஜீரண சக்தி, உடம்புச் சூடு, பசி, தாகம், கண் பார்வை இதெல்லாம் பித்தத்தின் செயல்பாடுகள்.

கபத்தின் செயல்பாடுகளும் மிக நுண்ணியமானவை.

உடல் அமைப்பு, உடலின் எண்ணெய்ப் பசை, மூட்டுக்களின் இறுக்கம், நோய் எதிர்ப்பு சக்தி போன்றவை கபத்தின் செயல்பாடு.

இந்த வாத பித்த கபங்களின் நிலைமை, சமச்சீராக இருக்கும்போது, ஒரு மனிதன் ஆரோக்கியமாக இருக்கிறான். நாம் சாப்பிடக் கூடிய ஆகாரம், நம்முடைய செயல்பாடுகள், மனோநிலை, சுற்றுச் சூழல் இவைகளால் முத்தோஷங்களில் ஏற்ற தாழ்வு ஏற்படும். அப்படிச் சம நிலை தவறும்போது, அதைக் கவனிக்காமலே விட்டால், நோய் ஏற்படும்.

அந்தச் சமநிலையையே நாம் 'ப்ரக்ருதி' அல்லது சொஸ்தம் என்று சொல்கிறோம். ஆரோக்கியமான ஒரு நிலைமையே 'ப்ரக்ருத ஸ்வரூபம்'. மனோநிலையில் ஏற்படும் தோஷங்களைக் குறிப்பிடும்போது 'ரஜஸ்' என்றும் 'தமஸ்' என்றும் குறிப்பிடுகின்றோம். 'ரஜஸ்' என்பது ஊக்குவிக்கும் செயல்பாடு. 'தமஸ்' என்பது அஞ்ஞானம். எது சரி, எது தவறு என்று நிர்ணயிக்க முடியாத தன்மை. இதற்கும் வாத பித்த கபத்துக்கும் தொடர்புண்டு.

மனோ குணங்கள் என்று பொதுவாகச் சொன்னாலும், அதிலும், 'சத்வம்' 'ரஜோ', 'தமஸ்' என்று முக்குணங்கள் உள்ளன. இவற்றின் தன்மையை இனி வரும் கட்டுரைகளில் விரிவாகப் பார்க்க விருக்கிறோம்.

மனித உடம்பில் பஞ்ச பூதங்கள் உள்ளன என்று பார்த்தோம். அந்தப் பூதங்கள் தாதுக்கள் வடிவங்களில் நம்மை ஆட்டிப் படைத்துக்கொண்டிருக்கின்றன. சரி... நம்முடைய உடலில் எத்தனைத் தாதுக்கள் உள்ளன என்று யாருக்காவது தெரியுமா? தெரிந்தால் எழுதிப் போடுங்களேன்... சின்ன பரிசு காத்திருக்கிறது...

## எங்கேயோ கேட்ட கதை



சமீபத்தில் பட்டணத்துக்குப் போய் வந்த ஓர் ஆள் தமது கிராமத்தில் குதிரை வண்டியில் போய்க் கொண்டிருந்தான். வண்டியில் இரண்டு குதிரைகள் இணைக்கப்பட்டிருந்தன. ஆனால், ஒரு குதிரை வண்டியை இழுக்க, இன்னொரு குதிரை, வண்டிக்குப் பின்னால் சும்மா ஓடிக் கொண்டிருந்தது. எதிரே வந்த ஓர் ஆள், அதைப் பார்த்து ஆச்சரிப்பட்டு, ''என்ன குதிரை வண்டிக்காரரே... எதுக்குப் பின்னே ஒரு குதிரையைத் தண்டத்துக்கு கட்டி இருக்கிறீர்கள். அதையும் முன்னால் கட்டினால் வண்டி நல்ல வேகமாகப் போகுமே!'' என்றார்.

அதற்குக் குதிரை வண்டிக்காரன் சொன்னான்: ''அது 'ஸ்டெப்னியப்பா'. சமீபத்தில் பட்டணம் போனப்போது கார் 'ஸ்டெப்னி' பார்த்து நான் கண்டுபிடித்த ஐடியா.''

### தேவமருந்து - 1

வினா: - தேவர்களிடமிருந்து ஆயுர் வேதத்தை பூவுலகுக்குக் கற்று வந்த தேவ மகரிஷி யார்?

விடை: - பரத்வாஜர்

சரியான விடையெழுதி அமரர் கல்கி புத்தகங்களைப் பரிசாகப் பெறுபவர்கள்: ஜே. அஷோக்குமார், 29. சோமசுந்தரம், மில் ரோடு, காட்டூர்.

ஆர். உமா சரஸ்வதி, 64/73, திசையன்விளை 627657.

வேல் ராஜ் மாணிக்கம், 2/68, பிரசாத் வீதி, காவிரி பாளையம, சத்திய மங்கலம் 638402.

## ஏக்நாத்





**வீ**ட்டை விட்டுக் கிளம்ப முயற்சித்த போதே ராமையா தாத்தாவுக்கு ஒரு மாதிரிதான் இருந்தது. தம்மிடமுள்ள ஏதோ ஒன்று குறைகிறதே என்பதாகத் தோன்றிற்று. என்ன என்ன வென்று வீட்டு வாசற்படியில் நின்று யோசித்துப் பார்த்தார்.

"என்ன மாமா யோசனை போலருக்கு" என்றாள் மருமகள். இரண்டாவது மகனின் மனைவி.

"இல்லம்மா... எதையோ மறந்து போன மாதிரி தெரியுது" என்றார் முணுமுணுத்துக் கொண்டே.

என்னவாக இருக்கும்? என்ற ஆராய்ச்சியில் இப்போது மருமகளும் இறங்கினாள்.

"வெல்டா மாமா?"

"அததான் போட்டிருக்கேனே..."

"வெத்தல பாக்கு டப்பாவா...?"

இப்போது டப்பென்று ஞாபகத்துக்கு வந்துவிட்டது. மடக்கு! எழுந்து வழக்கமாக வைக்கும் இடத்தில் தேடினார். காணவில்லை.

"மடக்க காணோமேமா..."

"குளிக்க போவும்போது வச்சிருந்தேனே..."

"நம்ம கெணத்துலதான் குளிச்சேன். அங்க கண்டா வச்சிருப்பேனா. ஏல காளி, கெணத்துப் படியில என் மடக்கு கெடக்கான்னு பாத்துட்டு வால... மடக்கு இல்லனா ஒண்ணும் ஓடாதே..."

மகன் காளி, தோட்டத்துக் கிணற்றுக்கு நடந்தான். ராமையா தாத்தா மடக்கு என்று குறிப்பிட்டது சிறு கத்தியை. விதவிதமான மடக்குகள் அவரிடம் இருக்கிறது என்றாலும் தற்போது வைத்திருக்கும் மடக்குக்கு விசேஷம் நிறைய.

ஒருநாள் மேலத் தெரு கிருஷ்ணன், நுனி வளைந்த வழுவழு கைப்பிடிப் போட்ட மடக்கு ஒன்றைப் புதிதாய் எங்கிருந்தோ வாங்கி வந்து பீத்திக் கொண்டிருந்தார் களத்து மேட்டில்.

"என்ன கடலைண்ணே... மடக்க பாத்தியா? இதுமாதிரி எங்கயாவது பாத்திருப்பியா?"

"கொண்டா பாப்போம்..."

வாங்கினார் கடலை.

"இதென்ன பெரிய மடக்கு! நம்ம மாடசாமியண்ணன் ஒரு மடக்கு வச்சிருக்காம் பாரு... அது மடக்கு."

"இதவிட அது நல்லாவாடே இருக்கு?"

"நல்லா இருக்காவா? பட்டாளத்துல இருக்க அவரு மவன் வாங்கிட்டு வந்தது அது."

"பட்டாளத்துக்காரன் வாங்கிக் கொடுத்தாம்னா சரிதான்... சரி இது எப்படிடே இருக்கு?"

# மடக்கு

இப்படிப் பேசிக் கொண்டிருக்கும்போது ராமையா தாத்தா போனார்.

"என்ன ராமையா இந்த மடக்க பாத்தியா?"

"இத எவன்ட புடுங்கிட்டு வந்தே?"

"நல்ல கதையா போச்சு!"

"பெறவு நீ எங்கல துட்டு கொடுத்துச் செய்யச் சொல்லிருப்பே...?"

"எம் மவன் பாப்பாங்குளத்துல மெனக்கெட்டு செய்யச் சொல்லி வாங்கிட்டு வந்திருக்காம்டா..."

"பாப்பாங்குளத்துலயா? நல்லாயிருக்கே... நம்மூர்லயும் இருக்காம் பாரு மடக்கு செய்யுதவன், அவன ஒடப்புலதான் தூக்கிப் போடணும். என்ன அருமையா வேலை



பண்ணிருக்காம்."

"கைப்பிடி எதுல செஞ்சது தெரியும்லா?"

"எதுலடே?"

"சந்தனக் கட்டை..."

"ஒனக்கு கொழுப்பு கூடுதல்தான். அற்பனுக்குப் பவுசு வந்தா அர்த்த ராத்ரியில கொடை பிடிப்பாங்கற மாதிரி இதுல எவனாவது சந்தனக் கட்டையை வைப்பானாடே... என்ன கடல... என்ன ஒன்னுஞ்சொல்ல மாட்டக்க..."

"சரிதான் நீ சொல்லுதது."

"சரி கிட்னா. இத எங்கிட்ட கொடுத்திரு; உண்டான ரூவாயை வாங்கிக்க..."

"நல்ல யோசனையா போச்சே... இத ஒங்கிட்ட கொடுக்கவாடே என் மவன் வாங்கித் தந்தான். எவன் வச்சிருக்கற மடக்கை விடவும் எம் மடக்கு ஒசத்தியா இருக்கணும்னு அவன் ஆசைப்பட்டு கொண்டு வந்திருக்கான்."

"ஆங்.. பெரிய மடக்கு... பத்து பன்னெண்டு மடக்கு கெடக்குப் பாத்துக்கோ எங்கிட்ட... ஆனா ஒண்ணுமே அமையமாட்டேங்குது. உறைபோட்டு சொருவுனா, இடுப்பு வாருல இருக்காண்டாமா...? இடுப்பைப் பாத்தா ஒரு கெத்து வேண்டாமாடே, அப்படி ஒரு மடக்குமே அமைய மாட்டேங்குதே... இது என் இடுப்புக்கு அமையுத மாதிரி இருக்குன்னுதான கேட்கேன்."

"ஒங்கிட்ட கொடுத்துட்டு என்னய சிங்கி அடிக்கச் சொல்லுதியா?"

**ஊ**ரில் எல்லா பெரிசுகளுமே ஆளுக்கொரு மடக்கு வைத்திருப்பார்கள். வயக்காட்டு வேலைகளுக்கு இது அவசியம். வெற்றிலை போடுபவர்களுக்குப் பாக்கு மரத்தில் பாக்கு வெட்டுவதற்கு, வேலிகளின் குறுக்கு வழியில் செல்லும்போது சிலுப்பிக் கொண்டு நிற்கும் முட்களை வெட்ட, ஒண்ணுமில்லாத சமயங்களில் நண்பர்களுக்குள் பேசிக் கொண்டு கால், கை நகங்கள் வெட்ட என்று மடக்கு அவர்களுக்குத் தேவையாயிருந்தது. இன்னொரு விதத்தில் அது அவர்களுக்குக் கௌரவம். மீசையைத் திருக்கி வைத்துக் கொள்வது மாதிரி. இந்த மடக்கு காரணமாக பீடி, மூக்குப் பொடி பிரச்னைகளுக்காகக் கூட பொசுக்கென்று குத்து விழுந்து ரகளை வருவது ஊரில் அவ்வப்போது நிகழும் ஒன்று.

**ஒ**ரு நள்ளிரவில் கடலை காவலுக்குப் போன கிருஷ்ணன், பாம்பு கடித்து இறந்து போனார். நீலம் பாய்ந்த அவரது உடலை வண்டியில் போட்டு வீட்டுக்குக் கொண்டு வந்தார்கள். ஊரே கண்ணீர் விட்டது. ராமையா தாத்தாவுக்கு மனசு கேட்கவில்லை. மூன்று நாட்களாகக் கண்ணீர் விட்டு அழுதார். அவர்கள் அடித்த கூத்தென்ன, ஆடிய ஆட்டமென்ன. அடர்ந்த நட்பு. அவர்களின் வயதையொத்த பெரிசுகள் ஒவ்வொருவராக மண்டையைப் போட்டுக் கொண்டிருக்க, ராமையா தாத்தாவின் வட்டம் குறுகிக் கொண்டே வந்தது அவரை ரணப்படுத்திற்று.

இச்சம்பவத்துக்கு ஒரு வாரத்துக்குப் பிறகு வயலுக்குப் போன அவர், தற்செயலாக ஒரு வயல் வரப்பிலிருந்து மற்றொரு வரப்பிற்குத் தாவி ஓடிய பாம்பைப் பார்த்தபோது அதைக் காண நேரிட்டது. கிருஷ்ணன் இறந்து கிடந்த இடத்துக்கு அருகே அந்த மடக்கு! டப்பென்று எடுத்தார். கிருஷ்ணன் தர மறுத்த அந்த மடக்கு எடுத்ததும் கண்ணீர் வந்தது. இறந்து போன கிருஷ்ணனே அந்த மடக்கைத் தன்னிடம் கொடுத்ததாக நினைத்துக் கொண்ட ராமையா, அதை இடுப்பில் சொருகினார். ஜம்மென்று இருந்தது. அமைந்து போலான இருக்கை. அதை ஒரு போதும் அவர் மடக்காக நினைத்ததில்லை. கிருஷ்ணனே தம்மோடு இருப்பது போலான ஓர் உணர்வு.

"**இ**ந்தாப்பா... படிக்கட்டு பக்கத்துல கெடந்தது" என்று அதைக் கொடுத்தான் காளி. இப்போதுதான் உயிரே வந்தது அவருக்கு. அம்பாசமுத்திரம் சந்தைக்குப் போக நேரமாகி விட்டது. இடுப்பு பெல்டில் பணத்தைச் சரி பார்த்துக் கொண்டு நடந்தார். வண்டியில் மாடுகளை ஏற்கெனவே பூட்டியிருந்தான் காளி. ஏறி, காளையை அதட்டினார். மாடுகளுக்கு இது பழக்கப்பட்ட குரல். தாமாக நகர்ந்தன. வரும் வழியில் மன்னார்கோவில் விலக்கில் தென்னங்கன்றுக்குச் சொல்லவேண்டுமென்று நினைத்துக் கொண்டார். போன வாரமே இங்கு வந்து சொல்லியிருக்க வேண்டியது. கணங்கிப் போனார்.

மாட்டு வண்டி மெதுவாகச் சென்று கொண்டிருக்கும் போதே, பின்பக்கமிருந்து நான்கைந்து போலீஸ் வேன்களும் ஒரு தீயணைப்பு வண்டியும் வேகமாக கடந்து சென்றது. இப்போதேன் இவ்வளவு போலீஸ் வண்டிகள்? என்ற கேள்வி எழும்பிய அதே நேரத்தில்,

"டார்லிங்! உன் கண்ணு 'சிறுகதைப் பழம்' மாதிரி இருக்கு--"

"என்னது-- சிறுகதைப் பழம் மாதிரியா?"

"ஆமா! இன்னும் எத்தனை நாளைக்கு 'நாவல் பழம் மாதிரி'னு சொல்றது?"

— தஞ்சை தாமு



"இவை மணிமுத்தாறு கேம்பிற்குச் செல்கிறது" என்று பதிலும் கிடைத்தது.

காளைகளை விரட்டினால் விரைவாகச் செல்லலாம். ஆனால் இரவு, தென்காசிக்கு மரக்கட்டைகளைக் கொண்டு சென்றுவிட்டுக் காலையில் திரும்பியிருக்கிற மாடுகள். சிறிது நேர ஓய்வுதான். இப்போது அம்பா சமுத்திரம். காளைகள் என்னத்துக்காகும்? மனசு வலித்தது ராமையா தாத்தாவுக்கு. அது எப்படிச் செல்கிறதோ அப்படிச் செல்லட்டும் என்று, இருக்கை பகுதியில் வண்டிக்கட்டைகள் அழுத்தும் என்பதற்காக வைக்கோலைக் கட்டி வைக்கப்பட்ட சாக்கைத் தலைக்கு வைத்து அப்படியே படுத்தார் அவர். வெயிலுமில்லாத மழையுமில்லாத மந்தமான சூழல் அது. பெரும் பாலும் படுத்ததுமே தூங்கிவிடும் அவருக்கு, இப்போது தூக்கம் வரவில்லை. காரணம் ரோட்டின் இருபுறமும் கேபிள் புதைப்பதற் காகச் சாலையைத் தோண்டியிருந்தார்கள். பஸ், லாரிக்காரன்கள் ஹாரனை வேகமாக அடித்துத் தொலைத்து, மாடுகள் மிரண்டு குழிக்குள் இறங்கி விட்டால்? என்ற பயம்தான்.

ரயில்வே கேட் தாண்டி பெண்கள் பள்ளி அருகில் வந்ததுமே, போலீஸ்காரர்களாகத் தென்பட்டனர். காக்கி உடையணிந்த அவர்கள் ஒவ்வொரு வாகனத்தையும், சைக்கிள் மற்றும் நடந்து போகும் பாதசாரிகளையும் அங்குலம் அங்குலமாகச் சோதனை செய்த பிறகு போக அனுமதித்துக் கொண்டிருந்தனர். போலீஸ் ஜீப்புகள் அங்கும் இங்கும் அலைந்து கொண்டி ருந்தன. மனித நடமாட்டத்தை விட போலீஸ் நடமாட்டம் அதிகமாகத் தெரிந்தது. ஏதோ ஒரு கலவரச் சூழல் என்பது பார்த்ததுமே புரிந்தது. எதிரில் சைக்கிளில் சென்றவனை நிறுத்திக் கேட்டார்.

"என்னங்க வெவகாரம்?"

"என்ன வெவகாரமா? மத்திய மந்திரி கூட்டத்துக்கு வர்ற நேரத்துல எவனோ குண்டு வச்சிட்டானாம்."

"குண்டா... அடப்பாவி பயலுவோ... மந்திரி தப்பிச்சாரா?"

"அவரு வாரதுக்கு முன்னாலியே குண்டு வெடிச்சிட்டதால அவரு தப்பிச்சாரு."

"எத்தனை பேரு காலி?"

"அதுபத்தி தெரியலை."

"சரியா போச்சு! சரி தம்பி போய்ட்டு வாங்க."

"நான் போறேன். நீங்க எங்க?"

"சந்தைக்குத்தான்... சந்தை இருக்குமா?"

"சந்தை இருக்கு. ஆனா வண்டிய இங்க ஓரமா நிறுத்திட்டு, நீரு நடந்து போய்ட்டுதான் வரணும்... எல்லாத்தையும் குண்டு கிண்டு வச்சி ருக்கானோன்னு சோதனை போடுதாம் போலீசு."

"அது சரிதான்" என்ற அவர், பள்ளி அருகில் மாடுகளை அவிழ்த்து வண்டியில் கட்டிவிட்டு நடந்தார். இடுப்பில் செத்தாக இருந்த மடக்கு 'பொத்'தென்று தரையில் விழுந்து தன் இருப்பை தெரியப்படுத்தியது. எடுத்து மீண்டும் மடியில் வைத்துக் கொண் டார்.

எல்லோரையும் சோதித்துக் கொண்டிருந்த போலீஸ்காரர் ஒருவர், "யோவ் பெரிசு இங்க வா" என்றார்.

"நம்மள ஏன் கூப்பிடுதான்" என்று யோசித் தவாரே கைகளைக் கட்டிக் கொண்டு அவர் முன் நின்றார்.

"எந்த ஊரு."

"பக்கத்தூருதான் ஐயா."

"எங்க போறே."

"சந்தைக்கு."

"கையில என்ன வச்சிருக்கே."

"வெத்தலை டப்பாங்க."

"கொண்டா பாப்போம், இடுப்புல என்ன வச்சிருக்கே."

"பணம்ங்க."

இடுப்பைத் தடவிப் பார்த்த போலீஸ், துருத்திக் கொண்டிருந்த மடக்கை எடுத்தார்.

"இது எதுக்கு?"

"சும்மா... எப்பவுமே வச்சிருக்கதுதான்."

"என்னது வச்சிருக்கதுதானா... எனக்கே அல்வாவா! எத்தனை பேர் வந்திருக்கீங்க... சொல்லு.. போட்டம்னா பொடதி அந்து போயிரும்."

"இல்லைங்க... அது..."

டமாரென்று கன்னத்தில் ஓர் அறை விழுந்தது. தடுமாறி விழப்போன ராமையா தாத்தாவை இரண்டு போலீஸ்காரர்கள் பிடித்து போலீஸ் வேனில் ஏற்றினார்கள். ஏற்கெனவே நான்கைந்துபேர் அதில் இருந்தார்கள்.

"ஐயா... எனக்கு ஒண்ணுந்தெரியாதுங் கய்யா. என்னயப் போயி..."

கம்பி வண்டிக்குள்ளிருந்து அவர் கதறு வதை யாரும் கேட்டதாகத் தெரியவில்லை. ○

# நம்புங்க இவர்

**மா**டல், டிஎம்ஜி சானல் வி.ஜே., நடிகை, ஆங்கில கன்னட தியேட்டர் (டிராமா)களில் முன்னணி நடிகை, ஓவியர், ஓவியக் கல்லூரி மாணவி என்று ஏகப்பட்ட முகங்கள் டெய்ஸி பொப்பண்ணாவுக்கு.

நெடு நெடு உயரம், கலகல பேச்சு, மினுக் கனுக் சிரிப்பு, அடர்ந்த கேசம், தெளிவான எதிர்காலத் திட்டத்துடன் மேல் நாட்டு மாடல் போல் இருக்கும் டெய்ஸியை ஓரங்கட்டினோம்.

''என் அப்பா கூர்க். அம்மா தெலுங்கு. எனக்கு ஓர் அக்கா மட்டுமே. (பொப்பண்ணாவிற்கு அண்ணா யாருமில்லை. இளைஞர்கள் நிம்மதி கொள்க). சிறு வயதிலிருந்தே நடிப்பில் ஆர்வம். ஒன்றரை வருடங்களுக்கு முன்னால் பிரபல நாடக தயாரிப்பாளர் ப்ரீதம் கோயில்பிள்ளையிடம் சான்ஸ் கேட்டேன். முதலில் மறுத்தார். பிடிவாதமாக தினமும் போய் நிற்பேன். அனுபவமற்ற புதுக் கலைஞர்களை அவர் எடுப்பதில்லை. இருந்தாலும் எனக்கு சான்ஸ் கொடுத்தார். 'ரிஃப்ளெக்ஷனில்' எனக்கு முக்கிய ரோல். பிறகு கன்னட நாடகங்கள் பக்கம் போனேன். பி. ஜயஸ்ரீயின் 'ஸ்மஸான குரு க்ஷேத்ரா' பண்ணினேன். இதற்காகக் கிராமியக் கலைகள் கற்றுக் கொண்டேன். இந்த நாடகம் போபால், கொல்கத்தா, சென்னை... என பல இடங்களில் மேடையேறியது..'' ஆர்வமாகச் சொல்கிறார் டெய்ஸி.

கேட்பதைத் தவிர நமக்கு வேறென்ன பொல்லாத வேலை?



# பொன்னம்மா!



ஹார்லிக்ஸ், ப்ரூக் பான்ட், 3 ரோஸஸ்... என பல தயாரிப்புகளுக்கு மாடல். ஹார்லிக்ஸில் அம்மா. ராஜீவ் மேனன் தான் டைரக்டராம். புகழ்ந்து தள்ளுகிறார் டெய்ஸி. கொஞ்சம் கூட பந்தா காட்டாத டைரக்டர் என்கிறார்.

தற்சமயம் கவிதா லிங்கேஷ் இயக்கத்தில் கன்னட திரைப்படமான 'பிம்பா'வில் ஹீரோயினாக நடித்துக் கொண்டிருக்கிறார். "ஒரு குழந்தைக்குத் தாயாக நடிக்கிறேன். கொஞ்சம் சீரியஸ் சப்ஜக்ட்." என உருகும் டெய்ஸியை, இன்னும் கொஞ்ச நாட்களில் தமிழகமே 'ஏய் ஏய் என்னாச்சு உனக்கு?' என அரற்றப் போகிறது! ஏ.ஆர். ரஹ்மானின் இசையில் 'காதல் வைரஸ்' படத்தில் இடம் பெறப் போகும் 'பிரமோஷனல் ஸாங்'கில் நடனமாடியிருக்கிறது இந்த தேவதை!

"இது ஒரு பெப்பி ஸாங். ரொம்ப என்ஜாய் பண்ணி ஆடியிருக்கிறோம். நல்ல மூவ்மென்ட். ரசிகர்களை உற்சாகமாக ஆடவைக்கிற பாட்டு அது" என்று சொல்லும் டெய்ஸி திரைப்படங்களில் வெயிட்டான ரோலைத் தான் எதிர்பார்க்கிறாராம். "ஒரு ஸ்டார் ஆக ஆசையில்லை, பண்பட்ட நடிகையாகவே ஆசை" என்கிறார்.

நடிக்காத நேரத்தில் சமர்த்து மாணவியாக சித்ரகலா பரிஷதில் ஓவியம் பயில போய் விடுவார். ஒரு ஓவியமே ஓவியம் வரையும் அதிசயம்! டெய்ஸியின் இயற்பெயர் பொன்னம்மாவாம்! அட! இவருடைய தந்தைதான் டெய்ஸி என பெயர் மாற்றம் செய்தாராம். அதிரடியாக பெங்களூர் சாலைகளில் ஹீரோ ஹோண்டா மோட்டார் பைக் ஓட்டிச் செல்கிறார்!

அது சரி, தமிழ் சினிமாவில் நடிக்க, முக்கிய தகுதியாக தமிழ் தெரிந்திருக்கக் கூடாதே என்ற கவலையுடன் நாம் கேட்க "யா, கொஞ்சம் தெரியும். (இது போதாதா?) நான் கற்றுக் கொண்ட முதல் தமிழ் வார்த்தைக் கழுதே. (யாருப்பா கற்றுக் கொடுத்த மகாபிரபு?) என் கூட படிக்கும் ஓவிய மாணவர்களில் பலர் தமிழர்கள். ஆனால் நான் அடிக்கடி 'டீக் ஹை' சொல்லிண்டே இருப்பேன். என்னைப் பார்த்தாலே 'டீக் ஹை' என்று எல்லோரும் உச்ச ஸ்தாயியில் அலறுவார்கள்" கலகலவென சிரிக்கிறார் டெய்ஸி.

அர்த்தமுள்ள சினிமாக்களில் நடிக்க வேண்டுமென்பது கனவு. ஃபிரெஞ்சு தியேட்டரில் பணிபுரிய வேண்டும், பாலே டான்ஸ் கற்றுக் கொள்ள வேண்டும் என்றெல்லாம் லிஸ்ட் வைத்திருக்கிறார்.

மார்ஷியல் ஆர்ட் பயின்ற டெய்ஸியின் மனத்தில் ஒரு அவா. "சிறப்புக் குழந்தைகளுக்காக ஏதேனும் செய்ய வேண்டும். அவர்களுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கணும்" என்கிறார். பொன்னான மனம் பொன்னம்மாவுக்கு!

— லதா சேகர்



ஏதோ இதுவரை பெண்களுக்குச் சுதந்திரமே இல்லாது போனது போலவும், இனிமேல்தான் மகாத்மா காந்தி மாதிரி ஒருவர் பொக்கை வாயும் கைத்தடியுமாகத் தோன்றி சத்தியாக்ரகம், உண்ணாவிரதம் போன்ற போராட்டங்களில் ஈடுபட்டு அவர்களுக்குச் சுதந்திரம் வாங்கித்தர வேண்டும் என்று நிலைமை படுமோசமாக இருப்பது போலவும் பல பெண்கள் அமைப்புகள் கூக்குரல் எழுப்புகின்றன. இது உண்மைதானா என்று பிரபலங்கள் சிலரிடம் கற்பனையாகக் கேள்விகள் எழுப்பிக் கற்பனையாகவே பதிலும் பெற்றோம்.

'துக்ளக்'கில் கேள்வி - பதிலில் சோ :

**ராமகப்பு, சிரங்கப்பட்டணம்.**

**கேள்வி : பெண்கள் இன்று சுதந்திரமாக இருக்கிறார்களா, இல்லையா?**

பதில் : இவர்கள் சுதந்தரமாக இல்லை என்று, பயமே இல்லாமல் வெளியே சொல்லிக் கொண்டு பிரசாரம் பண்ணும் போதே தெரியவில்லையா இவர்களுக்கு அளவு கடந்த சுதந்திரம் இருக்கிறது என்று? நான் ராஜ்யசபாவில் இதைப் பற்றிப் போன மாதம் 10ஆம் தேதி பேசியபோது இரவு மணி 10.40. உறுப்பினர்கள் பாதிப் பேர் தூக்கத்தில் இருந்தார்கள். எனக்கோ சென்னைக்குப் புறப்பட்டாக வேண்டும். ஆனாலும் நான் இது பற்றி இரண்டு மணி முப்பத்தைந்து நிமிடங்கள் பேசினேன். இது, ஒரு செய்தித் தாளிலும் வழக்கம்போல் வெளியாகவில்லை. (அதை அடுத்த 'துக்ளக்'கில் முழுதும் வெளியிட்டு உங்கள் வயிற்றெரிச்சலைச் சம்பாதித்துக் கொள்ளுவேன் என்று இப்போதே எச்சரிக்கை செய்து விடுகிறேன்!) நஜ்மா ஹெப்துல்லா கொட்டாவி விட்டுக் கொண்டே என் முழுப் பேச்சையும் கேட்டுக் கொண்டிருந்தார்.

பெண்களுக்கு அளவுக்கு அதிகமாகவே சுதந்திரம் கொடுத்து விட்டோம். 33 சதவிகிதம் இட ஒதுக்கீடு வந்துவிட்டால் ஆண்களுக்குத் திண்டாட்டமாகிவிடும் என்று தீர்மானமாகப் பேசினேன். இதை நான் 15.2.78, 1.9.81, 15.6.93 ஆகிய 'துக்ளக்' கேள்வி - பதில்களில் முன்பே விரிவாகச் சொல்லியிருக்கிறேன். 'வெறுக்கத்தக்கதா பிராமணீயம்?' என்ற என் புத்தகத்தில்கூட இது பற்றிக் கூறியிருக்கிறேன் : பிராமணர்களின் சில சடங்கு களில், கணவன் பின்னாலேயே மனைவி நின்று, அவருடைய வெற்று முதுகில் தர்ப்பையால் தொட்டுக் கொண்டிருக்க வேண்டும். சில மனைவிகள் இதுதான் சாக்கு என்று கணவரின் முதுகில் உரசி உரசி எரிச்சல்படுத்திவிட்டு, காதிலும்கூட தர்ப் பையை நுழைத்து இம்சைப் படுத்துவார்கள். அவர்களுக்குக் கொடுக்கப்பட்ட உரிமையை, அவர்கள் அத்துமீறிப் பயன்படுத்துகிறார் கள் என்று குறிப்பிடவே இதைச் சொல்லகிறேன்.

'மஞ்சரி' இதழில் தென்கச்சி பதில்கள் :

**ராமசாமி, அம்பாசமுத்திரம்**

**கேள்வி : பெண்களுக்குப் போதிய சுதந்திரம் இப்போது**



# "ஒரு போடு போட்டுருவாங்க!"

***இருக்கிறதா, இல்லையா?***

தென்கச்சி : நான் இதுக்குப் பதிலா ஒரு கதை சொல்லணும்: தெரிந்தவர் ஒருவர் வீட்டில் அந்த வீட்டு அம்மாள் சமையல் செய்து வைத்துவிட்டு, பக்கத்துவீட்டு அம்மாளுடன் பேசப் போய்விட்டாள். போகும்போது, 'நீங்க போட்டுக்கிட்டுச் சாப்பிடுங்க'ன்னு சொன்னது வீட்டுக்காரருக்குக் கேக்கவே இல்லே. அவர் பாட்டுக்குச் சும்மா இருந்துட்டார். சுமாரா இரண்டு மணி நேரம் பொறுத்து வீட்டுக்கார அம்மாள் வந்ததும், 'ஏங்க, சாப்புடலே? நான்தான் சொல்லிட்டுப் போனனே?'ன்னாங்க. கணவர் மேல் தப்பில்லை. ஏன்னா அவர் காதில் விழும்படியா அந்தம்மா சொல்லலே. அந்தம்மா மேலயும் தப்பு இல்லே. அவங்க சொல்லிட்டுத்தானே போனாங்க? 'ஒனக்கு ரொம்பத் துளுத்துப் போச்சு'ன்னு கணவர் சப்தம் போட்டாரு. 'வேணு மின்னா சாப்புடுங்க!'ன்னாங்க அந்தம்மா, கணவருக்குச் சுதந்திரம் கொடுக்கற மாதிரி. இப்போ யார்கிட்டே அதிக சுதந்திரம் இருக்குன்னு நீங்களே முடிவு பண்ணிக்குங்க!



'கல்கண்டி'ல் லேனா :

**குப்புசாமி, ராயப்பன்பட்டி**

***கேள்வி : இப்போது இந்தியாவில் பெண்களுக்குச் சுதந்தரம் இருக்கிறதா? உங்கள் அனுபவம் என்ன சொல்லுகிறது?***

லேனா : நான் சமீபத்தில் மலேசியா - சிங்கப்பூர் - தாய்லாந்து - ஆப்கனிஸ்தான் - தஜிகிஸ்தான் எல்லாம் பயணம் செய்துவிட்டு எதியோப்பியா வழியாக இந்தியா வந்து கொண்டிருந்தேன். அங்கே ஒரு நாள் தங்கி இருந்தபோதுதான், அவர்கள் பெண்களை எந்த அளவுக்குத் தாழ்த்தி வைத்திருக்கிறார்கள் என்று தெரிந்து கொண்டேன். நிலத்தில் இரண்டடி ஆழத்தில் நின்று கொண்டுதான் அவர்கள் ஆண்களிடம் பேச வேண்டும் என்று வழக்கமே இருக்கிறதாம்! எதியோப்பியாவைவிட இந்தியாவில் பெண்களுக்கு நிறையவே சுதந்திரம் இருக்கிறது என்பதுதான் என் அனுபவம்.

***பட்டிமன்றத்தில் சாலமன் பாப்பையா தரும் தீர்ப்பு :***

பெண்களுக்குச் சுதந்திரம் வேணுமா, வேண்டாமா? என்கிற



தலைப்புல ரெண்டு பக்கமும் பேசிட்டாங்கய்யா. எம்பாடுதான் இப்பத் திண்டாட்டமா போச்சு. சுதந்திரம் இல்லேன்னு தீர்ப்புச் சொல்லிட்டா, ஆம்பளை ஆளுங்க எல்லாம் வந்து என்னைய ஒரு போடு போட்ருவாங்க.

நிறையவே இருக்குன்னு சொல்லிட்டா, பொண்ணுங்க எல்லாம் வந்து சாத்திருவாங்க. நானே இப்ப வீட்டுக்குப் போனா உள்ளார உடறாங்களோ இல்ல, வெளியவே நிக்கச் சொல்லிடுவாங்களோ, தெரியலே. (சிரிப்பு) அதனால, ஆண்களைச் சகித்துக் கொள்ளற அளவு சுதந்திரம் பெண்களுக்கு இருக்குன்னு சொல்ற அதே நேரத்துல, பெண்களைச் சகிக்கக்கற அளவு சுதந்திரம் ஆண்களுக்கு இருக்குன்னு என்னோட பாரபட்சமில்லாத தீர்ப்பை வழங்கறேன். நன்றி. வணக்கம்.

கற்பனை : **சாருகேசி**

# போலீஸ் கவிஞர்!



நாற்பத்தியிரண்டு வயதாகும் தேஜ்தீப் மேனன் ஆந்திரபிரதேச ஐ.ஜி. பத்தொன்பது வருட பணியில் சாதித்தது நிறைய. அதையெல்லாம் விட அவர் ஒரு கவிஞர். மூன்று கவிதைப் புத்தகங்கள் வெளியிட்டிருக்கிறார். அண்மையில் சென்னை வந்திருந்தவரைச் சந்தித்தோம்.

"என்.டி.ஆர். முதல்வராக இருந்த காலகட்டம். நான் கடப்பாவில் எஸ்.பி. பிரதமர் ராஜீவ்காந்திக்கு எதிராக, எதிர்க்கட்சிகள் 'பாரத் பந்த்' நடத்திய தினம். ஆந்திராவின் ஆளும் கட்சியினர், மத்திய அரசுக்கு எதிராக கோஷங்கள் எழுப்பியபடி, வந்த ஊர்வலம், ஆல் இந்தியா ரேடியோ வளாகத்துக்குள் நுழைந்து, ஒலிபரப்பை நிறுத்தும் முயற்சியில் இறங்கியது. வன்முறையை ஒடுக்க இறங்கிய போலீஸாரை, கட்சிக்காரர்கள் தாக்கினார்கள். போலீஸ் பதிலடி தர ஆரம்பித்தவுடன், அமைச்சர் ஒருவர் தங்கியிருந்த விருந்தினர் மாளிகைக்குள் புகுந்து கொண்டனர். போலீஸ் படை சென்றபோது, உள்ளே இருந்த அமைச்சர் ஓர் அதிகாரியைச் செருப்பால் அடிக்க, நிலைமை விபரீதமாகிவிட்டது.

"போலீஸ் முழுவீச்சில் பதிலடிதர ஆரம்பித்தனர். நிலைமை கட்டுக்கடங்காமல் போகும் சூழ்நிலை ஏற்பட்டது. நான் போலீஸ்காரர்களைப் பொறுமையாய் இருக்கச் சொன்னேன். என் பேச்சைக் கேட்க யாரும் தயாராக இல்லை. உரத்த குரலில், போலீசார் பதிலடி தருவதை நிறுத்தாவிட்டால், என்னை நானே சுட்டுக் கொண்டு விடுவேன்' என்று அறிவித்தேன். அடங்கினார்கள். ஒரு வழியாய், நிலைமை கட்டுக்கு வந்தது. பின்னர், இது குறித்து அமைக்கப்பட்ட விசாரணை கமிஷன் அறிக்கையில், என்னைப் பாராட்டியிருந்தார் விசாரணை அதிகாரி!"

தேஜ் தீப்பின் கவிதைகள் தெலுங்கிலும், பஞ்சாபியிலும் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. "தமிழில் என் கவிதைகள் மொழிபெயர்க்கப்பட வேண்டும் என விரும்புகிறேன். யாராவது முன் வருவார்களா?" என்று ஆர்வம் பொங்க கேட்கிறார் இந்த ஐ.பி.எஸ்!



– மௌலி

படங்கள்: யோகா



ஓசூரை அடுத்துள்ள தளி கிராமத்தைச் சேர்ந்தவர் கல்பனா சுமதி. தனியார் பள்ளி ஆசிரியை. குடி தண்ணீர் பிடிக்கப் போன இடத்தில் இருந்து காவல்துறையினரால் காவல் நிலையம் இழுத்துச் செல்லப்பட்ட அவர், இன்ஸ்பெக்டர் உள்பட நான்கு காவலர்களால் பாலியல் பலாத்காரத்திற்கு உள்ளாக்கப்பட்டார். லத்தியால் தாக்குதல் வேறு. பின் காவல் நிலையம் அருகில் உள்ள பள்ளத்தில் வீசி, ஒரு பாறாங்கல்லை அவர் மீது தூக்கிப் போட்டனர்.

இந்த அநீதியை எதிர்த்து, தொடர்ந்து போராடியவர்தான் கல்பனா சுமதி. காவல்துறையி னருக்கு எதிராக போராட்டம் என்றால் எத்தனைக் கஷ்டம் என்பது தெரிந்த ஒன்று. ஆனாலும் பதினான்கு ஆண்டுகள் போராடி குற்றவாளிகளுக்குத் தண்டனை வாங்கித் தரும் வரை உறுதியாக இருந்தார்.

சேலத்தை சேர்ந்த ராணி. பெண்ணாகப் பிறந்துவிட்ட தன் குழந்தையை உறவினர்கள் கொன்றுவிட வற்புறுத்தியபோது, கடுமையாகப் போராடி எதிர்த்து நின்று தன் குழந்தையைக் காப்பாற்றிக் கொண்டவர்.

மேட்டூரைச் சேர்ந்த பதிமூன்று வயது பெண். (பெயர் வேண்டாமே) அந்த இளம் வயதி லேயே திருமணம் செய்து கொள்ளத் தூண்டிய தாயை எதிர்த்துப் போராடியவர். அதுவும் ஏழாம் வகுப்பு மாணவியான அவருக்கு வயதான மாப்பிள்ளை பார்த்து இரண்டாம் தாரமாக மண முடிக்க நடந்த ஏற்பாடுகளைத் துணிச்சலுடன் எதிர்த்தவர்.

மனசுக்குப் பிடிக்காத காரியம் நடக்கும் போது தற்கொலை போன்ற கோழைத்தனமான முடிவுகளை எடுக்கும் பெண்களுக்கு மத்தியில் துணிச்சலுடன் காவல் நிலையத்தை அணுகி, தன் பிரச்னைக்குத் தீர்வு காணச் சொன்னார்.

பள்ளிக்குச் சென்று திரும்பிக் கொண்டிருந்த அருப்புக் கோட்டை மாணவி சுப லட்சுமியை நான்கு இளைஞர்கள் சேர்ந்து பாலியல் கொடுமை செய்ததுடன், கொன்று கிணற்றில் தூக்கிப் போட்டுவிட்டனர்.

அந்த இளைஞர்களுக்கு எப்படியும் தண்டனை பெற்றுத் தந்தே தீருவது என உறுதியுடன் நின்று, எழுந்த எதிர்ப்புகளை, தொல்லைகளைச் சமாளித்து, திசை திருப்பும் வேலைகளைச் சமாதான முயற்சிகளைப் புறந்தள்ளி உறுதியாக நின்ற அவர்களின் பெற்றோர். நீதிமன்றம் குற்ற வாளிகளுக்கு தூக்கு தண்டனை அளித்தது.

சிவகங்கை மாவட்டத்தைச் சேர்ந்த அழகம்மாள். திருமணத்திற்குப் பின் வேலையை விட வேண்டும். அவரது சொத்துக்களைத் தன் பெயருக்கு எழுதித்தர வேண்டும் என்ற கணவனை எதிர்த்து கேட்டதற்காக சாதி பஞ்சாயத்தாரால் தண்டிக்கப்பட்டார். ஐம்பது ஆயிரம் ரூபாய் அபராதம் விதிக்கப்பட்டது. அவரால் கட்ட முடியவில்லை. பஞ்சாயத்தாரை ஒரு முறை சாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்காரம் செய்தால் நமஸ்காரம் ஒன்றுக்கு ஆயிரம் ரூபாய் குறைப்ப தாக இறங்கி வந்தார்கள். நாற்பத்தேழு முறை விழுந்து வணங்கி மேலும் விழ முடியாமல் போனார்.

இந்தப் பிரச்னை புகார் ஆன போதும் தண்டனை என்னவோ அழகம்மாளுக்குத்தான்! விசாரணை என்ற பெயரில் காவல் துறையினரால் தாக்கப்பட்டார். மருத்துவமனையில் இருக்கும் அவர், மாதர் சங்க பாதுகாப்புடன் தொடர்ந்து நீதி கேட்டு போராடி வருகிறார்.

மதுரை டாக்டர் மணிவாசகம். ஸ்கேன் மூலம் பரிசோதித்து வயிற்றிலிருக்கும்

# அந்த ஆறு பேர்!

குழந்தை ஆணா பெ[illegible] [illegible]ன்று [illegible]விக்கக் கூடாது எனச் [illegible]ட்டமிருந்தும், பலர் ஏதேதோ காரணங்களால் அதைக் கடைபிடிப்பதில் பாரபட்சம் காட்டத்தான் செய்கிறார்கள். அவர்கள் 'விழிப்புணர்வு பெற வேண்டும். பெண்குலம் வாழ, அப்படிக் கேட்கும் பெற்றோர்களிடம் நம்பிக்கை ஏற்படுத்த வேண்டும் என்பதை வலியுறுத்தும் வகையில், பெண்ணுரிமை குரல் கொடுத்து வருபவர்.

விருது நகரில் நடைபெற்ற அனைந்திந்திய ஜனநாயக மாதர் சங்கத்தின் பத்தாவது தமிழ் மாநில மாநாட்டில் இந்த ஆறு பேர் பாராட்டப்பட்டார்கள். ''இந்தப் பாராட்டு மூலம் அவர்களைப் போல கொடுமைகளை எதிர்க்கும் துணிவை மற்ற பெண்களும் பெற வேண்டும் என்பதே நோக்கம்'' என்கிறார் சங்கத்தின் மாநிலச் செயலாளர் சுதா சுந்தர ராமன்.

''தமிழ் நாட்டில் பெண் குழந்தைகளின் பிறப்பு சதவிகிதம் குறைந்துள்ளது. இந்த அபாயத்தின் அறிகுறிகளை மாநாடு முன்னிறுத்தியுள்ளது'' என்கிறார் இவர்.

''திரைப்படப் பாடல் வரிகளில் உள்ள ஆபாசத்தைக் கண்டித்து போராட்டம் நடத்தவும் அனைத் திந்திய ஜனநாயக மாதர் சங்கம் திட்டமிட்டு வருகிறது. 'ஓ போடு' 'சரக்கு வைச்சிருக்கேன்' போன்ற பாடல்களில் வரும் வரிகள் சகிக்க முடியாதவையாக உள்ளன. படத்திற்கு சென்ஸார் செய்யும் முன்பாக பாடல்கள் வந்து விடுகின்றன. ஒலி நாடா வெளியிடும் முன்பு வரிகளை சென்ஸார் செய்ய வேண்டும் என்று கோரிக்கை வைக்க இருக்கிறோம்'' என்கிறார் இச்சங்கத்தின் வாசுகி.

— சுந்தரமூர்த்தி





இவரைப் பற்றி எந்தத் தகவலும் இல்லையே என்று பரபரப்புக்காக பரிதவிக்கிற பத்திரிகைகளுக்கு, கடந்த இரண்டாண்டு காலமாக இவர் தந்த பதில் கனத்த மௌனம். இப்போது ஒரு வெற்றிகரமானப் பெண் தொழில் அதிபராக எழுச்சியோடு நின்று, புதிய செய்தியாகி இருக்கிறார் சாயா தேவி! மறக்கமுடியாத, மலர்ச்சியான அதே முகம். விதவிதமான மாடர்ன் கிச்சன்களுக்கு நடுவே நின்றுகொண்டு அமைதியாக, ஆனால் தீர்க்கமாகப் பேசுகிறார்.

"எனது சொந்த வாழ்க்கை பற்றி துளிக்கூட வேண்டாமே ப்ளீஸ்... எனது புதிய தொழில் முயற்சி, பெண் சுதந்திரம் பற்றிப் பேசலாம்" என்ற வேண்டுகோளோடு ஆரம்பிக்கிறார்.

"ஒவ்வொரு பெண்ணுக்குள்ளும் ஒரு திறமை ஒளிந்திருக்கும். திருமணத்திற்கு முன்பு பெற்றோரால் அது கண்டுபிடிக்கப்பட்டு, வளர்க்கப்படும். திருமணத்திற்குப் பின்பு கணவன், பிள்ளைகள், தனது வேலை என்று குடும்பத்திற்கு முக்கியத்துவம் கொடுத்துவிட்டு, தனது தனித் திறமையை மறந்தே போய்விடுவார்கள். என்னைப் பொருத்தவரைத் தனித் திறமையுள்ள பெண்கள் அதைத் தங்கள் முன்னேற்றத்திற்குப் பயன்படுத்திக் கொள்ளாமல் விட்டுவிடுவதைத் திறமைக் கொலை என்றுதான் சொல்லுவேன்" எனும் சாயா தேவி, தம்மிடம் சிறு வயது முதலே துளிர்த்த தனித்திறமை இன்டீரியர் டெக்கரேஷன் என்கிறார்.

"எனக்குப் பத்து வயது இருக்கும். பள்ளி விட்டு வீட்டிற்கு வரும் வழியில், ஒற்றை வெள்ளைப்பூ பூத்தபடி பச்சை பசேலென்று மூன்று இதழ்களோடு இருந்த கள்ளிச்செடியொன்று என்னைக் கவர்ந்துவிட்டது. அடம் பிடித்து அதை வீட்டிற்குப் பெயர்த்து வந்துவிட்டேன். வீட்டில் எல்லோரும் அதை 'முள்' என்றார்கள். நான் அதை ஒரு பூந்தொட்டியில் போட்டுத் தண்ணீர் விட்டு வந்தேன். மூன்று இதழ்கள் ஆறாகி, இளைகளின் ஒவ்வொரு முனையிலும் அது பூப்பூத்த அதிசயத்தை எங்கள் வீட்டிற்கு வந்த எல்லோரும் பாராட்டினார்கள். 'எத்தனை அழகு' என்றார்கள். இதுதான் எனது அழகுணர்ச்சியின் வெளிப்பாட்டுக்குக் கிடைத்த முதல் பாராட்டு" என்று சொல்லும் சாயாதேவி, இப்போது 'இல்லா ஹோம் யூட்டிலிட்டி (பி) லிமிடெட்' நிறுவனத்தின் இயக்குனர் குழு



# சாயாதேவியின் 'இல்லா!'

வில் இடம் பிடித்திருக்கிறார்.

என்ன செய்கிறது இவரின் இல்லா?

"வாழ்க்கையில் தன்னிறைவு பெற நினைக்கிற நம் ஒவ்வொருவருக்கும் வீடுதான் முக்கிய கனவு. என்னதான் கணவன்மார்கள், சமதர்மம் பேசினாலும், எப்போதாவது அடுக்களைக்குச் சென்று, அபூர்வமாய் மனைவிக்கு காபி போட்டுத் தந்துவிட்டு, சமையல் என்ன பெரிய கம்பசூத்திரமா என பொய் கம்பீரம் காட்டினாலும், இன்றைக்கு வீடுகளில் கிச்சன்தான் பெண்கள் அதிகம் புழங்க வேண்டிய இடமாய் இருக்கிறது. அத்தகைய கிச்சனைக் கலையுணர்வுடன் உருவாக்கித் தருவதுதான் எங்கள் வேலை" என்றவரை இடைமறித்து, இயந்திர கதியான வாழ்க்கையில் சமையலறையில் அழகுணர்ச்சியாவது கலையுணர்ச்சியாவது என்று நாம் கேட்கப் போய், கடுகு மாதிரி பொரிந்து விடாமல் இனிமையாய்த் தகவல்கள் தருகிறார் இன்டீரியர் கிச்சன் பற்றி.

"சமைப்பது பெண் என்றாலும் ஆண் என்றாலும் சரி. சின்னஞ்சிறு சமயலறை என்றால் கூட அதை தேவைக்கேற்ப வசதியாகவும், கண்களுக்கு உற்சாகமூட்டக்கூடிய ஓர் இடமாகவும், மாற்றினால்தான் சமைப்பதில் முதலில் ஈடுபாடு வரும். அப்படியொரு நல்ல கிச்சன் கிடைத்து விட்டால் கைப்பக்குவத்தைத் தாண்டி உணவு ருசிக்கும்" என்றவர் வாஸ்த்து முறைப்படி பட்ஜெட் கிச்சன் முதல் ப்ரீமியம் கிச்சன் வரை அமைத்துத் தருவதை விவரித்தார்:

"பஞ்சபூதங்களுக்கு மத்தியில்தான் நாம் வாழ்கிறோம். நமது வீடு என்பதும் பஞ்ச பூதங்கள் ஆட்சி செய்யும் திசைகளுக்கு ஏற்ப கட்டப்பட வேண்டும். இதைத்தான் வாஸ்த்து சாஸ்திரம் சொல்லுகிறது. வாஸ்த்து முறைப்படி கட்டப்பட்ட ஒரு வீட்டின் தென் கிழக்கு மூலையை அக்னி மூலை என்கிறோம். இங்கேதான் வீட்டின் சமையலறை அமைக்கப்பட வேண்டும். இப்படி அமைக்கப்பட்ட சமையலறை தெற்கு மூலையின் மத்தியில் அடுப்பு, மைக்ரோ ஓவன், எலக்ட்ரிக் சிம்னி போன்றவை அமைக்கப்பட வேண்டும். வட கிழக்கு மூலை பவித்திரமான இடம். எனவே இங்கே குடி தண்ணீரும், வடமேற்கில் குளிர்பதனப் பெட்டியும், கப்போர்டுகளும் அமைக்க வேண்டும்.

"எங்கள் டீமில், சிவில் எஞ்ஜினியர், ஆர்கிடெக், வாஸ்த்து கன்சல்டண்ட், இன்டீரியர் டெகரேட்டர் ஆகியோர் இடம் பெற்றிருக்கிறார்கள். உங்கள் வீட்டிற்கு வந்து, இடத்தை அளந்து பார்த்து, அதன்பிறகு டிராயிங் மூலம் கிச்சனை உருவாக்குகிறோம். ஒரு கிச்சனுக்கு ஐந்து விதமான பட்ஜெட் கொடுக்கிறோம். திருமண நாளன்று மனைவிக்கும், பிறந்த தினத்தன்று மணமாகிப் போன மகளுக்கும், சமையலறைப் புகையில் கஷ்டப்படும் வயதான அம்மாக்களுக்குமாக கிச்சன்களை ரகசியமாகப் பரிசளிக்க வருகிறார்கள். வரும் வாடிக்கையாளர்களின் விருப்பத்திற்கும் பட்ஜெட்டிற்கும் ஈடுகொடுக்கிறோம்" என்று சொல்லும் சாயாதேவியைப் பார்த்து, வாழ்க்கையில் துவண்டுபோய் நிற்கிற பெண்கள் பாடம் படித்துக் கொள்ளலாம்!

சந்திப்பு : ஜெய்

படங்கள் : ராஜன்

# நீங்கள் கேட்டவை

—தராசு



• மைனஸ் வயது!

● ஜோ.பன்னீர் செல்வம், சென்னை ★

? 'தமிழக அரசு தருவதாக அறிவித்துள்ள இருபது கிலோ அரிசி வேண்டாம்; கொடுத்தாலும் வாங்க மாட்டோம்; வேலை தான் வேண்டும்' என்று ஸ்ரீவில்லிபுத்தூர் நெசவாளர்கள் சொல்கிறார்களே... இதிலிருந்து தெரியும் உண்மை என்ன?

! 1. நெசவாளர்களின் தன்மானம். 2. கஞ்சியாலோ பிரியாணியாலோ மறைக்க முடியாத அளவுக்குப் பிரச்னை பூதாகாரமானது.

● சந்துரு கமலநாதன், நாமக்கல்

? சமூக ஒழுக்கக் கேட்டுக்கு முக்கிய காரணம் அரசியலா? சினிமாவா?

! அரசியல் அளிக்கும் பாதுகாப்பு + சினிமா அளிக்கும் 'இன்ஸ்பிரேஷன்'. உதாரணம்: ஹரியானா சிறைத்துறை ஐ.ஜி. செய்த சினிமா பாணி தவறுக்காக அவரை போலீஸ் தேட, அவர் தலைநகரிலேயே வி.வி.ஐ.பி.க்களுடன் குலாவிக் கொண்டிருந்துவிட்டுத் தப்பித்த நிகழ்ச்சி.

● சித்ரா கிருஷ்ணமூர்த்தி, கும்பகோணம் ❐

? வாய்தாக்கள் இல்லையென்றால் வழக்குகளின் போக்கு எப்படி இருக்கும்...?

! வாய்தாக்கள், ஆதாரங்களை ஆராயவும், எடை போட்டு வாதங்கள் தயாரிக்கவும் அவசியமானவை. அதற்காகவே ஏற்பட்டவை. இன்றோ, வழக்கை இழுத்தடிக்கும் ஆயுதமாகவே அது பயன்படுத்தப்படுகிறது. ஜனநாயக உரிமைகளின் பல துஷ்பிரயோகங்களுள் இதுவும் ஒன்று.

• மறைக்க வேண்டாம்!

# பாபா எழுபது கோடி குவித்துள்ளதாமே?

● டி. சுப்ரமணியன், மேலையூர்

*? ஏழு கோடி முதலீட்டில் எழுபது கோடி குவித்துள்ளதாமே பாபா?*

! சம்பந்தப்பட்டவர்கள் வரி செலுத்த மறக்காமல் வளமுடன் வாழட்டும்; 'பாபா' மக்கள் மனங்களையும் வளப்படுத்துமானால் நாமும் மகிழலாம்.

● எஸ்.ஜான் பீட்டர்,
நாட்டரசன்கோட்டை

*? மலேஷியாவில் எல்லா நடிக - நடிகைகளும் ஒன்றாக இருந்து அரட்டை அடித்ததில் இருபது வயது குறைந்து விட்டதாக சத்யராஜ் கூறியதை கவனித்தீரா?*

! அச்சச்சோ! அப்புறம் வயசைக் கணக்குப் போட்டா பல பேர் இன்னும் பிறக்கவேயில்லை என்ற நிலைக்கு இல்லை மாறிடுவாங்க!

• எய்தவனை விட்டு !...

● இரா. சக்கரபாணி, மதுரை-7.

*? தற்போதுள்ள நிதி நெருக்கடியில் தமிழக அரசின் நிர்வாக நகரத் திட்டம் தேவைதானா...?*

! நிதி நிலைமை முன்னேற்றம் அடைந்தாலும் தேவையற்றது.

● எம். சுப்ரமணி, வீரணம்பட்டி

*? மதுக்கடை லைசென்ஸ் பெற விண்ணப்பித்தவர்களின் கோடிக்கணக்கான ரூபாய் பணத்தை கோர்ட் தீர்ப்பு வரும் வரை அரசு கருவூலங்களில் 'சீல்' வைத்து வைக்குமாறு அரசு போட்டுள்ள உத்தரவு சரிதானா...?*

! வேறு வழி இல்லையே! பணத்தைத் திருப்பித் தந்தால் மீண்டும் விண்ணப்பம் பெறும் பணியை முழுதுமாகச் செய்ய வேண்டும். காலம் / பணம் விரயமாகும். விரைவான தீர்ப்புக் கோரி கோர்ட்டில் அவசர மனு போடலாம்.

● கே. துரைசாமி, மங்களப்பட்டி

*? மனம் என்பது மூளையின் சமிக்ஞைகளா...? எண்ணங்கள் எங்கிருந்து உற்பத்தியாகின்றன...?*

! மனம் என்பது உணர்ச்சிகளின் ஊற்றுக் கண் மூளை - அறிவின் பிறப்பிடம். மனத்தை நெறிப்படுத்துவது அறிவு. அதனால்தான் பாரதியார்

'பேயா யுழலுஞ் சிறுமனமே
பேணா யென்சொல் இன்றுமுதல்
நீயா யொன்றும் நாடாதே
நினது தலைவன் யானேகாண்'

- என்று பாடினார்.

● ஆனந்தி ராஜா, மணப்பாறை

*? நகரசபையில் நாற்காலிகளைத் தூக்கி அடித்துக் கொள்ளும் கவுன்சிலர்களுக்குத் தாங்கள் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டதும் நாற்காலிகள் மக்கள் சொத்து என்பதும் தெரியுமா..?*

! தேர்தலுக்குச் செலவழிச்சதைத் திரும்ப சம்பாதிக்க முடியுமா என்ற கணக்குத் தவிர வேறு யோசனை இல்லாதவங்க, நாற்காலி யார் சொத்து என்றா யோசித்துக் கொண்டிருப்பாங்க!

---

❒ ரூ.100 பரிசு பெறுபவர் :
**சித்ரா கிருஷ்ணமூர்த்தி,**
39/4ஏ, சௌராஷ்டிரா நடுத் தெரு.
கும்பகோணம் - 1

★ ரூ.50 பரிசு பெறுபவர் :
**ஜோ. பன்னீர்செல்வம்,**
புது எண் : 57, டாக்டர் அழகப்பா ரோடு, புரசைவாக்கம்,
சென்னை - 600 084.



# ரிஷபன்

அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில்
ரூ.5,000/- மூன்றாம் பரிசு பெறும்
வைரவிழா வைட்டமின் சிறுகதை

# "செங்கிப்பட்டிக்கு ரெண்டு டிக்கட்"



கிழவி பஸ்ஸில் ஏறிடதிலிருந்து அத்தனை பேரின் கவனமும் அவள் மீதுதான்.

ஒரு பித்தளை அண்டா, எவர்சில்வர் குடம் இரண்டையும் என்ஜினுக்கு அருகில் காலியா யிருந்த இடத்தில் பத்திரப்படுத்திவிட்டு தானும் மருமகளும் அமர இடம் தேடினாள்.

டிரைவர் இருக்கைக்குப் பின்புறம் மூன்று பேர் அமர்கிற சீட்டில் கணவன், மனைவியாய் அமர்ந்திருப்பதைப் பார்த்தாள்.

"ஏம்ப்பா... நீ இப்படி வந்தா... பொம் பளைங்க நாங்க அங்கே ஒக்காருவோ முல்ல."

கணவனுக்கு ஏழு மணி நேரப் பயணத்தில் மனைவியை விட்டுப் பிரிந்து அமரத் துளியும் மனசாகவில்லை.

"வேற எடம் பாரு" என்றான் முறைப்பாக.

"பஸ்ஸுல எடம் இருந்திச்சன்னா... நான் ஏன் ஒங்களைப் பிரிக்கப் போறேன்... தயவு பண்ணுப்பா... ஏம்மா... நீயாச்சும் மனசு இரங் கக்கூடாதா?"

கிழவியின் வேண்டுதல் இப்போது மனை வியின் மீது பாய்ந்தது.

பஸ்ஸில் இப்போது இன்னொரு நபரும் ஏறி முன்னால் இருந்த காலி இருக்கைக்கு இடம் போட முயன்றார்.

"இருப்பா. நாங்க நிக்கிறோம்ல" கிழவி அதட்டியது.

வந்தவர் பஸ்ஸில் இடமில்லை என்று இறங்கிப் போக, கிழவி மீண்டும் தன் குரலை உயர்த்தியது.

"அனுசரிச்சு... உக்கார இடம் கொடுப்பா. உந் தாயா இருந்தா இப்படி யோசிப்பியா."

கிழவியின் சுருக்கம் விழுந்த முகம், நேரடிப் பார்வை, குரலின் வயதை மீறிய கண்ணீர், அதை விடவும் வார்த்தைகளில் தொனித்த உறுதி... கணவன் சலிப்புடன் எழுந்துவிட்டான்.

"நல்லாயிருப்பா... ஏ... வடிவு.. ஒக்காரு. நான் இப்படி உக்கார்றேன்."

வடிவு அமர, ஓரத்தில் கிழவி அமர்ந்தது.

சுருக்குப் பையைத் திறந்து அம்பது ரூபாய்த்

தாளை எடுத்து மடியில் வைத்துக்கொண்டு பையை மீண்டும் பத்திரப்படுத்தியது.

"பஸ்ஸுதான் ரொம்பிப் போச்சே... எப்ப எடுப்பாங்களாம்?"

யாரும் பதில் சொல்கிற மூடில் இல்லை. அதேநேரம் எல்லோரும் எதிர்பார்த்த கேள்வியும் அதுதான்.

"பஸ்ஸே வராது. வந்தா ஒரே நேரத்துல மூணு பேரு வருவாங்க."

கிழவியைப் போலவே சதா பேசத் துடிக்கிற இன்னொரு நபரின் குரலும் கேட்டது.

கண்டக்டர் பஸ்ஸுக்கு வெளியே நின்று கொண்டிருந்தார். தனக்கும் அந்த பஸ்ஸுக்கும் எந்த சம்பந்தமும் இல்லை என்பதைப் போல.

டிரைவர் அங்கே வெளியே நின்ற கும்பலில் எந்த மூலையில் நிற்கிறார் என்றே புரிபடாத நிலை.

"ஒரு கோடி... நாளை குலுக்கல்... ஒரு கோடி."

கை நிறைய லாட்டரி சீட்டுகளுடன் பஸ்ஸின் இந்தக் கோடியிலிருந்து அந்தக் கோடி வரை சிறுவன் வந்தான்.

"டிக்கெட்டு எம்புட்டு" என்றாள் கிழவி.

"இருபது ரூபா. பரிசு ஒரு கோடி பாட்டி. அப்புறம் நீ கவலையே பட வேணாம்."

பஸ்ஸில் சிலர் சிரித்தனர். கிழவி இத்தனை வயசில் ஒரு கோடி ரூபாய் பணத்தை என்ன செய்யும் என்ற யோசனையில்.

டிரைவர் இருக்கையில் வந்தமர்ந்து கண்ணாடியில் தன்னையும், பின்னால் அமர்ந்திருந்தவர்களையும் பார்த்துக்கொண்டார்.

"எப்ப எடுப்பீங்க?"

– கிழவி டிரைவரைக் கேட்டது.

"ஏன் பாட்டி, அவசரப்படறே. பொண்ணு பார்க்க வாராங்களா?"

"ஆமாப்பா. யோக்கியமா ஒருத்தனும் அமையாம... இத்தனை வருஷம் கன்னியா காலத்தை ஓட்டிட்டேன். எல்லோரும் உன்னைப் போலவே இருந்தாக்க... நம்ம நாட்டுப் பொண்ணுங்க கதி இப்படித்தான்."

கொல்லென்று பஸ்ஸில் சிரிப்பொலி கிளம்பியது. டிரைவர் முகம் கறுத்தது.

"ஏ... கிழவி. நான் உன்னிய பொண்ணு பார்க்க வாராங்களான்னு கேட்டேனா. பொதுவாத்தானே கேட்டேன்."

"நானும் என்னப்பா சொல்லிட்டேன். பொதுவாத்தானே சொன்னேன். யோக்கியமா உன்னைப் போல இருக்கற கொஞ்ச பேரும் கல்யாணம் ஆனவுங்களா இருக்கறதால மத்த பொம்பளைங்க... புருஷன் அமையாமத் திண்டாடறாங்கன்னுதானே சொன்னேன்."

நச்சென்று பதில் சொன்னதும் கிழவிக்கு



பஸ்ஸில் ஆதரவாளர் கூட்டம் அதிகமானது. இடங் கொடுத்த கணவனும் தன் மனைவியை விட்டு நகர்ந்த துக்கம் மறைந்து சூழலின் கலகலப்பில் ஒன்றிப் போனான்.

"நல்லாப் பேசறீங்க பாட்டி."

"எனக்குத் தெரிஞ்சதை சொல்றேன்பா."

கண்டக்டர் சீட்டு கொடுத்துக் கொண்டே வந்தார். கிழவி அம்பது ரூபாய்த் தாளை நீட்டியது.

"ரெண்டு செங்கிப்பட்டி."

"அங்கே நிக்காது பாட்டி."

"ஏம்பா... ஊரைக் காலி பண்ணிட்டாங்களா?" என்றது அப்பாவியாய்.

"இது இடைநில்லாப் பேருந்து பாட்டி... கண்ட எடத்துல நிக்காது."

"கண்டக்டர் தம்பி... நான் வயசானவ. படிப்பறிவு கிடையாது. தெரியாம இந்த வண்டி போவும்னு நினைச்சு ஏறிப்புட்டேன். பெரிய மனசு பண்ணி எறக்கி வுட்டு. ரெண்டு பேரும் விரைசலாப் போவணும்."

"சொன்னாப் புரியாதா உனக்கு. சட்டு புட்டுனு எறங்கு. வேற டிக்கெட்டு ஏறியிருக்கும். அதையும் கெடுத்துபுட்டே. பஸ்ஸு கிளம்பற நேரத்துல ஒன்னோட ரவுசு பண்ண முடியாது."

"போவுற வழிதானப்பா. எறக்கி வுட்டுட்டுப் போயேன்."

"இது போவாது. எறங்கு."

"தயவு பண்ணுப்பா."

டிரைவர் திரும்பிப் பார்த்தார்.

"என்னப்பா கலாட்டா?"

"செங்கிப்பட்டிப் போவணுமாம். நிறுத்தி இறக்கி வுட்டுட்டுப் போன்னு சட்டம் பேசுது."

"சொல்ல வேண்டியதுதானே. இது பாயிண்ட் டு பாயிண்ட்னு..."

"கிழவி லா பாயிண்ட்ல பேசுது."

"எறக்கி வுடு. நேரமாவுது."

"யப்பா. பெரிய மனசு பண்ணுங்கப்பா.

ஐந்து ரூபாயை எடுத்து அவனிடம் கொடுத்தார்.

வாங்கிக் கொண்ட குருடன், தடவிப் பார்த்து ஐந்து ரூபாய் என அறிந்துகொண்டான். உடனே மீண்டும் அவன் கடவுளிடம் "கடவுளே! நீங்கள் என்னிடம் நேரடியாக வந்து பணத்தைக் கொடுத்திருக்கக் கூடாதா? மனிதனிடம் கொடுத்து அனுப்பியதால் என்னிடம் ஐந்து ரூபாய்தான் வந்து சேர்ந்தது" என்றான்.



தெரியாம ஏறிப்புட்டேன். பொட்டச்சி... படிப் பறிவில்லே."

"ஏறினதுலேர்ந்து இந்தக் கிழவி என்னமா கலாட்டா பண்ணுது!"

"பாவம். ஆம்பளைத் துணை இல்லே. விவரம் புரியாம ஏறிடுச்சு. என்ன பெரிய பாயிண்ட் டு பாயிண்ட். ரெண்டு பேரை அவசரத்துக்கு நிறுத்தி எறக்கி வுட்டாதான் என்ன?"

**ப**ஸ்ஸில் கூட்டம் கட்சிப் பிரிந்து இரு தரப்பும் பேசியது.

கிழவி விரல்கள் நடுங்க பணத்தாளை நீட்டிக் கொண்டிருந்தது. வடிவு நடுங்கிப் போய் அமர்ந்திருந்தான், கையில் ஒரு மஞ்சள் பையைப் பற்றிக் கொண்டு.

"பஸ்ஸை எடுங்கப்பா. நேரமாவுதில்லே."

அலுப்பான சில பயணிகள் முனகினர்.

"கிழவியை எறங்கச் சொல்லுங்க. பஸ்ஸு ஒடனே கெளம்பிரும்" என்றார் டிரைவர்.

"இது என்னய்யா கூத்து. உங்க பிரச்னைக்கு எங்களை ஏன் தொல்லை பண்றீங்க."

"கண்ட எடத்துல நிறுத்தி இறக்கிவுட்டா... நீங்களே புகார் கொடுப்பீங்க. இது என்ன ரூட்டு... இன்ன தேதி... இன்ன டிரைவரு... பஸ்ஸைத் தகாத எடத்துல நிறுத்தினாருன்னு... மெமோ... சார்ஜ்ஷீட்னு நாங்க நாயா அலையணும். அப்படித்தானே."

டிரைவர் சீறினார்.

"போனதரம்... யாரோ கர்ப்பிணிப் பொண்ணு வலியால துடிச்சதுன்னு நிறுத்தி எறக்கி விடப் போக... என்னமா அலைய வுட்டாங்க. தப்பான எடத்துல இறக்கி. பிரசவம் கஷ்டமாயிருச்சுன்னு... நிறுத்தச் சொன்னதே கூட வந்தவங்கதான்" என்றார் கண்டக்டர் தன் பங்குக்கு.

பஸ்ஸுக்குள் உஷ்ணம் ஏகிறிக் கொண்டிருந்தது. காற்றோட்டம் இல்லாததாலும் பிரச்னைக்குத் தீர்வு கிட்டாததாலும்.

"ஏய் கிழவி... உன்னாலதான் இப்ப பிரச்னை, பஸ்ஸு போவாதுன்னா இறங்குவியா?"

தாமதமாகிற எரிச்சலில் பயணிகளில் சிலர் கிழவியை நோக்கிக் கோபத்தைத் திருப்பினார்கள்.

கிழவி பதில் பேசவில்லை. தனக்குச் சாதகமாய் ஏதாவது வழி பிறக்காதா என்ற நம்பிக்கையுடன் அமர்ந்திருந்தது.

"லக்கேஜைக் கீழே போடுங்க. தன்னால எறங்கிப் போயிரும்" என்றார் ஒருவர் முரட்டுத்தனமாய்.

கிழவி அசையவில்லை. என்னதான் நிகழும் என்று பார்ப்பது போல.

"அந்த அண்டா... குடம் அவங்களதுதான்."

"யாரோ அடையாளம் காட்டினார்கள்.

"கண்டக்டர், எடுத்து கீழே வீசுங்க."

பாவச்சுமை கண்டக்டருக்கு என்று தீர்மானித்தது போல தீர்ப்பு வழங்கப்பட்டது.

கண்டக்டர் இதற்குள் மற்றவர்களுக்கு டிக்கட் போட்டு முடித்துவிட்டார். அடுத்ததாய் நின்ற பஸ்ஸிலிருந்து கண்டக்டர் இரைந்தார்.

"உங்க டயம் என்னப்பா? ஏன் இன்னும் நிக்கறீங்க?"

"இவன் வேற... விவரம் புரியாம."

கண்டக்டர் ஜன்னல் வழியே தலையை நீட்டிப் பேசினார்.

"பஸ்ஸுக்குள்ளே பிரச்னைப்பா."

"எந்தப் பிரச்னையா இருந்தாலும் டயத்துக்கு வண்டியை எடுத்துக்கிட்டு... வழியில போயி பேசிக்குங்க. அடுத்த டிரிப் நாங்க போக வேணாமா?"

"ஏய் கிழவி... உன்னால எவ்வளவு தொல்லை பாரு... சனியன்.. எறங்கித் தொலையாம ராவடி பண்ணிக்கிட்டு."

"எறக்கி வுடுங்கப்பா... என்னவோ சமாதானப் பேச்சு பேசிக்கிட்டு."

"வயசான பொம்பளன்னு பார்க்கிறேன்."

"அதுக்கேத்த மரியாதை இல்லியே அதுகிட்டே... அழிச்சாட்டியம் பண்ணுது."

"ஏதாச்சும் பண்ணுங்க."

**அ**டுத்த பஸ்ஸிலிருந்து ஹார்ன் பலமாக ஒலிக்கத் தொடங்கியது.

"பஸ்ஸை எடு."

"தெரியாத்தனமா இதுல ஏறிபுட்டேன்."

"விவரங் கெட்ட ஜன்மங்க. எப்படி வீம்பு புடிக்குது பாரேன்."

பஸ்ஸில் இரைச்சல்கள் அதிகப்பட்டுக்

கொண்டே போனது.

அடுத்த பஸ் கண்டக்டர் இறங்கி வந்து கூச்சல் போட்டார்.

"இப்ப எடுக்கப் போறீங்களா... இல்லே... நான் புகார் கொடுக்கவா?"

டிரைவர் முகத்தில் கோபம் தகித்தது.

"என்னடா பண்றே...? கிழவியைத் தள்ளி வுடுறா கிழே."

கண்டக்டர் மெல்ல அவர் அருகில் போனார்.

"வேணாம்ணே. இப்பதான் சஸ்பென்ஷன் முடிஞ்சு ட்யூட்டி ஜாயின் பண்ணீங்க... மறுபடி எதுக்கு இன்னொரு தகராறு..?"

"ஸ்டாப் இல்லாத எடத்துல நிறுத்தச் சொல்றியா..?"

"பிரச்னை வேணாம்னு பார்த்தேன். பஸ்ஸுல ரெண்டு பேர் கிட்டே விலாசம் வாங்கிக்குவோம்... வேற வழி இல்லாமத்தான் நிறுத்தினோம்னு. வளர்த்தாமப் போயிருவோம்ணே."

"போலீஸ் ஸ்டேஷன்ல ஆஜராகி கையெழுத்துப் போட வர்றப்ப கூட பிக்பாக்கெட் அடிக்கணுமா?"

"பின்னே... ஸ்டேஷனுக்கு வெறுங்கையோட வர முடியுங்களா?"

- அம்பை தேவா

டிரைவர் பஸ்ஸைக் கிளப்பிய வேகத்தில் அவர் சீற்றம் தெரிந்தது. கண்டக்டர் டிக்கட்டுகளையும் மீதிச் சில்லறையையும் கிழவியிடம் விசிறினார்.

"கிழவி பேசியே ஜெயிச்சிருச்சு... பாரேன்."

யாரோ சொன்னது பஸ்ஸுக்குள் கேட்டது.

"ஓம் மாமியா... சரியான அழுத்தம். என்னமா சாதிச்சிருச்சு."

வடிவு தோளைத் தொட்டு பின் சீட்டுப் பெண்மணியின் பாராட்டு.

"ஆ...ஆங்."

வடிவு திரும்பிப் பார்த்து முனகியது விநோதமாய் இருந்தது.

பின் சீட்டுப் பெண்மணி சங்கடத்துடன் வடிவைப் பார்த்தாள். கிழவி திரும்பி அவளைப் பார்த்தாள்.

"அவளுக்குப் பேச வராது தாயி... ஊமைச்சி."

"எ...என்ன?"

பஸ் இதற்குள் காம்பவுண்டை விட்டு விலகி பிரதானச் சாலைக்கு வந்து செங்கிப்பட்டி ரூட்டில் ஓட ஆரம்பித்திருந்தது.

"ஆமா. தாலி கட்டறப்ப... அவங்க வீட்டுச் சீரும்... இந்தப் பொண்ணோட ஒடம்பும் எம் புள்ளைய மயக்கிருச்சு... மோவம் முப்பது நாளுன்னு சும்மாவா சொன்னாங்க. இவ பேசற அழகை கிழுந்துட்டான்னு எம்புள்ளைக்குச் சலிப்பு தட்டிப் போயி.... பேசற இன்னொரு சிறுக்கி பின்னால போவ ஆரம்பிச்சுட்டான்."

கிழவி நிறுத்தாமல் பேசிக் கொண்டே போனாள். குமுறல் குரலில் கொப்பளித்தது.

"பக்கத்துலே யாரோ பாவப் பட்டவங்க தகவல் அனுப்பி வுட்டாங்க. இந்தப் பொண்ணைச் சாவடிக்கப் போடறதுக்குள்ளே வந்து கூட்டிக் கிட்டுப் போயிருன்னு."

கிழவி முந்தானை ஈரம் பட்டு உறிஞ்சிக் கொண்டது.

"பேசி செயிச்சுபுட்டேன்னு சொன்னீங்களே... எம் பேச்சு எம் புள்ளைகிட்டே எடுபடலியே...! என்னியும் சேர்த்து அடிக்க விரட்டிப்புட்டான் அந்தப் பாவிப் பய. எம் பின்னால வாடின்னு கூட்டிக்கிட்டு வந்தேன். எங் கட்டைசிக் காலம் வரை நான் பார்த்துக்குறேன்... பின்னால எஞ்சொத்து உனக்குன்னு."

பஸ்ஸில் அதற்குள் கிழவி சொன்னது முழுமையும் பரவிக்கொண்டிருந்தது.

"பொட்டச்சிதானேன்னு பல்லுல போட்டு நாக்கை வெட்டற மனுஷப் பொறவி பெருத்த ஊராப் போச்சு. என்னிக்காவது நியாயம் எடுபடாமயாப் போவும்."

செங்கிப்பட்டியில் வழக்கத்தை மீறி அந்தப் பேருந்து நின்றபோது, சில பயணிகளே லக்கேஜை இறக்கி வைக்க, டிரைவர் நிதானித்து வண்டியை எடுக்க, கிழவியையும், மருமகளையும் பார்த்தபடி பயணிகள் வீற்றிருக்க... இடை நில்லாப் பேருந்து மீண்டும் பயணத்தைத் தொடர்ந்தது. ○

# சூப்பர் தமாஷுங்க!

✉ 'சு.சுவாமி சொல்லாத கமெண்ட்' ஒவ்வொன்றும் சூப்பர் தமாஷுங்க!
மதுரை, என். பாலகிருஷ்ணன்

✉ கல்கியை முதல் பக்கத்திலிருந்து, கடைசி பக்கம் முடிக்கும் வரை, என்கிட்டே யாரும் நெருங்கவேயில்லை! என்ன என்கிறீர்களா? புன்னகை ஸ்பெஷலாச்சே! பக்கத்துக்குப் பக்கம் வாய் விட்டுச் சிரித்து, படித்துக்கொண்டு இருந்தேன்.
காஜாநகர், இ. ஹஸன்.

✉ 'சாமுராய்' விமர்சனத்தில் அனைத்தும் பிளஸ் பாயிண்டுகளாகக் கூறிவிட்டு, முடிவில் 'ஆவரேஜ்' என்று குறிப்பிட்டது முரண்பாடு. விஷ்ணுவல்தாசன் சரியான 'கஞ்சூஸாக' இருப்பார் போலிருக்கிறது.
வடவள்ளி, ஆர். ராமசுப்ரமணியன்.

✉ 'மோடியின் மோசடி' என்ற தலையங்கம் இன்று சட்ட சிக்கலில் தவிக்கும் குஜராத் சட்டமன்றத்தின் அசந்தர்ப்ப, அகால கலைப்பு பற்றிச் சிறப்பாக அலசியுள்ளது. கோத்ரா கலகத்துக்குப் பின் நடந்த மதவெறி படுகொலைகளுக்கு முதல்வர் மோடியின் செயலும் பேச்சும் துணை புரிந்தன என்பது அறியப்பட்டதே. பின்னர் கலவரங்களைக் கடுமையான நடவடிக்கைகள் மூலம் கட்டுப்படுத்தி இன்று அமைதியை ஏற்படுத்தி இருந்தாலும்கூட, மைனாரிட்டி மக்கள் இன்னும் முழுமையான நம்பிக்கைகளைப் பெற முடியாமல் இருக்கிறார்கள் என்பது உண்மை.
கணபதி அக்ரஹாரம், ஜி. ராமதாஸன்

✉ ராஜ்ய சபாவில் 'தமிழில்தான் பேசுவேன்' என்று அடம் பிடித்த எஸ்.எஸ். சந்திரன், 'நான் இப்போது யு.கே.ஜி' என்று சொல்வதுதான் தமிழ்ப் பற்றா...?
நாமக்கல், பானு.

✉ 'வைரவிழா சிறப்பிதழ்' கல்கியின் மறு அவதாரம் 'கல்கி II' ஆக உருவாகி, பக்கத்துக்குப் பக்கம் வித்தியாசமாக இருந்தது.
தஞ்சாவூர், எஸ். இளங்கோ.

✉ 'தகவல் தொடர்பு மிகவும் முன்னேறி இருக்கும் இன்றைய நிலையில், நிர்வாக வசதிக்காக தமிழகம் பிரிக்கப்பட வேண்டும் என்ற ராமதாஸின் கோரிக்கையில் நியாயமேயில்லை. சுயநலமிக்க அவர் யோசனை புறக்கணிக்கப்பட வேண்டிய ஒன்று!
ஸ்ரீரங்கம், எஸ். கௌரிலக்ஷ்மி.

✉ 'ஊசியிலை மரம்' கடைசி வரிகளில் உலுக்கி எடுத்து விட்டது. பல சிறப்புக்களையும் பெருமைகளையும் இந்த மலேசிய நண்பர் பெற வேண்டும். 'தமிழ் கூறும் நல்லுலகம்' என்ற சொற்றொடரின் நிஜமான பொருள் இப்போது தான், இந்தக் கதையைப் படித்தபோதுதான் புரிந்தது.
சென்னை - 97 சுப்ர.பாலன்

✉ முதல் பரிசு பெற்ற 'தமாஷ் ஹைகூ'வைப் படித்தவுடன் எழுந்த சிரிப்பு அடங்க வெகு நேரமாகியது!
மதுரை-16, பி.எம். வள்ளி.




வட்டமேஜை



'' 'பெண்கள் சுதந்திரம்' பற்றி ஏதாவது மேட்டர் பண்ணுங்க'' என்று ஆசிரியர் சொன்னதை, பெண்கள் தந்திரம்' என்று அரையும் குறையுமாகக் காதில் வாங்கிக் கொண்டதன் விளைவு இதோ!

**ப**ஸ்ஸில் கைக்குழந்தையுடன் ஏறும் பெண்கள் செய்யும் தந்திரம் இது. ஆண்கள் வரிசையோரம் போய் நின்று கொண்டு, பாலன்ஸ் தவறுவது போல தடுமாறுவார்கள். அப்படியும் எழுந்து சீட் தராமல் போனால், "சார்... கொஞ்சம் வைச்சுக்கோங்க" (அல்லது) "அங்கிள்கிட்டே போம்மா" என்று குழந்தையைக் கொடுத்து விடுவார்கள். அது சொல்லி வைத்தது போல, அழுது அமர்க்களம் பண்ணும். அந்த அப்பாவி ஆண்மகன் வேறு வழியே இல்லாமல் இருக்கையைத் தாரை வார்த்துக் கொடுத்துவிட்டு 'பே' என்று நிற்பார்.

**தீ**பாவளி, பொங்கல், பிறந்த நாள், கல்யாண நாள்னு எல்லாமே வந்து போயாச்சு! புது டிஸைன் புடைவை ஒண்ணு, தானாகவே வந்து பெண்களின் கண்ணில் பட்டு, ஆசையைக் கிளப்பிவிட்டால், பாவம் என்னதான் செய்வார்கள்.

கணவனின் குடும்பத்தில் இறந்து போன பெண்களைத் துணைக்கு அழைத்துக் கொள்வார்கள்.

"ஏங்க... உங்க அம்மாவுக்குப் படையல் வைக்கணும்னு ரொம்ப நாளா நேர்த்தி ஒண்ணு நிக்குதே!" என்று கணவனின் சென்டிமென்டைக் கிளறிவிட்டு, இரண்டு சொட்டு கண்ணீர் விட்டு, 'ஓ' என்று அழுவார்கள். பூ, பழம், வடை, பாயசத்துடன் புதுப் புடைவையை, தன் வாழ்நாளில் ஜாக்கெட்டே போடாத மாமியாருக்கு, மேட்சிங் ஜாக்கெட், பெட்டிக் கோட்டோடு வாங்கிப் படைத்து புண்ணியம் தேடிக் கொள்வார்கள்.

**இ**ந்தத் தந்திரத்துக்கு,



# பஞ்ச தந்திரம்

உருக்க டெக்னிக் என்று பெயர். சம்பளம் வாங்கின முதல் வாரத்தில் நடக்கும்.

"தோ பாருங்கடா! அப்பாவுக்குக் கிடைக்கிறதே வாரத்துக்கு ஒரு நாள்தான். அன்னிக்கும் ஹோட்டல், சினிமா, பீச்'னு படுத்தி எடுத்தீங்கன்னா, எனக்குக் கெட்ட கோபம் வரும். பாவம்... அவருக்கும் ரெஸ்ட் வேணாமா? என்று புருஷன் தலையில் குச்சி ஐஸ், கோன் ஐஸ், கப் ஐஸ் எல்லாம் வைத்து, அவன் திணறிக் கொண்டிருக்கும் போதே, 'ஐஸ்பார்' போல ஒரு மேட்டர் இறங்கும்.

"ஆகஸ்ட் பதினைஞ்சு. நம்ப எல்லாருக்குமே லீவு. மகாபலிபுரம் போயிட்டு, அப்படியே வி.ஜி.பி. முட்டுக்காடு, முதலை பண்ணை, கிண்டி பார்க் போலாம். ஆனா, இன்னைக்கு வாயே திறக்கக் கூடாது. பாவம், அப்பா... ரிலாக்ஸ் பண்ணிக்கட்டும்."



பழைய துணி போட்டு, எவர்சில்வர் பாத்திரம் சேர்க்கும் பெண்கள் செய்யும் தந்திரம் இது.

ஒரு வேட்டி, இரண்டு பேண்ட், ஒரு புடைவையை எடுத்து, தனியாக வைத்துவிட்டு, மற்ற துணிகளை எல்லாம் மூட்டை போல கட்டி வந்து பாத்திரக்காரரிடம் கொடுப்பார்கள்.

"என்னாம்மா... எல்லாமே கந்தல் துணியா இருக்கு. இதுக்கு இந்த டப்பாதான் வரும்'னு எடுத்துக் காட்டுவார். ஏகப்பட்ட பேரத்துக்குப் பிறகு, "உள்ளே போய்த் தேடி எடுத்து வருவது போல பாவ்லா செய்து, தனியாக எடுத்து வைத்த துணியைக் கொடுத்து பேரம் முடிப்பார்கள்.

அப்போதும் ஆப்பிள் தூக்கு தருவதில் பாத்திரக்காரர் தயக்கம் காட்டினால், கடைசி ஆயுதமாக, "தோ...பார்... எங்க வீட்டுக்காரர் வர்ற டயமாச்சு... அவருக்கு இதெல்லாம் பிடிக்காது. சத்தம் போடுவாரு... நீ இடத்தை காலிபண்ணு" என்று கம்மாணாச்சகம் பயம் காட்ட... ஆப்பிள் தூக்கு உடனே கைமாறிவிடும்!

பஞ்ச தந்திரம்'னு தலைப்பு வைச்சுட்டு, நாலு தந்திரம்தானே இருக்கு. இன்னொன்று எங்கே? என்று தேட வேண்டாம். அஞ்சாமல் நாலையே அஞ்சாக்கிக் காட்டறதுதான் அஞ்சாவது தந்திரம்!

– அனு

படங்கள்: பிள்ளை

பித்ருக்களுக்குத் தர்ப்பணம் செய்வதால் நம் குலம் தழைக்கும்!

# பித்ரு தர்ப்பண க்ஷேத்ரமாக விளங்கும் இராமேஸ்வரத்தில் நெய் தீபமேற்றி அன்னதானம் செய்வோம் வாருங்கள்!

ஆன்மீக அன்பர்களின் வேண்டுகோளுக்கிணங்க ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகளின் அருளாசியுடன் பெருவாழ்வும், பேரின்பமும் அளிக்கும் புனித க்ஷேத்ரமான இராமேஸ்வரத்தில் நெய் தீபமேற்றி அன்னதானம் செய்வதில் நீங்களும் பங்குகொள்ள அன்புடன் அழைக்கிறோம்!

பேரன்புடையீர்! வணக்கம். அருள்மிகு ஸ்ரீ இராமநாதசுவாமி தங்களுக்கு அனைத்து நலன்களையும் தந்தருளப் பிரார்த்திக்கிறோம்.

பன்னிரெண்டு ஜோதிர்லிங்க ஸ்தலங்களுள் ஒன்றான இராமேஸ்வரத்தில் ஸ்ரீ பர்வதவர்த்தினி சமேத ஸ்ரீராமநாதசுவாமி உடனிருந்து அருள்பாலிக்கிறார். மூர்த்தி, தீர்த்தம், தலம் மூவகையாலும் இராமேஸ்வரம் சிறப்புற்று சிவவிஷ்ணு ஸ்தலமாக பிரகாசிக்கிறது. மாங்கல்ய தோஷம், புத்திர தோஷம், செவ்வாய் தோஷம், நாகதோஷம் போன்ற எல்லாவிதமான தோஷங்களுக்கும் பரிகாரத்தலமாக இராமேஸ்வரம் விளங்குகிறது. இத்தகைய சிறப்புமிக்க புண்ணிய க்ஷேத்ரமான இராமேஸ்வரத்தில் நேரில் சென்று நெய் தீபமேற்றி அன்னதானம் செய்ய இயலாத அன்பர்களுக்காக, "ஸ்ரீ அன்னபூரணி அன்னதான ஸேவா டிரஸ்ட்" மூலம் அன்னதானத்திருப்பணி நடைபெறுகிறது. புண்ணியபூமி இராமேஸ்வரத்தில் ஏழைகளுக்கும், அடியார்களுக்கும் அன்னதானம் அளிக்கும் பணியிலும், குடும்பம் நலம் பெற நெய் விளக்கேற்றும் பணியிலும் நாமும் பங்குகொண்டோம் என்ற ஆத்ம திருப்தியை அடைய இது ஒரு சிறந்த வாய்ப்பாகும்.

★ தங்கள் சார்பாக நெய் தீபமேற்றி அன்னதானம் செய்ய தங்களால் இயன்ற நன்கொடையை அனுப்பலாம்.
★ ரூ.500/ - அனுப்பும் ஆன்மிக அன்பர்களுக்கு, 'ஆன்மீகம்' மாத இதழ் ஒரு ஆண்டிற்கு அனுப்பி வைக்கப்படும்.
★ ரூ.1000/ - அனுப்பும் ஆன்மிக அன்பர்களுக்கு, 'ஆன்மீகம்' மாத இதழ் இரண்டு ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.
★ ரூ.5000/ - அனுப்பும் ஆன்மிக அன்பர்களுக்கு, 'ஆன்மீகம்' மாத இதழ் பத்து ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.

அன்னதானத்திற்கும், நெய் தீபம் ஏற்றுவதற்கும் நன்கொடையை அனுப்புவோர், திருமண நாள், பிறந்த நாள் மற்றும் திதி நாள் மேலும் தாங்கள் எதை நினைத்து அன்னதானம் செய்ய விரும்புகிறீர்கள் என்பதைத் தெரிவித்தால் அதன்படி தாங்கள் விரும்பும் மாதத்தில் அமாவாசை அன்று இராமேஸ்வரத்தில் நெய் தீபமேற்றி அன்னதானம் செய்கிறோம். அன்னதானத்திற்கு நன்கொடையாக ரூ.1000, ரூ.5000 அனுப்பும் ஆன்மிக அன்பர்களுக்கு இராமேஸ்வரத்தில் பூஜிக்கப்பட்ட 'கோடி தீர்த்த' சொம்பும், வலம்புரி சங்கும் ஸ்ரீ பர்வதவர்த்தினி சமேத ஸ்ரீ இராமநாதசுவாமி வண்ணப்படமும், சிறிய அளவில் சிவபுராண புத்தகமும் அனுப்பி வைக்கப்படும்.

★ ரூ.5000/- அனுப்பும் ஆன்மீக அன்பர்கள் சார்பாக, ஒவ்வொரு மாதமும் அமாவாசை அன்று இராமேஸ்வரத்தில் நெய் தீபம் ஏற்றி அன்னதானம் செய்து தொடர்ந்து பத்து வருடங்கள் பிரசாதமும், "ஆன்மீகம்" மாத இதழும் தங்களுக்கு அனுப்பி வைக்கப்படும். மேலும் தாங்கள் விரும்பும்போது சந்ததியினரின் முகவரிக்கும் மாற்றம் செய்து தருகிறோம். ஆன்மீக அன்பர்கள் ஒவ்வொருவரின் பூஜை அறையும் புனிதம் பெறவேண்டும் என்ற எண்ணத்துடன் ரூ.5000 செலுத்துபவர்களுக்கு 336 பக்கங்களுடன் கூடிய பெரிய அளவில் உள்ள "ஸ்ரீமத் இராமாயணம்" புத்தகத்தை (தமிழில்) அனுப்பி வைக்கிறோம்.

குடும்பத்தில் தாய் தந்தையர்கள், மூதாதையர்களுக்கு இராமேஸ்வரத்தில் நேரில் சென்று 'தர்ப்பணம்' செய்ய முடியாதவர்களுக்காக, சாஸ்திரிகளைக் கொண்டு "ஸ்ரீ அன்னபூரணி அன்னதான ஸேவா டிரஸ்ட்" மூலம் தர்ப்பணம் செய்யப்படுகிறது. பித்ருக்களைக் குறித்து இராமேஸ்வரத்தில் செய்யப்படும் தர்ப்பணம் செல்வம், கீர்த்தி, ஆயுள், ஸ்வர்க்கம் முதலிய நன்மைகளை அளிக்கும். எதிரிகளை விலக்கும். தன் வம்சம் தழைத்தோங்கச் செய்யும். மறைந்த முன்னோர்களுக்கு தர்ப்பணம் செய்ய ரூ.750/- அனுப்பும்போது யாருக்கு தர்ப்பணம் செய்ய விரும்புகிறீர்களோ அவரின் பெயர், திதி மற்றும் கோத்ரம் போன்ற விபரங்களையும் அவசியம் தெரிவிக்குமாறு கேட்டுக் கொள்கிறோம். மூர்த்தி, ஸ்தலம், தீர்த்தம் ஆகிய மூவகையாலும் சிறப்பு வாய்ந்த இராமேஸ்வரத்தில் தர்ப்பணம் செய்து கிடைத்தற்கரிய பேற்றைப் பெற்று க்ஷேமமாக வாழ அழைக்கிறோம்.

இராமேஸ்வரத்தில் அமாவாசையன்று அன்னதானம் செய்ய விரும்பும் ஆன்மிக அன்பர்கள் சார்பாக நெய் தீபம் ஏற்றுகிறோம். தாங்கள் என்ன வேண்டுதலுக்காக தீபம் ஏற்ற வேண்டும் என்பதையும், உங்கள் பெயர், நட்சத்திரத்தையும் குறிப்பிட்டு எங்களுக்கு எழுதி அனுப்பினால் அதன்படி அமாவாசையன்று தீபம் ஏற்றி தங்களுக்கு பிரசாதம் அனுப்பி வைக்கப்படும். தீபமேற்றும் பணியிலும், அன்னதானப் பணியிலும் ஈடுபட விரும்பும் ஆன்மிக அன்பர்கள் தங்கள் நன்கொடையை Cheque/D.D/M.O மூலம் (Sri Annapoorani Annadhana Seva Trust, Chennai - 4) என்ற பெயருக்கு எடுத்து கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பி வைக்கவும். பெருவாழ்வும், பேரின்பமும் அளிக்கும் புண்ணிய க்ஷேத்ரமான இராமேஸ்வரத்தில் அன்னதானப் பணியும், தீப வழிபாட்டுப் பணியும் தெய்வீகப்பணியாக தழைத்திட உதவுமாறு அன்புகூர்ந்து வேண்டுகிறோம்.


ஸ்ரீ பர்வதவர்த்தினி

*Cheque/D.D/M.O* அனுப்ப வேண்டிய முகவரி:

## ஸ்ரீ அன்னபூரணி அன்னதான ஸேவா டிரஸ்ட்

## SRI ANNAPOORANI ANNADHANA SEVA TRUST (Regd.)

68, Nadu Street, (Opp: Sri Kapaleeswarar Temple), Mylapore, Chennai - 600 004.

Tel: 4959302 Fax: (044) 4616311 E-mail: sivasiva@vsnl.net


ஸ்ரீ இராமநாதசுவாமி

பித்ருக்களுக்கு தர்ப்பண பூஜை செய்வது ஒவ்வொருவரின் இன்றியமையாத கடமையாகும்!

# யூத்



படத்திற்குப் படம் வித்தியாசமான கதைகளையும், அறிமுகக் கதாநாயகிகளையும் நம்பிக் களமிறங்கி ஜமாய்க்கும் இளம் நடிகர் பட்டியலில் விஜய்க்குத்தான் முதலிடம். ஆனால் இந்த முறை இவர் தேர்ந்து கொண்டது ஒரு கதையற்றக் கதை.

நட்புடன் பழகும் நாயகியின் திருமண நிச்சயத்தன்று, "விஷ்யூ எ ஹாப்பி மேரிட் லைப்" என்று வாழ்த்திவிட்டு வர வேண்டிய விஜய், "ஐ லவ் யூ" சொல்லிவிட்டு வந்து கூலாக ஒருதலைக் காதலில் அடம் பிடிக்கிறார். அதன் பிறகு 'அய்யோடா சாமி!' என்று கிளைமாக்ஸையும் மிகச் சுலபமாய் யூகிக்க முடிகிறது! மெலோடிராமாவால், விஜயின் ரசிகர் அல்லாத ரசிகர்களைப் புரட்டிப் புரட்டியெடுத்துப் புண்ணியம் கட்டிக் கொள்கிறார் இயக்குனர். எப்போதும் அளவாக வசனம் பேசி, நிறைவாக நடிக்கும் விஜய், இந்தமுறை நடிப்பை மறந்து விட்டு மைல் நீள வசனங்களைப் பேசி வெறுப்பேற்றி விடுகிறார்.

விஜய் பேசும்போது போரடிக்கும் பிரசன்னகுமாரின் வசனங்கள், யுகேந்திரனுக்குக் கை கொடுத்துவிடுகின்றன. காரணம் அவருக்கு மட்டும் நறுக் நறுக்கென்று குண்டூசிக் கூர்மையோடு வார்த்தைகளை வார்த்திருக்கிறது அவரின் பேனா. அறிமுகநாயகி சந்தியா கொஞ்சம் நடித்து, நிறைய சிரித்து, ஏதோ பரவாயில்லை என்ற ரீதியில் தேறி விடுகிறார்.

கருத்து கந்தசாமியாக அறிமுகமாகி உருப்படியான ஒரு கருத்தையும் உதிர்க்காமல், ஓபிசிட்டி, சொட்டைத் தலை கிண்டலில் ஈடுபடுவதை நல்ல (?) நகைச்சுவை எனத் தொடரும் விவேக், சின்னக் கலைவாணர் பட்டத்தைத் துறந்து விடுவதே நல்லது! மாறாக விவேக் தரும் இடைவெளியில் மொடாக் குடியராக வரும் வி.எம்.ஹனிபா நம்மை மெய்யாலுமே சிரிக்க வைக்கிறார்.

படத்தில் தனித்துத் தெரியும் ஒரே சிறப்பம்சம் உடைகள். கடைகோடி காமெடியனுக்கும் கூட சூப்பர் காஸ்ட்யூம்களைத் தந்த அந்த உடையலங்கார நிபுணர் யாரோ?

இயக்குனர் வின்சென்ட் செல்வா கவனிக்க! ஆஸ்கர் விருது பெற்ற 'லைஃப் ஈஸ் பியூட்டிஃபுல்' ஆங்கிலப் படத்திலிருந்து தொப்பி மாற்றிக் கொள்ளும் ஐடியாவை இப்படி பச்சையாக காப்பியடித்து தமிழ்ப்படைப்பாளிகள் மானத்தை வாங்கியிருக்க வேண்டாம்! — விஷுவல்தாசன்

● ஆவெரஜ்

# சிவகாமியின் சபதம்

## ஐம்பத்து மூன்றாம் அத்தியாயம்

## பாரவி இட்ட தீ

மகேந்திர சக்கரவர்த்தி சபா மண்டபத்துக்குள்ளே பிரவேசித்த போது அவ்விடத்தில் ஏற்பட்ட ஆரவாரத்தையும் கோலாகலத்தையும் சொல்லி முடியாது.

சற்று நேரம் வரையில் ஒரே ஜய கோஷமும் எதிரொலியுமாயிருந்தது.

மாமல்லர் பாய்ந்து சென்று மகேந்திர பல்லவரைத் தழுவிக்கொண்டார். மந்திரிகளும் அமைச்சர்களும் கோட்டத் தலைவர்களும் சம்பிரதாய மரியாதைகளை மறந்தவர்களாய்ச் சக்கரவர்த்தியைச் சூழ்ந்து கொண்டார்கள். ஏக காலத்தில் பலர் பேச முயன்றார்கள்.

தளபதி பரஞ்சோதி மட்டும் சற்றுத் தூரத்தில் ஒதுக்குபுறமாக நின்றார். அவருடைய கண்களிலே வெட்கத்தின் அறிகுறி காணப்பட்டது. "நான் கூட ஏமாந்து போனேனல்லவா? சக்கரவர்த்தியைப் பற்றி இவ்வளவு தெரிந்திருந்தும், இவர் பகைவர்களால் சிறைப்பட்டிருக்கக் கூடும் என்று நம்பி விட்டேனல்லவா?" என்ற எண்ணத்தினால் அவ்வீர வாலிபர் வெட்கமடைந்தார் போலும்!

ஆரவாரம் சற்று அடங்கியதும், மகேந்திர சக்கரவர்த்தி சபையோரைச் சுற்றி வளைத்துப் பார்த்து, "ஏது, எல்லாரும் ஒரே குதூகலமாயிருக்கிறீர்கள்? உங்களுடைய உற்சாகத்தைப்

அமரர் கல்கி

பார்த்தால், யுத்தத்திலேயே ஜயித்து விட்டது மாதிரி தோன்றுகிறதே? நமது கோட்டைத் தளபதி மட்டும் சிறிது வாட்டமடைந்து காணப்படுகிறார்!" என்றபோது எல்லாருடைய கண்களும் பரஞ்சோதியை நோக்க, அவருடைய வெட்கம் இன்னும் அதிகமாயிற்று.

முதன் மந்திரி சாரங்கதேவர், "பல்லவேந்திரா! தாங்கள் வருவதற்கு ஒரு வினாடி நேரத்துக்கு முன்னால் தான், நம் சைனியத்தைக் கோட்டைக்கு வெளியே கொண்டு போய்ப் புலிகேசியுடன் போர் நடத்துவதாக நாங்கள் இங்கே தீர்மானித்திருந்தோம். தங்களுடைய வரவினால் அதற்கு இடமில்லாமற் போய்விட்டதே என்று நமது கோட்டைத் தளபதிக்கு வருத்தமாயிருக்கலாம்!" என்றார்.

"என்ன? என்ன? நம்முடைய சைனியத்தைக் கோட்டைக்கு வெளியே கொண்டு போவதாக உத்தேசமா? இந்த அபூர்வமான யோசனையை யார் செய்தது? சேனாதிபதி எப்படி என்னுடைய கட்டளையை மீறித் துணிந்தீர்? உமக்குக் கூட என்னிடம் நம்பிக்கை இல்லாமல் போய்விட்டதா?" என்று பல்லவேந்திரர் சிம்ம கர்ஜனை போன்ற குரலில் கேட்க, சேனாதிபதி கலிப்பகையார் தாழ்ந்த குரலில், "பிரபு! தாங்கள் பகைவர்களால் சிறைப்பட்டிருப்பதைக் கேட்ட பிறகு நாங்கள் எப்படிக் கோட்டைக்குள்ளே, பதுங்கிக் கொண்டிருக்க முடியும்? தங்களை விடுவிக்க முடியாத பல்லவ சைனியம் இருந்தென்ன, இல்லாமற் போயென்ன?" என்றார்.

"ஆகா! நான் பகைவர்களால் சிறைப்பட்டிருந்தேனா? இது என்ன கதை?" என்று சக்கரவர்த்தி கேட்ட போது, அங்கே கூடியிருந்தவர்களின் ஆச்சரியத்திற்கு அளவே இல்லாமல் போய்விட்டது.

முதன் மந்திரி சாரங்கதேவர், சற்று முன்னால் சக்கரவர்த்தியின் தூதன் என்று சொல்லிக் கொண்டு ஒருவன் வந்ததையும், அவன் கூறிய அதிசயமான செய்தியையும், அதன் மேல் தாங்கள் தீர்மானித்ததையும் சுருக்கமாகக் கூறினார்.

எல்லாவற்றையும் கேட்டு விட்டு, "ஆகா! நாகநந்தியடிகள் நான் நினைத்ததற்கு மேலே கெட்டிக்காரராயிருக்கிறார். சற்று நேரம் தாமதித்து வந்திருந்தேனானால் காரியம் அடியோடு கெட்டுப் போயிருக்குமே!" என்றார் மகேந்திர சக்கரவர்த்தி.

"பிரபு! அப்படியானால், அந்தத் தூதன் கூறியது பொய்யா? தாங்கள் பகைவர்களிடம் சிறைப்படவில்லையா?" என்று சேனாதிபதி கலிப்பகையார் கேட்க மகேந்திரர் கூறினார்: - "அது பொய்தான். நான் பகைவர்களிடம் சிறைப்படவில்லை. அப்படி நான் சிறைப்பட்டிருந்தாலும் என்னை விடுவிப்பதற்காக நீங்கள் படை திரட்டிக் கொண்டு புறப்பட்டிருக்க வேண்டியதில்லை. என்னை விடுவித்துக் கொள்ள எனக்குத் தெரியும். முன்பின் தெரியாத தூதனுடைய வார்த்தையை அவ்வளவுக்கு நீங்கள் நம்பி விட்டீர்களே? நாகநந்தி நமது எதிரியின் ஒற்றன் என்பதை மாமல்லனாவது பரஞ்சோதியாவது உங்களுக்குத் தெரிவிக்கவில்லையா?"

"பிரபு! தாங்கள் சிறைப்பட்டீர்கள் என்ற செய்தி என்னுடைய அறிவைக் குழப்பிவிட்டது. பல்லவ குமாரரும் மனம் கலங்கிப் போய்விட்டார்" என்றார் பரஞ்சோதி.

"அவன் ஒற்றனா? அப்படியானால் சிங்க இலச்சினை அவனிடம் எப்படி வந்தது?" என்று முதல் அமைச்சர் கேட்டார்.

"நான்தான் அவனிடம் கொடுத்தேன். இந்த அதி சாமர்த்தியசாலியான ஒற்றனைக் கைப்பிடியாகப்

பிடிப்பதற்காகவே நான் வடக்குப் போர் முனையிலிருந்து தெற்கே போயிருந்தேன்..."

"பிரபு! எதிரியின் ஒற்றனிடம் சிங்க இலச்சினை ஏன் கொடுத்தீர்கள்? கொடுத்தபோது அவன் ஒற்றன் என்று தெரியாதா?"

"ஒன்பது மாதத்துக்கு முன்னாலேயே தெரியும். நமது கோட்டைத் தளபதி காஞ்சிக்கு வந்த அன்றே அந்தச் சந்தேகம் என் மனத்தில் உதித்தது. வாதாபி ஒற்றர்கள் பல்லவ ராஜ்யமெங்கும் பௌத்த சங்கங்களின் மூலமாக வேலை செய்து வருவதை அறிந்தேன். அவர்களையெல்லாம் பிடிப்பதற்காக இத்தனை நாளும் நாக நந்தியை



வெளியில் விட்டிருந்தேன். கோட்டை முற்றுகை தொடங்குவதற்குள் நாக நந்தியை எப்படியாவது பிடித்து விட வேண்டுமென்று தீர்மானித்துக் கொண்டு தெற்கே போனேன். கடைசியாக, மண்டபப்பட்டுக் கிராமத்தில் கண்டுபிடித்தேன்."

"என்ன, மண்டபப்பட்டிலா?" என்று மாமல்லர் தூக்கி வாரிப் போட்டவராகக் கேட்டார்.

"ஆமாம், மாமல்லா! மண்டபப் பட்டிலேதான். அங்கே நமது ஆயனரையும் சிவகாமியையும் கூடப் பார்த்தேன். அவர்களைப் பெரும் வெள்ளத்திலிருந்து நீ காப்பாற்றியது பற்றிச் சொன்னார்கள். இருவரும் சந்தோஷமாயிருக்கிறார்கள். ஆயனர் அங்கே மலைக்கோயில் அமைக்கும் பணியில் ஈடுபடுவதற்குத் தக்க ஏற்பாடு செய்துவிட்டு வந்திருக்கிறேன். நாக நந்தியைத் தேடிக் கொண்டு மண்டபப் பட்டுக்குப் போனதில் இந்த ஒரு நன்மையும் ஏற்பட்டது..."

ஆயனரும் சிவகாமியும் எதிரிகளின் ஒற்றர்கள் என்று நாகநந்தி கூறிய விஷங் கலந்த வார்த்தைகளினால் புண்பட்டிருந்த மாமல்லரின் உள்ளம் இதைக் கேட்டுக் குதூகலித்தது. அவருடைய மனத்தில் பொங்கிய உற்சாகம் முகமலர்ச்சியாகப் பரிணமித்தது.

"பிரபு! ஒற்றனைச் சிறைப்படுத்தியாகிவிட்டதா?" என்று சேனாதிபதி கலிப்பகை கவலை தோய்ந்த குரலில் கேட்டார். அவருக்குப் போர்க்களத்தில் யுத்தம் செய்யும் முறைதான் தெரியுமே தவிர, இந்த மாதிரி ஒற்றர் தந்திரங்களெல்லாம் தலை வேதனை அளித்தன.

"ஆம். சேனாதிபதி! வாதாபியின் மிகவும் கெட்டிக்காரனான ஒற்றனைச் சிறைப்படுத்தியாகிவிட்டது. பாதி யுத்தத்தை நாம் ஜயித்துவிட்டது போலத்தான்!" என்றார் சக்கரவர்த்தி.



டனே மாமல்லர், தந்தையிடம் துள்ளி வந்து வணக்கத்துடன் கைகூப்பி நின்று, "பல்லவேந்திரா! பாதி யுத்தத்தைத் தாங்கள் ஜயித்தாகிவிட்டது. மற்றப் பாதி யுத்தத்தை ஜயிக்க எனக்கு அனுமதி கொடுங்கள். நமது வீர பல்லவ சைனியத்தை நடத்திக்கொண்டு போய் வாதாபி அரக்கர் சைனியத்தை அடியோடு அழித்து நிர்மூலம் செய்ய அனுமதி கொடுங்கள். என் அருமைத் தோழர் பரஞ்சோதியையும் என்னுடன் அனுப்பி வையுங்கள்!" என்றார்.

அப்போது மகேந்திர பல்லவர் மாமல்லரைத் தழுவிக்கொண்டு, "குழந்தாய்! உன்னுடைய வீரத்தை மெச்சுகிறேன். ஆனால், கொஞ்சம் நான் சொல்லுவதைக் கேள்!" என்று கூறிவிட்டு, சபையோர்களைப் பார்த்து, "மந்திரிகளே! அமைச்சர்களே! கோட்டைத் தலைவர்களே! எல்லாரும் சற்றுச் செவி கொடுத்துக் கேளுங்கள். இந்த யுத்தத்திற்கு ஆதி மூலமான காரணத்தை உங்களுக்குச் சொல்கிறேன். பிறகு, உங்களுடைய விருப்பம் என்ன என்பதை எனக்குத் தெரிவியுங்கள்" என்றார்.

நிசப்தம் நிலவிய மந்திராலோசனை சபையைப் பார்த்து மகேந்திரபல்லவர் மேலும் கூறியதாவது:

"நான் இளம் பிள்ளையாயிருந்த போது யுத்தம் என்னும் எண்ணமே இல்லாதவனாயிருந்தேன். என் தந்தை சிம்ம விஷ்ணுவின் வீரப்புகழ் தென்னாடெங்கும் பரவியிருந்தது. நான் பிறப்பதற்கு முன்னாலேயே என் தந்தை இழைச் சோழ நாட்டைப் பல்லவ ராஜ்யத்துடன் சேர்த்துக் கொண்டார். உறையூர்ச் சோழர்களை அடக்கிக் கப்பம் கட்டச் செய்தார். பாண்டியர்களையும் கர்வபங்கம் செய்தார். மேற்கே கங்கரும் வட மேற்கே கதம்பரும் சிம்ம விஷ்ணு மகா

ராஜாவிடம் பயபக்தி கொண்ட நண்பர்களாயிருந்தார்கள். வடக்கே வேங்கி நாட்டரசனோ எனக்குத் தாய்மாமன். ஆகவே, யுத்தம் என்ற நினைவே இல்லாமல் நான் வளர்ந்து வந்தேன். சித்திரம், சிற்பம், கவிதை, சங்கீதம், நடனம் ஆகிய கலைகளில் ஈடுபட்டுக் காலம் கழித்தேன். எந்தெந்த தேசத்தில் என்னென்ன கலை சிறந்து விளங்கியது என்று அறிந்து, அந்தக் கலையில் வல்லாரைத் தருவித்து இந்தப் பல்லவ நாட்டிலும் அக் கலையை வளர்க்க முயன்றேன்.

இப்படியிருக்கும்போது, கங்க மன்னன் துர்விநீதனுடைய சபையில் பாரவியென்னும் வடமொழிக் கவி ஒருவர் வந்திருப்பதாகக் கேள்விப்பட்டேன். அவர் வடக்கே அசலபுரத்தில் இருந்தவர். வாதாபி இராஜகுமாரர்களின் சிநேகிதர். புலிகேசியும் அவனுடைய சகோதரர்களும் சிற்றப்பனுக்கு பயந்து காட்டிலே ஒளிந்திருந்தபோது பாரவியும் அவர்களோடு கொஞ்சகாலம் அலைந்து திரிந்தார். பிறகு அவர் கங்கநாட்டு மன்னனுடைய சபையைத் தேடி வந்தார். துர்விநீதனுடைய மகளைப் புலிகேசியின் தம்பி விஷ்ணுவர்த்தனனுக்கு மணம் பேசி முடித்து, அதன் மூலம் புலிகேசிக்குப் பலம் தேடிக் கொடுப்பதற்காக அவர் வந்தார்.

துர்விநீதன் என்னுடைய தந்தைக்குப் பெரிதும் கடமைப்பட்டவன் என்பதை நீங்கள் அறிவீர்கள். ஆகையால், கங்கபாடியில் நடக்கும் காரியங்கள் எல்லாம் அவ்வப்போது காஞ்சிக்குத் தெரிந்துகொண்டிருந்தன. பாரவி அங்கு வந்திருக்கிறார் என்று கேள்விப்பட்டதும், அவரைக் காஞ்சிக்கு வரவழைக்க வேண்டுமென்று நான் ஆசைப்பட்டேன். என் தந்தையும் அவ்விதமே துர்விநீதனுக்குச் செய்தி அனுப்பினார். அதன் பேரில் பாரவி இங்கு வந்தார். வந்தவர் காஞ்சி சுந்தரியின் மேல் மோகம் கொண்டு விட்டார். இந்தக் காஞ்சி நகரின் திருக்கோயில்களும் இராஜ வீதிகளும் மாடமாளிகைகளும் பூந்தோட்டங்களும் பாரவியை அடியோடு கவர்ந்துவிட்டன. புலிகேசி வாதாபி சிம்மாசனத்தில் ஏறிய பிறகு, அவனும் அவன் தம்பி விஷ்ணுவர்த்தனனும் பாரவிக்கு ஓலை மேல் ஓலையாக விடுத்துக் கொண்டிருந்தார்கள். வாதாபிக்குத் திரும்பி வந்து விடும்படியாகத்தான். ஆனால் பாரவி அதற்கெல்லாம் இணங்கவில்லை. காஞ்சியை விட்டுப் போவதற்கு அவருக்கு மனம் வரவில்லை. புலிகேசியின் ஓலைகளுக்கெல்லாம் பாரவி தம்மால் வர முடியாதென்று மறு ஓலை அனுப்பினார். அவற்றில் காஞ்சி நகரைப் பற்றி வர்ணனைகள் செய்தார். அந்த ஓலைகளில் ஒன்றிலேதான்:

**'புஷ்பேஷு ஜாதி புருஷேஷு**
**விஷ்ணு**
**நாரீஷு ரம்பா நகரேஷு காஞ்சி'**

என்ற சுலோகத்தை அவர் எழுதினார். இதையெல்லாம் அப்போது படிக்கையில் எனக்கு எவ்வளவோ சந்தோஷமாயிருந்தது. ஆனால், அப்போது அந்த பாரவி கவி மூட்டிய தீதான் இப்போது இந்தப் பெரும் யுத்தமாக மூண்டிருக்கிறது. புலிகேசி பாரவிக்கு எழுதிய ஓலை ஒன்றில், 'என்றைக்காவது ஒருநாள் நான் காஞ்சி நகருக்கு வருவேன்; உம்முடைய வர்ணனையெல்லாம் உண்மைதானா என்று பார்ப்பேன் என்று எழுதியிருந்தான். அதுவும் எனக்குப் பெருமையாயிருந்தது அப்போது. வாதாபி சக்கரவர்த்தி காஞ்சிக்கு வரும்போது அவருக்குப் பிரமாதமான வரவேற்பு நடத்த வேண்டுமென்று எண்ணியிருந்தேன். ஆனால், சபையோர்களே! நான் நினைத்ததற்கு மாறாக இப்போது கோட்டைக் கதவுகளைச் சாத்தி வாதாபி சக்கரவர்த்தியை வெளியில் நிறுத்த வேண்டியிருக்கிறது..."

## அருள்வாக்கு

வைத்தியசாலைகள், சிறைச்சாலைகள், ஏழை விடுதிகள், அநாதாசிரமங்கள் முதலியவற்றைப் போய்ப் பார்த்தால் தெரியும் மனுஷ்யர்கள் எத்தனை தினுசான கஷ்டங்களுக்கு ஆளாகிறார்கள் என்பது. இவற்றை மஹான்கள் தான் என்றில்லை, சாதாரண ஜனங்களான நாமும் ஓரளவுக்குத் தீர்த்து வைக்க முடியும். இம்மாதிரியான இடங்களைப் போய்ப் பார்த்தால் நம் போன்றவர்களின் உபகாரத்தைக் கூட ஈச்வரன் எத்தனை ரூபங்களில் வந்து எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறான் என்று தெரியும்.



நாம் செய்ய வேண்டியது என்னவென்றால், ஒரே வார்த்தையில் சொல்ல வேண்டுமானால், துக்கம் எங்கே உண்டோ அங்கே வலுவில் போய், அந்த துக்க நிவிருத்திக்கு நம்மால் ஆகக் கூடியதையெல்லாம் பண்ண முயலுவதேயாகும். பணத்தாலோ, சரீரத்தாலோ, வாக்காலோ நம்மால் முடிந்த உதவியைப் பண்ண வேண்டியது நம் கடன், கடமை.

இதைத்தான் தர்மம், அறம் என்று சொல்வது. இதைச் செய்வதால் எதிராளிக்கு வாஸ்தவத்தில் எந்த அளவுக்கு துக்க நிவிருத்தி உண்டாகுமோ அதற்கு நாம் 'காரண்டி' சொல்ல முடியாது. அதற்கு நாம் ஜவாப்தாரியும் அல்ல. ஆனால் இப்படிச் செய்வதால் நமக்குச் சித்த சுத்தி நிச்சயமாக ஸித்திக்கிறது. அதாவது மனமாசு அகல்கிறது. திருவள்ளுவர்கூட தர்மத்துக்கு லக்ஷணம் சொல்லும்போது 'மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்து அறன்' என்றுதான் சொல்கிறார்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்



த்தனை நேரமும் சபையோர் அனைவரையும் போல ஆவலுடன் மகேந்திரர் கூறிய வரலாற்றைக் கேட்டுக் கொண்டிருந்த மாமல்லர் குறுக்கிட்டு, "பல்லவேந்திரா! எதற்காக நம் கோட்டைக் கதவுகளைச் சாத்தித் தாளிட வேண்டும்? வேல்களையும் வாள்களையும் கொண்டு புலிகேசியை ஏன் வரவேற்கக்கூடாது?" என்றார்.

"ஆம்; வரவேற்கத்தான் போகிறோம். நமது கோட்டைச் சுவர்களின் மீது பல்லவ வீரர்கள் நின்று, வாள்களாலும் வேல்களாலும் சளுக்கர்களை வரவேற்பார்கள். வரவேற்று நமது அகழிகளிலுள்ள முதலைகளுக்கு விருந்தளிப்பார்கள்! நான் சொல்ல ஆரம்பித்ததை முழுதும் சொல்லி விடுகிறேன். அந்த அரக்கன் புலிகேசி நமது காஞ்சி சுந்தரியின் மேல் எத்தகைய மோகம் கொண்டிருக்கிறான் என்பதை நேரில் நானே பார்த்தேன். ஆகா! காஞ்சியின் சௌந்தரியத்தை நான் வர்ணிக்க ஆரம்பித்ததும், அவனுடைய கண்கள் எப்படி ஜொலித்தன. தெரியுமா...?"

"இதென்ன? புலிகேசியைத் தாங்கள் நேரில் பார்த்தீர்களா? எங்கே? எப்போது?" என்று சாரங்கதேவர் கேட்டார்.

"வடபெண்ணை நதிக்கரையில் சளுக்கர் படைக்கு நடுவில் அவனை நான் பார்த்தேன்" என்று மகேந்திரர் கூறியதும், சபையில் பெரும் வியப்புக்கு அறிகுறியான 'ஹாஹாகாரம்' எழுந்தது.

"பிரபு! இப்படியெல்லாம் தங்களை அபாயத்துக்கு உட்படுத்திக் கொள்ளலாமா? இந்தப் பெரிய பல்லவ சாம்ராஜ்யம் தங்கள் ஒருவரையே நம்பியிருக்கிறதே!" என்றார் முதல் அமைச்சர்.

(தொடரும்)

# அம்மாடியோவ் விளம்பரங்கள்!

சென்னை கத்திப்பாரா சந்திப்பு வழியே கடந்து போகிற எல்லோரையும் ஒரு கணம் அட! என ஈர்த்து விடுகிறது அந்த மெகா சைஸ் விளம்பரப் பலகை. அப்துல்கலாம் குடியரசு தலைவரானதை ஒரு மனதாக ஏற்றுக் கொண்ட இந்திய மக்களின் மன உணர்வை, இத்தனைத் தெளிவாக, கொஞ்சம் நகைச்சுவை உணர்வு மிளிர, இரண்டே வார்த்தைகளில் பிரதிபலித்துவிட முடியுமா? முடிந்திருக்கிறது யுனைடெட் இந்தியா இன்சூரன்ஸ் நிறுவனத்தால். இந்த அசத்தல் விளம்பர ஐடியாவின் பின்னணியில் உள்ள மூளை யாராயிருக்கும்?

சென்னை அண்ணாசாலையில் உள்ள தலைமை அலுவலகத்திற்குள் சிக்கினார் மார்கெட்டிங் பிரிவின் பொது மேலாளர் சரவையா. இவரது தலைமையில்தான் இயங்குகிறது பப்ளிசிட்டி டிபார்ட்மெண்ட்.

“விளம்பரத்தை நாங்கள் பொது மக்களின் விழிப்புணர்ச்சிக்காக பயன்படுத்தி வருகிறோம். இது ஓர் அரசு நிறுவனம். இங்கே விளம்பரத்திற்காகச் செலவிடப்படும் ஒவ்வொரு பைசாவும் மக்களுக்குப் பயன்பட வேண்டும் என்பதைக் கொள்கையாகவே வைத்திருக்கிறோம்” என்கிறார் சரவையா. கலாம் விளம்பரத்தை அடுத்து இப்போது சுதந்திர தினத்திற்கு வைக்கப்பட்டிருக்கும்



• சரவையா

Nuclear Head

Congratulations!

Clear policies from United India. UNITED INDIA INSURANCE CO.LTD

• இரண்டே வார்த்தைகள்!

Jai Hind ‘ependence’ விளம்பரப் பலகையும் கவனத்தை கவரும் நிலையில். ஒரு துணைப்பொதுமேலாளர், ஒரு மேலாளர், ஒரு துணை மேலாளர், ஒரு நிர்வாக அதிகாரி உள்ளிட்ட ஐவர் குழுதான். இந்த விளம்பர வாசகங்களை உருவாக்கும் கிரியேட்டிவ் டீம். இந்த ஐவருமே சென்னை வாசிகள்! தவிர ஒவ்வொரு முறையும் விளம்பர பலகைக்கான டாபிகல் ஐடியா ஒரே நாளில் விவாதிக்கப்பட்டு, எலெக்ஷன் ரிசல்ட் போல ஒரே இரவில் இந்தியா முழுக்க நூற்று ஐம்பது இடங்களில் பலகைகளை எழுதிவிடுவார்களாம்! அம்மாடியோவ்!

— ஜெ.

படங்கள்: ராஜன்



• விமான டிராபிக்!

இந்த மாதம் 'ஸ்பான்' இதழில் வெளியாகியுள்ள ஓர் அற்புதமான படத்தை இங்கே பார்க்கிறீர்கள். நட்சத்திரக் கூட்டங்களை வானத்தில் பார்க்கிற மாதிரி இல்லை? கூர்ந்து கவனியுங்கள்; வானத்திலிருந்து தரையை நோக்கி எடுக்கப்பட்ட படம் இது!

ஒரு பரபரப்பான வேலை நாளின் பிற்பகலில் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் வான்பரப்பில் வெவ்வேறு உயரங்களில் பறந்து கொண்டிருக்கும் விமானங்களின் காட்சி இது. ஏறக்குறைய ஏழாயிரம் விமானங்கள் பறந்து செல்கிற வான் வழிப் போக்குவரத்து நெரிசல்! 'டிராஃபிக் ஜாம்' தரையில்தான் வர வேண்டுமா என்ன?

முன் பத்தியில் 'வெவ்வேறு உயரங்களில்' என்றிருப்பதை மட்டும் நினைவில் தேக்கிக் கொண்டு மேலே படியுங்கள். அண்டவெளியில் தொலைதூரங்களுக்கும் அப்பால் உள்ள நட்சத்திரங்களின் தோற்றத்தையும் இப்படித்தான் வானத்தில் இரவு நேரங்களில் பார்க்கிறோம். நகர்ப்புற வெளிச்சங்கள் எட்ட முடியாத இடங்களில் உள்ளவர்கள் வானத்து நட்சத்திரக் குவியல்களைக் கண்டு அனுபவிக்க முடியும். சென்னையில் உள்ள பிர்லா கோளரங்கத்தில் இந்தக் காட்சியை மிக அருமையாய்க் காட்சிப்படுத்துகிறார்கள்.

தொலை தூர நட்சத்திரங்களும் இப்படி விமானக் காட்சி மாதிரியே தென்பட்டாலும் ஒன்றுக்கொன்று கோடிக்கணக்கான மைல்கள் இடைவெளியில்தான் உள்ளன. பூமிக்கு வெகு அருகில் உள்ளது என்கிற நட்சத்திரத்தை நாம் சென்று அடைய வேண்டுமானால்கூட, ஒளியின் வேகத்தில் நான்கரை ஆண்டுகள் பயணம் செய்தாக வேண்டும்!

நீல விதானத்தில் நட்சத்திரங்களை ஒரே சீராக ஒட்டி வைத்த மாதிரி தோன்றினாலும், ஒரு போதும் அவை அருகருகே இருப்பதில்லை. அண்ணா சாலையில் ஒரு விளக்கையும், நந்தனத்தில் ஒரு விளக்கையும் கிண்டியில் ஒரு விளக்கையும் வைத்து, அவை ஒரு நேர்க் கோட்டில் இருப்பதாகக்

# தரையில் மின்னும் தாரகைகள்!

கற்பனைப் பண்ணிக் கொண்டு திரிசூலத்திலிருந்து பார்க்கிறதாக வைத்துக் கொள்ளுங்கள். விளக்குகளின் பிரகாசத்தை வைத்து அவை அருகருகே இருப்பதாகவே காணப்படும். ஆனால் உண்மையில் ஒன்றுக்குப் பின் ஒன்றாய்த்தானே அவை உள்ளன? இப்படித்தான் நட்சத்திரங்களையும் பிரபஞ்சப் பெருவெளியில் நாம் பார்த்துக் கொண்டிருக்கிறோம். தொலைவுதான் கோடிக்கணக்கான கிலோமீட்டர்கள்!

நட்சத்திரங்கள் நம்முடைய பார்வைக் கோட்டில் முன்பின்னாக அமைந்திருப்பதைப் பொருத்து அவை இரட்டை நட்சத்திரங்கள் என்றோ, கொத்துக் கொத்தானவை என்றோ இனம் பிரிக்கப்படுகின்றன. அண்ட்ரோமெடா, ஸிக்னஸ், லைரா, ஜெமினி, ஹெர்க்குலிஸ் போன்ற பல நட்சத்திரத் தொகுப்புகளில் இப்படி இரட்டை நட்சத்திரங்கள் உண்டு. சில இரட்டைகள் வெவ்வேறு நிறங்களிலும் இருக்கும்.

தொலைநோக்கிக்கு அடிமையாகி பழகிவிட்டால், இவை போன்ற அற்புதங்களைப் பார்த்துக் கொண்டே இருக்கலாம். தொலைநோக்கி! - தொலைக்காட்சி அல்ல!

நட்சத்திரங்கள் அவற்றின் உருவம் வெப்ப அளவுகளுக்கு ஏற்ப நிறங்களிலும் வடிவத்திலும் மாறுபடுகின்றன. சூரியனைப் போலவே நட்சத்திரங்களும் சொந்தமாகச் சுடர் விடுகிறவை. வெளிப்புறத் தரையின் வெப்ப அளவு 55,000 டிகிரி பாரன்ஹீட் என்பது சர்வசாதாரணம் என்கிறார்கள்.

மிகவும் பழைமையான காலங்களில் நட்சத்திரக் கூட்டங்களைக் கொத்துக் கொத்தாகக் கவனித்தவர்கள் அந்தப் பழங்கால அரசர்கள், அரசியர், விநோத விலங்குகள் என்று ஓர் உருவத்தைக் கற்பனை செய்து அந்தக் கூட்டங்களின் பெயராக வழங்கினார்கள். சிம்மராசி, விருச்சிக ராசி, ஓரியன் என்பதெல்லாம் அப்படித்தான் பெயர் பெற்றன. ஸெபியஸ், காஸ்ஸியோப்பியா என்று ராஜ வம்சத்துப் பெயர்களையும் நட்சத்திரக் கூட்டங்களுக்குச் சூட்டினார்கள். ஆனால் ஆயிரக்கணக்கான ஆண்டுகளில், முன்பு அவர்கள் பார்த்தபோது இருந்ததைவிட நட்சத்திரங்கள் சற்று இடம் மாறிவிட்டன. இருந்தும் மூதாதையர்கள் வைத்த பெயர்களையே வானியல் ஆய்வாளர்கள் மரியாதையோடு தொடர்ந்து பின்பற்றுகிறார்கள்.



• ஒமேகா சென்டாரி நட்சத்திரக் கொத்து



• நட்சத்திரக் கூட்டம்

பூமியில் உள்ள நாடுகளைக் காட்டும் தேசப்பட 'அட்லஸ்' மாதிரி, வான மண்டல நட்சத்திரங்களையும் காட்டுகிற, 'அட்லஸ் ஆஃப் ஹெவன்ஸ்' போன்ற பிரபலமான பாடப்புத்தகங்கள் உண்டு.

— சுப்ர. பாலன்





**சா**ரா வாக்கர் என்ற பெண்மணியின் பெயர் பலவிதங்களில் சரித்திரத்தில் இடம் பெறத் தகுதியானது. என்றாலும் அமெரிக்காவின் முதல் கறுப்பர் இன கோடீஸ்வரி என்று முக்கியமாக நினைவுகூறப்படுகிறார். இவரது வாழ்க்கையின் மேடு பள்ளங்களும், இறுதியில் அவர் எட்டிய சிகரமும் மிக சுவாரஸ்யமானவை.

சாராவின் அப்பா வறுமையின் பிடியில் தவித்தவர் மட்டுமல்ல, ஓர் அடிமையும்கூட (அப்போது அமெரிக்காவில் கறுப்பர்களை அடிமைகளாக்கும் கேவலம் நிலவியது) லூஸியானாவில் வசித்தது அவரது குடும்பம். அந்தப் பகுதியில் அப்போது பரவிய மஞ்சள் காய்ச்சல் என்ற தொற்று நோயால் அவரும் அவர் மனைவியும் இறந்துவிட, தனது ஒரே அக்காவுடன் வசிக்க வேண்டிய நிர்பந்தம் ஏற்பட்டது சாராவுக்கு.

ஆறு வயது சாராவுக்குப் பள்ளிக்கல்வி நின்றதுகூடப் பரவாயில்லை. வயதாக ஆக அக்காவின் கணவன் தன்னிடம் கொச்சை வார்த்தைகள் பேசுவதையும் தவறாக நடக்க முயற்சிப்பதையும்தான் தாங்கிக் கொள்ள முடியவில்லை. இதன் காரணமாகவே தனது பதினான்காவது வயதிலேயே மோசஸ் என்பவரைத் திருமணம் செய்து கொள்ள சம்மதித்தாள்.

ஒரு மகளும் பிறந்தாள். ஆனால் குழந்தைக்கு இரண்டு வயதாகும்போதே மோசஸ் இறந்துவிட, மீண்டும் அனாதையானாள் சாரா. அக்காவின் வீட்டுக்கு மீண்டும் செல்ல தைரியம் இல்லை.

சாராவின் தூரத்துச் சொந்தங்கள் சில மிசோரியில் இருந்தன. தன் மகளுடன் அங்கே சென்றாள் சாரா. அங்கு ஹோட்டல் ஒன்றில் துணிகளைத் துவைக்கும் வேலையைச் செய்யத் தொடங்கினாள்.பதினெட்டு வருடங்கள் இப்படி கடந்தன.

1904ல் சாராவின் தலையை ஒருவித கிருமிகள் தாக்கின. இதனால் சாராவின் முடி கொட்டத் தொடங்கியது. அப்போது புழக்கத்திலிருந்த சில மருந்துகளை அங்கு தடவிப் பார்த்தும் முடி கொட்டுவது நின்றபாடில்லை. தாமே சில நிவாரணங்களைச் செய்து கொள்ளத் தொடங்கினாள். பலன் கிடைத்தது. அந்த நிவாரணியை மேலும் செம்மைப்படுத்தி தனக்குத் தெரிந்தவர்களுக்கு முதலில் அன்பளிப்பாகவும் பிறகு விற்பனைக்கும் அளிக்கத் தொடங்கினாள். இதன் தொடர்ச்சியாக சுருண்ட கூந்தலை நேராக்க உதவும் திரவம் ஒன்றையும் கண்டுபிடித்தார். இதற்கு நல்ல வரவேற்பு இருந்தது தெரிய வர, தீவிரமாக யோசித்தார்.

இவரது போதாத (?) வேளை அந்தப் பகுதியில் அப்போது ஒருவித தொற்றுநோய் பரவத் தொடங்கியது. இதே போன்ற ஒரு சூழலில் தன் பெற்றோரை இழந்து விட்டிருந்ததால் பயந்து போனார் சாரா. மகளுடன் கொலராடோவுக்குச் சென்றார்.

# சாரா வாக்கர்!

அங்கு நாளிதழ் ஒன்றின் பிரதிநிதியாக விளங்கிய சார்லஸ் வாக்கர் என்பவரைக் கண்டார். நாளடைவில் இருவருக்குமிடையே திருமணம் நடந்தது. ஏழ்மை முற்றிலும் நீங்கி விடாத வாழ்க்கைதான் அப்போதும். இந்த நிலையில், தாம் கண்டுபிடித்த கேசப் பராமரிப்புப் பொருள்களை ஏன் பெரிய அளவில் தயாரித்து விற்கக்கூடாது என்று சாரா தீவிரமாக யோசிக்கத் தொடங்கினார்.

'மேடம் வாக்கர்' என்ற பெயர் கொண்ட நிறுவனம் உருவானது. நாளடைவில் கூந்தல் வளர்வதற்கான தைலத்தோடு, முகத்தைச் சுத்தமாக வைத்துக் கொள்வதற்கான பொருள்களையும் தயாரிக்கத் தொடங்கினார். முதலில் வீடு வீடாக இவரே சென்று பொருள்களை விற்றார். இதனால் களைப்பும் நேரக்குறைவும் உண்டாக, சில பெண்களை வேலைக்கு அமர்த்தி அவர்களுக்கு முறையான பயிற்சி தந்து அவர்களை விற்பனைப் பிரதிநிதியாக்கினார். கண்ணைக் கவரும் சீருடையுடன் இதில் ஈடுபட்ட பெண்கள், மக்களிடையே பிரபலமாகி நாளடைவில் 'வாக்கர் ஏஜெண்டுகள்' என்றே அழைக்கப்பட்டனர். வியாபாரம் பெருகியது. அழகு நிலையம் ஒன்றையும் துவக்கினார். புகழ் பரவியது. பென்ஸில்வேனியா, இண்டியானா என்று கிளைகள் தொடங்கப்பட்டன. கோடிக்கணக்கில் செல்வம் குவிந்தது.

**வா**ழ்க்கையில் அடித்தளத்திலிருந்து தன் பயணத்தைத் துவக்கிய ஒரு பெண்மணி செல்வத்தைக் குவித்ததே ஒரு சாதனை என்றால், அவர் அப்படிச் சேர்ந்த செல்வத்தை எப்படி செலவழித்தார் என்பது மற்றொரு வியப்பிற்குரிய விஷயம்.

பலவித சமூக சேவைகளில் ஈடுபட்டதோடு கல்வி நிறுவனங்களுக்குக் கொழுத்த நன்கொடை அளித்தார். கறுப்பர்களின் நிலையை உயர்த்துவதற்காக உருவான தேசிய அமைப்புக்கு, கணக்கில்லாத தொகையை அளித்தார். கறுப்பர்களின் பிரச்னைகள் குறித்து பல இடங்களில் விரிவுரைகள் நிகழ்த்தினார். அவ்வளவு ஏன்... தமது உயிலில் கறுப்பர் இன அமைப்புகளுக்கும் அனாதை இல்லங்களுக்கும், முதியோர் இல்லங்களுக்கும் தம் செல்வத்தின் பெரும் பகுதியை எழுதி வைத்தார்.



1917ம் ஆண்டில் அமெரிக்காவின் பெரும் நிறுவனங்களில் ஒன்றாக 'சாரா வாக்கர்' விளங்கியது. மூவாயிரத்துக்கும் மேற்பட்ட ஊழியர்கள் அதில். அதிக ரத்த அழுத்தம் விளைவித்த சிக்கல்களின் காரணமாக நியூயார்க்கில் 1919 மே 25ம் தேதி சாரா இறந்தார்.

- குல்லூ

# 33 சதவிகிதம்தான்!



''மாமியார் சண்டைக்காரியா இருப்பான்னு கல்யாணத்தன்றே எப்படிச் சொல்றே?''

''மூர்க்க சுமங்கலியா இரும்மான்னு வாழ்த்தறாங்க, அப்பா!''

- ஜோசப் காமராஜ்

''நாம காதலிக்கறதா உங்கப்பாகிட்ட சொல்லிட்டியா?

''ஆமா... அதுக்கென்ன?''

''முன்னெல்லாம் என்கிட்ட மட்டும்தான் கைமாத்து வாங்கிட்டிருந்தார். இப்பு எங்கப்பாகிட்டயும் துணிஞ்சு கேட்கறார்!''

- அம்பை தேவா





''கொத்தனாரைக் கட்டிக்கிட்ட கோகிலா இப்ப எப்படி இருக்கா?''

''முன்னைக்கு இப்ப கொஞ்சம் பூசின மாதிரி இருக்கா!''

- தஞ்சை தாமு

''என்னங்க, இன்னிக்கு வீடு திரும பறப்ப ஐம்பது ரூபா கண்டெடுத்தேன்.''

''பெண்களுக்கு ஒதுக்கீடு 33 சதவிகிதம்தான். பாக்கி என்னைச் சேரணும்!''

- வே. செந்தில்குமார்



# அபூர்வமாக ஓர் அண்ணி!

திடீரென்று ஒருநாள் என் நண்பரும் முற்போக்கு எழுத்தாளர் சங்க மாநிலத் தலைவருமான வழக்கறிஞர் செந்தில்நாதன் தொலைபேசியில் தொடர்பு கொண்டார். முதுபெரும் எழுத்தாளர் வல்லிக்கண்ணனுக்கு நிதி திரட்டுவதற்காக ஒரு குழு அமைத்திருந்தோம். குழுவில் சு. சமுத்திரம், தயானந்தன் ஃபிரான்சிஸ், முகம் மாமணி என்று பலருடன் செயல்பட்டோம். நிதி திரட்டி விழா நடத்தி கிடைத்த நிதியை வல்லிக்கண்ணனிடம் விழாவிலேயே கொடுத்துமாயிற்று. சில நாட்கள் தான் கடந்திருக்கும். இப்போது செந்தில்நாதன் ஃபோன்.

'என்ன விஷயம்?' என்று விசாரித்தேன்

இதுதான் விஷயம். இதை வல்லிக்கண்ணனிடம் சொல்ல வேண்டும். நீங்கள் வ.க.வோடு மட்டுமல்லாமல் அவரது குடும்பத்தோடும் நட்பு கொண்டவர். குழுவில் எல்லோரும் நீங்கள் தான் அவர் மனம் சிணுங்காமல் இதை அவரிடம் சொல்ல வேண்டும் என்று முடிவு செய்திருக்கிறோம்...!

செந்தில்நாதன் சொல்லச் சொல்ல என் மனம் சிந்தனையில் ஆழ்ந்தது. சொல்லப்பட்ட விஷயம் மிகச் சரி. வல்லிக்கண்ணன் மேல் மிகுந்த அன்போடு எழுந்த யோசனை. நான் அவரிடம் இதை எப்படிச் சொல்வது? ஆனால் அவரின் அன்பைப் பூரணமாகப் பெற்ற நான் அல்லாமல் வேறுயார்தான் அவரிடம் இதைச் சொல்ல இயலும்? அவரது கடும் தியாகங்களை அந்தரங்கமாக உணர்ந்த என் கண்கள் பனித்தன. நிதி திரட்டி வழங்கும் யோசனைக்கு அவரை ஒப்புக் கொள்ளச் செய்வதற்கே சிரமப்பட வேண்டியிருந்தது. அவரின் சுயமரியாதைக்கு ஒரு சிறு பழுதும் ஏற்பட்டுவிடாமல் இதையும் சொல்லிவிட வேண்டும் என முடிவு செய்தேன். அவர் இல்லத்திற்குப் புறப்பட்டேன்.



• வல்லிக்கண்ணன்

வல்லிக்கண்ணனை நேரில் பார்ப்பவர்கள் அவரது முதல் எழுத்தை மாற்றித்தான் புரிந்து கொள்வார்கள். அவ்வளவு ஒல்லிக்கண்ணனாக இருப்பார்! தொடர்ந்து ஒல்லியாகவே இருப்பது.



• முகம் மாமணி



• டாக்டர் தயானந்தன் ஃபிரான்சிஸ்

தொடர்ந்து கனமான இலக்கியத்தையே படைப்பது என இரண்டு முரண்பட்ட விஷயங்களைப் பல்லாண்டுகளாக கவனத்துடன் ஒரு சீராகப் பராமரித்து வருகிறார். ஒரு வகையில் 'மேன் ஆஃப் லெட்டர்ஸ்' என்று இவரைச் சொல்லலாம்! இவரும் தி.க.சி.யும் தங்களுக்கு வந்த எந்தக் கடிதத்திற்கும், ஓயாமல் பதில் கடிதங்கள் எழுதும் உயர்ந்த பண்பாடு உள்ளவர்கள். வ.க., திருமணம் வேண்டாம் என்று நிரா

திருப்பூர் கிருஷ்ணன்


• அண்ணி மகமாயி, கோமதிநாயகம்

கரித்த இலக்கிய அப்துல்கலாம். அண்ணா கோமதி நாயகம் என்ற அசோகன்தான் இந்தத் தற்காலக் கம்பருக்குக் கிடைத்த நவீன சடையப்ப வள்ளல். (ஆனால் அதிகப் பொருளாதார வசதி இல்லாத சடையப்பர்.) அசோகன் காலமானதுதான் வல்லிக்கண்ணன் வாழ்வில் பெரிய சோகம். அசோகனும் எழுத்தாளர்தான். தன் தம்பியை ரத்த பாசத்தால் மட்டுமல்லாமல் அவரது இலக்கியப் பெருமையை உணர்ந்தும் ஆதரித்த அண்ணா.

அந்த அண்ணா காலமான பிறகு அண்ணி மகமாயி சொன்ன வார்த்தைகள் ஒரு தனிக் காவியம். 'அவருக்குத் தம்பின்னா எனக்கும் தம்பி தானே? குடிக்கிற கஞ்சியைச் சேந்து குடிச்சிட்டுப் போறோம். எனக்கு நாலு பொண்ணு. ரெண்டு பையன். ஆறு குழந்தைகளோட இவரும் ஒரு ஏழாவது குழந்தை. அவ்வளவு தானே? குழந்தைங்களுக்கு அப்பாப் பாசம் தான் இனி இல்லைன்னு செஞ்சிட்டாரு ஆண்டவன். சித்தப்பாப் பாசமாச்சும் இருக்கான்டாமா!'

என்ன விந்தை! குடும்பப் பொறுப்பு எழுத்துப் பணிக்கு இடையூறாக இருக்கும் என்று நினைத்து திருமணமே வேண்டாம் என்று ஒதுங்கியவர். அவரது முதுமைக் காலத்தில் அதுவரை அவரை ஆதரித்த அண்ணாவின் குடும்ப பாரம் அவர் தோள்களில். ஆனால் யாருக்கு யார் பாரம்! அவர்களெல்லாம் சேர்ந்து ஒரே குடும்பம் தானே என்கிறார் அந்த அபூர்வமான அண்ணி.

இந்தச் சூழலில் தான் ஏதோ சொற்ப நிதி திரட்டி அவரிடம் கொடுக்கப்பட்டது. நான் அண்ணியின் குழந்தைகளைப் பார்த்தேன். மணிமணியான ஆறு மக்கட் செல்வங்கள். நான்கு பெண்களில் ஒரு பெண்ணான சுப்புலட்சுமிக்கு வாய்ப்பேச்சு இல்லை. அந்தப் பெண் போல் அன்பு மயமான பிறவி உலகில் யாருமில்லை.

'என்னா இந்தப் பக்கம் வாரதே இல்ல நீங்கல்லாம். அண்ணியை மறந்திட்டீங்களா?' இரண்டு பிஸ்கட்டைத் தட்டில் வைத்து என் கையில் கொடுத்தவாறே அன்பு மயமாகப் பேசினார் அண்ணி. எனக்கு அதைச் சாப்பிடும் முன்பாகவே அந்த அன்பில் மனம் குளிர்ந்து வயிறு நிறைந்தது. அண்ணி சமையலறை சென்றதும் நான் மெல்ல வல்லிக்கண்ணனிடம் சொன்னேன்.

'கொடுத்த நிதியை என்ன வேண்டுமானாலும் செய்ய உங்களுக்கு உரிமை உண்டு தான். என்றாலும் நிதிக் குழுவினர் உங்கள் மேல் கொண்ட பிரியத்தால் ஓர் ஆலோசனையைச் சொல்லச் சொன்னார்கள். நிதியை வங்கியில் உங்கள் பெயரில் ஃபிக்ஸட் டெபாசிட்டில் போட்டுவிட்டால் நல்லது. கிடைத்த நிதியும், பெயருக்குத்தான் பொற்கிழியே தவிரப் பெரிய நிதி என்று சொல்ல இயலாது. அதைக் குடும்பச் செலவுக்கு என்று எடுத்தால் விரைவில் கரைந்துவிடும். பிறகு உங்கள் ஆரோக்கியத்திற்கு ஏதாவது பிரச்னை வந்தால் மருத்துவச் செலவிற்குக் கூடப் பணம் இல்லாது போய்விடும்.

வல்லிக்கண்ணன் சற்று நேரம் அமைதியாக இருந்தார். பிறகு சொன்னார். 'குழந்தைகளுக்குக் கொஞ்சம் துணிமணி வாங்கலாம் என்றேன். அதைக் கூட அண்ணி ஒப்புக் கொள்ளவில்லை. நீங்கள் சொன்ன அதே யோசனையைத் தான் அண்ணியும் சொன்னார். அவங்க தானே எனக்கு அம்மா மாதிரி. உங்களுக்கு ஒரு விஷயம் தெரியுமா? என் அம்மா பெயரும் கூட மகமாயிதான். என் அண்ணி சொல்றதை நான் எப்படித் தட்ட முடியும்? ஃபிக்ஸட்ல என் பேர்ல ஏற்கெனவே போட்டாச்சு!'

வார்த்தைகள் என்ற பெயரில் என்மேல் சந்தனக் குழம்பையும் பன்னீரையும் கலந்து கொட்டின மாதிரி இருந்தது. நான் பிரமிப்போடு உட்கார்ந்திருந்தேன். உள்ளே சமையலறையிலிருந்த அண்ணி, காப்பி தம்ளரை எனக்கு எடுத்து வந்தபோது திடீரென அறையில் வெளிச்சம் வந்தது. ○

# சோதனை காலம்!

**வ**ரும் அக்டோபர் மாதம் லிம்கா புக் ஆஃப் ரெக்கார்ட்ஸ் புத்தகம் வெளிவர இருக்கிறது. பெங்களூர் பல துறைகளில் சிறந்து விளங்கி முதலிடத்தைப் பிடிக்கும் போலிருக்கிறது. இங்கு தான் 130 மீட்டர் நீளம் கொண்ட நீச்சல் குளம் உள்ளது. சுத்தமான காற்றை சுவாசிக்கவென முதலில் ஆக்ஸிஜன் பார் தொடங்கப் பட்டதும் இங்கே. முதன்முதலாக பள்ளிக்கூட சிலபஸில் கிரிக்கெட்டையும் ஒரு பாடமாக வைத்து மாணவர்களின் உள்ளங்களில் டெண்டுல்கரின் மதிப்பிற்குச் சமமாக நச்சென்று உட்கார்ந்து விட்டது செயிண்ட் ஜோசப் பள்ளிக்கூடம்.



சர்வதேச அளவில் காபி திருவிழா பெங்களூரில் தான் கொண்டாடப்பட்டது. சைபர் க்ரைம் என்று சொல்லப்படும் கணினி குற்றங்களைக் கண்டறியவென்றே தனி காவல் துறை முதல் முதலில் பெங்களூரில்தான். உலக அளவில் மிக அதிகமான சாஃப்ட்வேர் கம்பெனிகள் உள்ள நகரமும் இதுவே. இந்தியாவில் மெடிகல் டிரான்ஸ்கிருப்ஷன் கம்பெனி முதலில் தொடங்கபட்டதும் இங்குதான். ஏகப்பட்ட துறைகளில் முத்திரையைப் பதித்து வரும் பெங்களூர் இதுவரை சாம்பியனானப் புனாவைப் பின்னுக்குத் தள்ளி முதலிடத்தைப் பிடித்துவிடும் என்று சொல்கிறார்கள்.

**கா**ங்கிரஸ் கட்சியின் மூத்த தலைவரான நட்வர் சிங்கிற்குச் சோதனை காலம் இது. மனிதருக்கு எத்தனை கஷ்டங்கள், ஒன்றன் பின் ஒன்றாக! முதலில் மருமகள் நடாஷா மர்மமான முறையில் இறந்து போனார். பிறகு அவரது மகன் ரீது சிங் காலமானார். பெங்களூரில் நட்வர்சிங்கின் அண்ணன் மகள் லத்திகா இருக்கிறார். இவருக்கு இரண்டு மகன்கள் 17 வயது ஆதித்யா, 11 வயதான ஜெய் - இவனைத் தத்தெடுத்துக் கொண்டதாகக் கூறப்படுகிறது. கோரமங்களாவில் ராணுவப் பகுதியில் வசித்து வரும் இவர்களை கர்னல் பத்ரா, குப்தா, சுரேஷ் போன்ற ராணுவ அதிகாரிகளே பயங்கரமாக அடித்துக் கொடுமை படுத்தியிருக்கிறார்களாம். மல்லய்யா ஆஸ்பத்திரியில் ஆதித்யாவும் ஜெய்யும் அனுமதிக்கப்பட்டு சிகிச்சை பெற்று வருகிறார்கள். "எங்களை அடித்துக் கொண்டே 'நட்வர் சிங்கின் குடும்பத்தைப் பூண்டோடு அழித்து விட்டுதான் மறுவேலை'' என்றார்கள். ஆதித்யா வலியுடன் பேசுகிறான். இவர்களது தாயான லத்திகா விவாகரத்து கேட்டு கணவர் கர்னல் அனில் புரியின் மீது வழக்கு போட்டிருக்கிறார்.

இந்த அடிதடி ப்ளான் அவருடையது தான் என்கிறார் லத்திகா. குற்றம் சுமத்தப் பட்ட கர்னல் பத்ரா வேறு விதமாகச் சொல்கிறார். "ஜெய் என்பது மகனேயல்ல. இவர்கள் வீட்டில் எடுபிடி வேலை பார்ப்பவன். ஏழாவது மாடியிலிருந்து இவர்கள் விட்டெறியும் பாட்டில்களும், செங்கல்கள், குப்பைகள் கணக்கிலடங்காது. இங்கு மற்றக் குழந்தைகளும் உள்ளனர். அவர்களின் பாதுகாப்பு கருதி சொன்னாலும் கேட்கவில்லை இவர்கள். இப்போது கேஸை திசை திருப்ப பார்க்கிறார்கள்'' என்கிறார். 'சோதனை மேல் சோதனை போதுமடா சாமி' - நட்வர் சிங் இப்போதெல்லாம் இந்தப் பாட்டைத் தான் அதிகம் பாடுவதாகக் கேள்வி.

— சேகர்

கல்கி வைர விழா
கல்கி சதாசிவம் நூற்றாண்டு விழா

# கன்னலின் இனிய தண்தமிழ்!



ப. சிதம்பரம், ஏவி.எம். சரவணன், சோ ஆகியோரை வரவேற்றுப் பேசிய கி. ராஜேந்திரன் சொன்னவை:

கல்கி, கடந்து வந்த பாதையைத் திரும்பிப் பார்க்கிறபோது, சீரான பாதையில் அவ்வப்போது மேடு பள்ளங்களும், கரடு முரடுகளும் தென்பட்டிருக்கின்றன. ஆனால் எங்கள் நடையில் எப்போதும் தளர்வு இருந்தது கிடையாது.

இன்று பத்திரிகை உலகம் சந்தித்துக் கொண்டிருக்கும் பிரச்னைகளில் முக்கியமானவை என்று மூன்றைக் குறிப்பிடவேண்டும். முதலாவது டெலிவிஷனால் ஏற்பட்டுள்ள கடும் போட்டி. இரண்டாவது, பத்திரிகைகள் தொடர்பான அரசு கொள்கை அத்தனைச் சாதகமாக இல்லை.

மூன்றாவதாக, பத்திரிகைச் சுதந்திரத்துக்கு ஏற்பட்டுள்ள அச்சுறுத்தல்கள். இன்று ஜனநாயகத்தில், சகிப்புத்தன்மை குறைந்து விட்டது. மாற்றுக் கருத்துக்களை ஏற்கும் மனப் பக்குவம் இல்லை.

கல்கி அச்சகத்தில்தான் துக்ளக்கும் அச்சாகிறது. ஒரு விஷயம் குறித்து துக்ளக்கின் கருத்து ஒன்றாக இருக்கும். அது அச்சிடப்பட்ட அடுத்த நாள், அச்சாகும் கல்கியில் அதற்கு நேர் எதிர்மாறான கருத்து தெரிவிக்கப்பட்டிருக்கும். எங்கள் அச்சக ஊழியர்கள் கூட சில சமயம், "இப்படிப்பட்ட நேர்எதிரான இரு கருத்துக்களில் எது சரி?" என்று என்னிடமே கேட்பார்கள். நான், "இரண்டையும் படி. அப்புறம் அவை பற்றி ஆழமாக யோசி! நீயே முடிவு செய்!" என்பேன்.



கல்கி வைரவிழா மலரையும் சுபம் – சிவம் காஸெட்டையும் வெளியிட்டு, ப. சிதம்பரம் ஆற்றிய உரை:

கல்கி இதழின் வைர விழா, தமிழர் அனைவரும் கொண்டாடவேண்டிய ஒரு விழா. பஞ்ச், ஷங்கர்ஸ் வீக்லி போன்ற நல்ல பத்திரிகைகள் மூடப்பட்டது துரதிர்ஷ்டம். ஆனால், பல பிரச்னைகளையும் சமாளித்து அறுபதாண்டுகளாக கல்கி

## நட்புக்கு ஒரு விழா!

• ஆகஸ்ட் 4 நண்பர்கள் தினம். கல்கி – சதாசிவம் ஆகியோர் நட்பையும் அதன் பயனாகப் பிறந்த கல்கி இதழின் பிறந்த நாளையும் சதாசிவம் நூற்றாண்


• பாஸ்கர் சக்தி



வெளிவருவது பாராட்டுக்குரியது.

இன்று நீதித்துறை, அரசியல், மீடியா, சினிமா ஆகிய நான்கும்தான் சமுதாயத்தின் மீது அதிகமான தாக்கங்களை ஏற்படுத்தி வருகின்றன. எனவே, மீடியா குறிப்பாக, பத்திரிகைகள் அரசியலையும், சினிமாவையும் ஒதுக்கிவிடக் கூடாது. கல்கி, ஆரம்பம் தொட்டே அரசியலையும், சினிமாவையும் ஆரோக்கியமான முறையில் மக்களுக்கு வழங்கி வருகிறது.

ஆனால், இன்று பொது வாழ்வில் இருப்போருக்கு, விமர்சனங்களை சரியான கோணத்தில் எடுத்துக் கொள்ளும் மனப்பக்குவம் இல்லை. சகிப்புத்தன்மை குறைந்துவிட்டது.

பெரியாரும், ராஜாஜியும் இரு மாறுபட்ட கருத்துக்களின் குறியீடுகள். அதை (சினிமா) பாட்டில் குறிப்பிட்டால்கூட அதை ஏற்றுக் கொள்ளும் சகிப்புத்தன்மை இல்லாமல் போய்விட்டது. இதற்கு அரசியல் காரணமில்லை; அறியாமைதான் காரணம்.

'இருபத்தைந்து வயதில் ஒருவன் கம்யூனிஸ்டாக இல்லையென்றால், அவனுக்கு இதயம் இல்லை. ஐம்பது வயதிலும் அவன் கம்யூனிஸ்டாகவே இருந்தால், அவனுக்கு மூளை இல்லை!' என்று ஆங்கிலப் பழமொழி உண்டு. அன்று ராஜாஜி கூறியவற்றைக் கேட்டு அவர் முதலாளித்துவ ஆதரவாளர் என்றார்கள். இன்று தாராளமயமாக்குதல் மூலம், அவர் சொன்னதுதான் நடந்து கொண்டிருக்கிறது. பொதுவுடைமை என்று பேசப்பட்ட கருத்து, ஒரே நூற்றாண்டில், காணாமல் போய்விட்டது. ராஜாஜியின் தொலைநோக்கு, மற்றவர் எவருக்கும் இல்லை. அவரது கொள்கைகளை நிலையாக ஆதரித்து வந்திருக்கிறது கல்கி பத்திரிகை.

புதுமைப்பித்தன் கதையில் 'நம்பிக்கை வறட்சி' என்று ஒரு வார்த்தை வரும். நான் கல்கி பத்திரிகைக்குச் சொல்ல விரும்புவதெல்லாம் இதுதான்: நீங்கள் நம்பிக்கை வறட்சி கொள்ளாதீர்கள். மனத்தைப் பசுமையாக வைத்திருங்கள். பேராசிரியர் கல்கி வகுத்த தேசநலன் என்ற பாதையில் துணிச்சலாய்ச் செல்லுங்கள்.

பத்திரிகைச் சுதந்திரம் பாதிக்கப்படுகிறபோது, துணிச்சலுடன் ஒன்றுபட்டுக் குரல் கொடுங்கள். மாநில அரசு எழுத்து மூலமாகக் கொடுத்த வாக்குறுதியை மீறி (வீரப்பன் விஷயத்தில்), பத்திரிகைச் சுதந்திரத்துக்கு ஆபத்து வந்துள்ள தருணத்தில், பிற பத்திரிகை ஆசிரியர்களுடன், சென்று கர்நாடக முதல்வர் கிருஷ்ணாவைச் சந்தித்த கல்கி ராஜேந்திரனை நான் பாராட்டுகிறேன்.

காவல்துறை, ரசிகர்கள், கட்சித் தொண்டர்கள் என்று பல தரப்பிலிருந்தும் தாக்குதல்கள் வரும்போது, அனைத்து பத்திரிகைகளும் இணைந்து போராட வேண்டும் என்பதே என் வேண்டுகோள்.

பத்திரிகைத் துறையின் எதிர்காலம் எப்படி இருக்கும்? அது நிகழ்காலத்தில் நாம் எடுக்கும் முடிவுகளைப் பொருத்தே அமையும். சரியான முடிவுகளை எடுத்தால், எதிர்காலம் ஒளிமயமாக இருக்கும் என்பது நிச்சயம்.

டையும் ஒருங்கே கொண்டாடிய விழாவாக அமைந்தது. ● தென்னங்குருத் தோலையும் வெடித்த தென்னம் பாளையும் கொண்டு நூதனமாக, பாரம்பரிய முறையில் அரங்கை அலங்கரித்திருந்தார் தாமஸ். இவர் கலாக்ஷேத்ராவைச் சேர்ந்தவர். ● அரங்கின் வெளியே புகைப்படக் கண்காட்சியில் தமிழக முதல்வர் படம் – கல்கியில் அவர் தொடர்கதை எழுதினார் என்பதை நினைவூட்டியது! ● ப. சிதம்பரம் வைரவிழா மலரையும் காஸெட்டையும் வெளியிட, ஏவி.எம். சரவணன் பெற்றுக் கொள்ள

## மலரின் முதல் பிரதியைப் பெற்றுக் கொண்ட ஏவி.எம். சரவணன்:



பச்சையப்பன் கல்லூரி மாணவர்கள் ஏற்பாடு செய்த ஒரு நிகழ்ச்சியில் கலந்து கொண்டபோது, ஆசிரியர் கல்கியிடம், மாணவர் ஒருவர் "கதை எப்படி எழுத வேண்டும்?" என்று கேட்டாராம். அதற்கு கல்கி அளித்த பதில்:

'முதிய குருட்டுப் பிச்சைக்காரன் ஒருவன் முன்பு கடவுள் தோன்றி உனக்கு என்ன வரம் வேண்டும்? என்று கேட்டபோது, அவன், "நான் திருமணம் செய்து கொண்டு, பௌர்ணமியன்று என் பேரக் குழந்தைக்கு என் வீட்டு மூன்றாவது மாடியிலிருந்து முழு நிலவைக் காட்டியபடி தங்கத் தட்டில் சாப்பாடு ஊட்ட வேண்டும்!" என்றானாம். ஒரே வரியில் எத்தனை விஷயங்களை அவன் ஆச்சரியமான முறையில் சொல்லியிருக்கிறான் பாருங்கள். கதையும் அப்படித்தான் இருக்க வேண்டும். எளிமையாக, இனிமையாக, புதிய, நல்ல விஷயம் என்று சொல்லும்படி இருக்க வேண்டும்.'

'கல்கி' என்கிற மந்திரவாதியின் கையில் இருந்த மந்திரக்கோல் அப்படித்தான் எழுதியது.

ஒரு தடவை, கல்கி, வெளியூர் போயிருந்தபோது, அவரது வீட்டில் திருடு போய்விட்டது. அவருக்குத் தகவல் தெரிவிக்கப்பட்டது. "ஊர் திரும்பலாமா?" என்று நண்பர் கேட்டபோது, கல்கி சொன்னாராம்: "திருடோ போய்விட்டது. இனி நாம் அங்கே போய் என்ன செய்யப் போகிறோம், இனிமேல் போலீஸுக்குத்தானே வேலை?"

"இன்று, புகையிலை சம்பந்தப்பட்டவைகளைச் சாப்பிட்டால் கேன்சர் வரும் என்று விழிப்புணர்ச்சி ஏற்படுத்திக் கொண்டிருக்கிறோம். ஆனால், அந்தக் காலத்திலேயே கல்கி, புகையிலை, சிகரெட் விளம்பரங்களைத் தவிர்த்து, அதனால் வரும் வருமானத்தையும் இழக்கத் துணிந்து, மக்களிடையே விழிப்புணர்வை ஏற்படுத்தினார்.

ஒருமுறை ஆவடியில் காங்கிரஸ் மாநாடு நடந்தபோது அதைப் பற்றி எழுத சாவியை அனுப்பி வைத்தாராம் கல்கி. மாநாட்டுக்குச் சென்ற சாவி, அனைவரது பேச்சுக்களையும் குறிப்பெடுத்துக் கொண்டிருந்தாராம். இதைப் பார்த்த கல்கி, "பேச்சுகளைப் பிரசுரிப்பது தினசரிக்கு சரி! வாரப் பத்திரிகைக்குச் சரிப்படாது! அங்கே, இங்கே போய்ப்பார்! பலரிடமும் பேச்சுக்கொடு. சாப்பாட்டுக் கூடத்துக்குப் போய் கவனி. அதுதான் வாரப் பத்திரிகைக்குத் தேவை" என்றாராம். புதுமையாய், வித்தியாசமாய் எதையும் செய்ய வேண்டும் என்பது அவரது பாணி! அதே பாணியில் அடுத்த இரண்டு தலைமுறைகளும், பாரம்பரியத்தைக் கட்டிக் காப்பாற்றுவது பாராட்டுக்குரியது.



## சோ ஆற்றிய சிறப்புரை:

பலரும் தாங்கள் சம்பாதிப்பதில் கொஞ்சம் தர்மம் செய்வார்கள்; ஆனால் சதாசிவம் தர்மம் செய்வதற்கென்றே சம்

## பரிசளிப்பு விழா

"கல்கி இதழில் தங்கள் படைப்புகள் இடம் பெறவேண்டும் என்ற தவிப்பு பல எழுத்தாளர்களுக்கும் இருப்பதற்குக் காரணம் தாய்ப் பாசம்தான்" என்றார் கி. ராஜேந்திரன். "பண்டிதத் தமிழ், பாமரத்தமிழ் ஆகிய இரண்டையும் இணைக்கும் பாலம் போல எழுத்தில் ஓர் இலகு தமிழை அறிமுகப் படுத்தியவர் அமரர் கல்கிதான். அந்தத் தமிழை இன்றளவும் பரவலாகப் பின்பற்றுவ

வேண்டும். மலரைப் பெற்றுக் கொண்ட சரவணன், காஸெட்டை சோவிடம் வழங்கச் செய்தார். ● சிறுகதைப் போட்டியில் முதல் பரிசு பெற்ற மலேசிய எழுத்தாளர் கார்த்திகேசு நிகழ்ச்சிக்குப் பறந்து வந்து, பரிசு பெற்றோர் சார்பாக நிறைவான உரை யாற்றினார். ● போட்டி நடுவர்கள் சார்பாகப் பேசியவர் பாஸ்கர் சக்தி. ● எம்.எஸ். காஸெட்டிலிருந்து 'சபாபதிக்கு வேறு தெய்வம்' பாடல் இசைக்கப்பட்டது. 'ஒரு தரம் சிவசிதம்பரம் என்று சொன்னால் போதுமே. பரகதிக்கு வேறு புண்ணியம்



பாதித்தவர். அவரைப் போன்ற அபூர்வ மனிதரைக் காண முடியாது. எண்ணற்ற நல்ல காரியங்களுக்கு உதவியிருக்கிறார்கள் சதாசிவம் – சுப்புலக்ஷ்மி தம்பதி.

இன்று டெலிவிஷன் சேனல்கள், அரசியல் கட்சி சார்புடையவையாக இருப்பதால், நடுநிலையுடன் செய்தி வழங்கும் பத்திரிகைகளுக்கு மக்களிடம் மதிப்பு இருக்கிறது. நெருக்கடி நிலைமை அமலில் இருந்த காலகட்டம் தவிர, பத்திரிகைச் சுதந்திரத்துக்குப் பொதுவாக அபாயம் எதுவும் ஏற்படவில்லை.

என் மேல் கூட ஆசிட் வீச முயன்றார்கள்; சைக்கிள் செயினால் தாக்க முயன்றிருக்கிறார்கள். கத்தி வீசி இருக்கிறார்கள். ஆனால் என்ன...? இதைச் செய்தவர்களுக்குக் குறி பார்த்துச் சரியாக செய்யத் தெரியவில்லை. நான் தப்பித்து விட்டேன்! இதெல்லாம் விதிவிலக்கான நிகழ்வுகள். அதற்காக பத்திரிகைச் சுதந்திரத்துக்கு அச்சுறுத்தல் என்று சொல்லிவிட முடியாது.

எஸ்.எம். கிருஷ்ணாவிடம் பத்திரிகையாளர்கள் சென்று முறையிட்டதில் எனக்கு உடன்பாடு இல்லை. அவ்வாறு செய்திருக்கக் கூடாது என்றே கருதுகிறேன்.

ஆரம்பகாலத்தில் என்னை எழுதும்படி மிகவும் ஊக்குவித்தவர்கள் கி. ராஜேந்திரனும் (கல்கி) சாவியும் (தினமணி கதிர்) 'யாரோ இவர் யாரோ', 'காதல் இல்லையேல் சாதல்' என்று இரண்டு தொடர்களை நான் கல்கியில் எழுதியிருக்கிறேன்.

எழுத்தாளர்கள் பலரை உருவாக்கிய கல்கிக்கு வாழ்த்துக்கள்.




தால் கல்கி இதழின்மீது எழுத்தாளர்களுக்குத் தாய்ப்பாசம்."

"**பொ**துவாக இது போன்ற போட்டிகளில் அவலச்சுவை நிறைந்த கதைகள்தான் அதிகம் இடம்பெறும். இதை மாற்றுவதற்காக ஆக்கபூர்வமாக அமைந்த சிறுகதைகள் மட்டுமே எழுதும்படி அறிவித்திருந்தோம். ஹைகூ கவிதைப் போட்டியிலும் நகைச்சுவை கவிதைகளுக்கே பரிசு"– இணைப்பு உரையினிடையே சீதா ரவி விளக்கினார்.

பண்ண வேண்டுமா...?' என்ற வரி மீண்டும் மீண்டும் திரவலாக ஒலித்தபோது பார்வையாளர் ஒருவர் சொன்ன கமெண்ட்: "கல்கி இந்தப் பாட்டுக்கு விமர்சனம் எழுதியிருந்தா என்ன எழுதியிருப்பார் தெரியுமோ...? 'ஒரு தரம் சொன்னால் போதும்னு கோபாலகிருஷ்ண பாரதி சொல்லிட்டாரே அப்புறம் இரும்பத் திரும்பச் சொல்லுவானேன்.' அப்படின்னு ஆரம்பிச்சு அவரே அதுக்குக் காரணமும் எழுதிப் பாராட்டியிருப்பார்!"

- கல்கி ஏஜெண்டுகள் திரளாக வந்து நிகழ்ச்சியைச் சிறப்பித்தனர். அகமதாபாத்,



### இலக்கியப்போட்டிகளுக்கான பரிசுகளை வழங்கிய நீதிபதி பிரபா ஸ்ரீதேவன்:

இன்று (ஆகஸ்ட் 4) நண்பர்கள் தினம். நண்பர்கள் இறைவனின் தூதுவர்கள். அதாவது இறைவனால் பவர் அஃப் அட்டார்னி வழங்கப்பட்டவர்கள்.

ஏதேதோ பட்டங்களை, என்னென்னவோ காரணங்களுக்காகப் பெயருக்கு முன்னால் போட்டுக் கொள்கிறார்கள்

### கவியரசு வைரமுத்துவின் இலக்கியப் பேருரை:

மனிதனைப் பூரணமான வாழ்க்கைக்குத் தயாராக்குவதுதான் இலக்கியம்.

சங்கப் பாடல்களில் இலக்கணத் தூய்மை இருக்கலாம்; வெண்பாவில் சீர் தளை விதிக்கும் சவால்கள் சந்திக்கப்படலாம்; சிலேடையில் வார்த்தைகளைக் கொண்டு விளையாடும் சாமர்த்தியம் பிரமிக்க வைக்கலாம். சங்கப் பாடல்களையும் காளமேகத்தையும் படித்தபோது அந்த பிரமிப்பை நான் அனுபவித்தேன்.

ஆனால், வார்த்தைகளை ஆளும் ஆற்றலைக் கவிஞன் வெளிப்படுத்துவது இலக்கியம் ஆகிவிடுமா...?

கவிஞன் தன் கர்வத்தை வெளிப்படுத்த எழுதுபவை இலக்கியம் ஆகாது!

பின் எதுதான் இலக்கியம்...? இலக்கியம் என்பது ஓசைகளின் ஒழுங்கு மட்டும் அல்ல; ஜாலம் இலக்கியம் அல்ல...

கருணை மேலோங்கி இருப்பதே இலக்கியம். கருணைதான் இலக்கியம்! உயிரோடிருக்கும்போது ஒரு பெண் மலர்களைச் சூட அனுமதி மறுக்கப்படுகிறாள். அவள் இறந்த பிறகு மட்டும் அவள் உடல் மீது எத்தனை பூ...? கண்ணதாசன் நடத்திய 'தென்றல்' இதழில் 'எத்தனை பூ' என்ற ஈற்றடி கொடுத்து வெண்பா எழுதச் சொன்னபோது எழுதப்பட்ட கவிதை இது.

செடியிலிருந்து உதிர்ந்து கிடக்கும் பூக்களைக் கண்ட கவிஞர் இப்பால் எழுதுகிறார்:

'தூங்கும் குழந்தையின் மடியிலிருந்து விழுந்த





பூனா போன்ற தொலைதூர நகரங்களி லிருந்தெல்லாம் வந்திருந்தனர். ● திருவல்லிக் கேணி பார்த்தசாரதி பெருமாள் பிரசாதமும் மயிலை கபாலீசுவரர் பிரசாதமும் விழா மேடையில் வழங்கப்பட்டன. ● செம்பனார் கோவில் கல்யாணசுந்தரம் குழுவினரின் மங்கள இசை கச்சிதமாக காலை ஒன்பதுக் குப் பொழிய ஆரம்பித்தது. அறுபதாண்டு மகிழ்ச்சியைத் தேக்கி வந்தது. ● இறை வணக்கமாக காயத்ரி வெங்கடராகவன், அமரர் கல்கியின் 'பொன் மயில் ஏறிவரு வான்' பாடலைப் பாட, 'கன்னலின் இனிய தண் தமிழ் அளிப்பான்' என்ற வரியில்

பலர். நட்பை அடையாளமாகச் சுமந்த ஒரே மனிதர் சதாசிவம் – கல்கி சதாசிவம் என்றே அழைக்கப்பட்டவர் அல்லவா!

இந்த இருவரின் நட்பு எத்தனை பெரிய சாதனைகளுக்கு அடித்தளமாயிருந்தது! எவ்வளவு இலக்கியங்களை மலரச் செய்தது!

இலக்கியம் என்பது உண்மையைப் பிரதிபலிக்கும் கண்ணாடியாக இருக்க வேண்டும். ஷேக்ஸ்பியரின் எழுத்துக்கள் இன்றளவும் போற்றப்படுவது இந்த உண்மை ஒளியினால்தான். குளோப் நாடக அரங்கில் மக்களை மகிழ்விக்கத்தான் அவர் நாடகங்கள் எழுதினார். ஆனாலும் தமது எழுத்து நீர்த்துப் போக அவர் அனுமதிக்கவில்லை. அந்த சத்திய ஒளி இருந்தால்தான் ஓர் எழுத்து, இலக்கியம் ஆகும்.

இன்று பரிசு பெறுபவர்களின் எழுத்தில் அந்த ஒளி இருப்பதால்தான் 'கல்கி' அவர்களைப் பரிசுக்குத் தேர்ந்தெடுத்திருக்கிறது. உண்மையின் ஒளி, எல்லா எழுத்திலும் பிரகாசிக்கட்டும்.

பொம்மை போல' அந்த இதழ்கள் கிடந்தனவாம்.

செடி, மலர்களை வேண்டுமென்றே உதிர்த்துவிடாது. பொம்மையை நேசிக்கும் குழந்தைபோல் அது மலர்களை நேசிக்கிறது... இந்தக் கற்பனை – அதிலுள்ள நேசம் – அதுதான் இலக்கியம்.

நினைத்துப் பார்க்காத விஷயங்களைச் சொல்வது இலக்கியம். சுவரில் உள்ள பல்லியைப் பார்த்து 'முதலையின் ஒரு துளி' என்று வர்ணித்தால் அது எத்தனைக் கற்பனையையும் சிந்தனையையும் தூண்டுகிறது!

இந்த நூதனம் இலக்கியம்.



காளிதாசனின் கற்பனை நூதனம் பிரமிக்க வைக்கும். ஓசையின்றி வீட்டுக்குள் நுழைந்த காவல் தெய்வத்தை 'கண்ணாடியினுள்ளே நுழைந்த பிம்பம் போல்' என்று உவமித்து வர்ணிக்கிறான் ரகுவம்சத்தில். இதே ஆற்றல் கம்பனுக்கும் உண்டு. 'வானத்து மின்னல் கீற்றுகளை உடைத்து துடைப்பமாக்கி இலங்கை வீதிகளைப் பெருக்கினார்கள்' என்று எழுதக் கூடிய அளவுக்குச் சென்றது கம்பனின் கற்பனை. ஆனால் காளிதாசன் அறியப்படும் அளவுக்குக் கம்பன் அறியப்படவில்லை. தமிழை, தமிழ் எழுத்தை, பிறர் அறியச் செய்ய வேண்டும்.

சத்தியம் இலக்கியம்; கருணை இலக்கியம்; எளிமையே இலக்கியம்; அறிவை – அழகைப் பகிர்ந்து கொள்ளுதல் இலக்கியம். அது வாழ்க்கைக்கான கருவி.

தமிழின் மெல்லின இடையின உச்சரிப்புக்கு அமரர் கல்கி ஒரு பரீட்சை வைத்திருப்பதாகச் சொன்னார் கல்கி ஆசிரியர். அப்பரீட்சையில் நன்கு தேரிய காயத்ரிக்குச் சிறப்புச் செய்தார் ஆனந்தி! ● மாலை இன்னிசை வழங்கிய நித்யஸ்ரீ, காலை நிகழ்ச்சிக்கும் கணவர் மகாதேவனுடன் வந்திருந்தார்.

தொகுப்பு: சந்திரமௌலி, ஜி.எஸ்.எஸ்.

ஆல்பம் : பக்கம் – 76

மாலை நிகழ்ச்சிகள் அடுத்த இதழில்...

# ரிமோட்

● "உங்களுக்குப் பிடித்த நடிகர் யார்? நடிகை யார்? யார் நல்லா டான்ஸ் பண்றாங்க? யார் சண்டைக் காட்சியிலே சூப்பர்?" இது போன்ற அலுத்துப் போன கேள்விகளையேதான் சன் டி.வியின் 'நீங்கள் கேட்ட பாடல்' நிகழ்ச்சியில் விஜய சாரதி இன்னமும் கேட்டுக்கொண்டிருக்கிறார். ஆனால் ஒவ்வொரு வாரமும் ஒவ்வொரு இடத்துக்குச் சென்று அந்தப் பகுதி குறித்த தகவல்களை அவர் விவரிப்பது சுவாரஸ்யம். இந்த வாரம் 'திருவள்ளூர் ஸ்பெஷல்'. பழவேற்காடு என்ற பகுதியில் உள்ள இடுகாடு ஒன்றின் நடுவே நின்றுகொண்டு விமர்சனம் செய்தார். "இங்கே 59 கல்லறைகள் இருக்கு. ஒவ்வொண்ணும் ஒவ்வொரு வகை. இறந்தவரின் அந்தஸ்துக்குத் தகுந்த மாதிரி கல்லறை கட்டப்பட்டது" என்றார். டச்சு இனத்தைச் சேர்ந்த அரச பரம்பரையினரின் கல்லறை அது. (ராஜா வளர்த்த ஒரு நாய்க்குக்கூட கல்லறை எழுப்பப்பட்டதாம்). நல்லவேளையாக அந்த எலும்புக்கூடும் எழுந்து நின்று "எனக்குப் பிடித்த நடிகை சிம்ரன்" என்றெல்லாம் சொல்லவில்லை!

● எச்.பி.ஓவில் 'காட்பாதர்' படத்தின் மூன்றாம் பாகத்தை ஒளிபரப்பினார்கள். சராசரியாக ஒரு காட்சிக்கு ஒரு கொலை உத்தரவாதம். தொடர்ந்து பார்த்தால் கொத்துக் கொத்தான கொலைகளையும் கண்டு மகிழலாம்! சஞ்சய்தத் விவகாரத்தில் சமீபத்தில் எழுந்துள்ள புயலையும் வைத்துப் பார்க்கும்போது, திரைப் படத்தில் சித்திரிக்கப்பட்டுள்ள தாதாக்களின் உலகம் மேலும் அச்சம் தருவதாக இருக்கிறது.



● ஸ்டார் நியூஸில் வித்தியாசமான ஒரு விளையாட்டுப் போட்டியைக் காட்டினார்கள். இரும்பு முகமூடி. உடலில் கவசம். ஒரு கையில் கேடயம். மறு கையில் மரத்தினாலான வாள் (இதற்குத்தான் அப்படியொரு பாதுகாப்பு!). இந்த வாளை வைத்துக்கொண்டு யார் எதிராளியை நிலைகுலைந்து கீழே விழ வைக்கிறானோ அவனே வென்றவன். ஜெயித்தவருக்குப் பரிசு தற்கால ஒலிம்பிக்ஸில் தரப்படுவது போன்ற பதக்கங்கள் கிடையாது.



# "புரட்சித் தலைவிக்கு நன்றி!"

பண்டைய ஒலிம்பிக்ஸில் வழங்கப்பட்டது போன்ற ஆலிவ் மரக்கிளையால் செய்யப்பட்டக் கிரீடம் தான்!

● அம்மா, அம்மா என்று புல்லரிப்போடு பலரும் கூறுகிறார்கள் (ராஜ் டி.வி), அ.தி.மு.க நிகழ்ச்சி அல்ல. அவர்கள் செவ்வாடை தரித்தவர்கள். பல பெண் மணிகளும் இந்தப் பகுதியில் தொடர்ந்து அம்மாவின் (அடிகளாரின்) பெருமைகளைப் பேசுகிறார்கள். தாராளமாகப் பேசட்டும். அன்னை ஆதிபராசக்தியின் அருமைகளைப் பேசவும் கொஞ்சம் இட ஒதுக்கீடு செய்யலாமே! (அம்மாதான் அன்னை என்பவர்கள் பற்றி நோ காமெண்ட்ஸ்)

● மலேசியாவில் நடைபெற்ற கலைவிழாவில் 'திரைக் குடும்பமே ஒன்று இரண்டதாக கூறிக் கொண்டாலும் விரிசல்கள் அங்கங்கே தெரியத்தான் செய்தன. அஜீத் ஆப்ஸண்ட் (மேடை ஏறக்கூடாது என்பதை கொள்கையாகக் கொண்டிருக்கிறாராம்) முன்னோட்டத்தில் பிற நட்சத்திரங்களெல்லாம் "இந்த அற்புத விழாவை சன் டீ.வியில் கண்டு களியுங்கள்" என்று கூற, எஸ்எஸ். சந்திரன் மட்டும் கவனமாக சன் டீ.வியைத் தம் பேச்சில் தவிர்த்துவிட்டார். ராதா ரவியும் மேடையில் தமது முதல் வாக்கியமாக, "இந்த விழா விற்குச் செல்ல என்னை அனுமதித்த புரட்சித்தலைவிக்கு நன்றி" என்றார்.

● ஸ்டார் ஸ்போர்ட்ஸ் வழங்கிய கூடைப் பந்தாட்டப் போட்டி முடிந்ததும் "யாரும் என்னைத் தடுக்க முடியாது" என்று பேட்டியளித்தார் ஷகுவோனி என்ற வீரர். அமெரிக்காவின் 'லாஸ் ஏஞ்சலஸ் லேகர்ஸ் அணியின் சூப்பர் ஸ்டார் இவர். உயரம் ஏழு அடியை விட அதிகம். போஸ்ட் பாக்ஸில் கடிதத்தைப் போடுவது போல பந்தைக் கூடைக்குள் போட்டுக் கொண்டிருந்தார். இப்படி ஜெயிப்பதுதான் உயர்ந்த மனிதர்களுக்கு அழகு!

● ஸ்டார் விஜயின் 'முதல் வணக்கத்'தில் மமதி சாரிக்குப் பெரும் வரவேற்பு இருப்பது உண்மை. ஆனால் 'நீ நான் அவள்' தொடரில் நடிக்கும்போது முகபாவம், பாடி லாங்குவேஜ் இரண்டிலுமே நிறையப் பற்றாக்குறை. இந்திய பட்ஜெட் போல மேலும் பற்றாக்குறை அதிக மாகிக் கொண்டே போகாமல் சரி செய்து கொண்டால் நல்லது.

- சேனல் பாய்





* மங்கள இசை


* ஆளுனருக்கு வரவேற்பு

# ஆகஸ்ட் 4, காமராஜர் அரங்கம்

* நித்யஸ்ரீ மகாதேவன்



* நிர்வாகிகளுடன் என். ராம்


ஸ்ரீ கிருஷ்ணா ஸ்வீட்ஸ் முரளியின் அன்பளிப்பு





* மேடை அலங்காரம்



* வரவேற்புக் குழு



* இறைவணக்கம் பாடிய காயத்ரிக்குப் பாராட்டு



* மாலன் வருகிறார்



* ஒளிமயமான எதிர்காலம் வேண்டி...



* ப. சிதம்பரம், நக்கீரன் கோபால்









प्रधान मंत्री

Prime Minister

**MESSAGE**

I am happy to know that Kalki group of magazines is celebrating the Diamond Jubilee of Kalki magazine and birth centenary of one of its founding members, Shri Sadasivam.

Media is an important custodian and purveyor of values in society. This responsibility enjoins higher standards of probity and principled professionalism on journalists. It is a matter of great satisfaction that magazines and periodicals like 'Kalki' have made a significant contribution in this direction.

I felicitate the Management, Staff and the contributors and readers of 'Kalki', on this occasion and wish all success to their endeavours.

(A.B. Vajpayee)



மு. கருணாநிதி


[illegible]
கோபாலபுரம்
சென்னை - 600 086
போன் : [illegible]


28-7-2002

அன்புடையீர்,

வணக்கம்.

"கல்கி" வார இதழின் வைர விழாவும், அதன் நிறுவனர் திரு சதாசிவம் அவர்களின் நூற்றாண்டு விழாவும் இணைக்கப்பட்டு அதனை வரும் ஆகஸ்ட் திங்கள் 4ஆம் நாள் சென்னை காமராஜர் அரங்கத்தில் நடத்துவதற்கான அழைப்பிதழ் கிடைக்கப்பெற்றேன். விழாவில் தமிழக மேதகு ஆளுநர் அவர்களும், ஆன்றோர் பலரும் கலந்து கொண்டு சிறப்பிக்கவிருப்பது மகிழ்ச்சிக்குரிய செய்தியாகும். விழா சிறப்புடன் நடைபெறவும், கல்கி வார இதழ் தன்னுடைய பணியிலே மேலும் பல்லாண்டுகள் தொடர்ந்து நடைபோடவும் என்னுடைய மனமார்ந்த வாழ்த்துகளைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அன்புள்ள,

மு. கருணாநிதி

ஆசிரியர்,
கல்கி,
47, ஜவஹர்லால் நேரு சாலை,
ஈக்காட்டுத்தாங்கல், சென்னை 600 097

# வாழ்த்துகிறார்கள்!

கல்கி வைரவிழா மற்றும் கல்கி சதாசிவம் நூற்றாண்டு விழா சிறப்பாக நடைபெற எனது மனமார்ந்த வாழ்த்துக்கள்.

**– இல.கணேசன்,**
அகில பாரத செயலாளர்,
பாரதிய ஜனதா கட்சி.



வைர எழுத்துக்களால் வாழ்ந்து வரும் கல்கி அவர்கள் பெயர் தாங்கிய கல்கி, வைரவிழா காண்பதில் என்ன வியப்பு? நூற்றாண்டு விழா காணும்! உலகுள்ள வரை உயிருள்ள இதழாக உலாக் காணும்! இது நம்பிக்கையல்ல. பிரகடனம்.



**– கவி. சிவம்,** சென்னை - 18

நான் கல்கியின் தீவிர ரசிகன். பள்ளி பருவத்திலிருந்து இன்று வரை. இனியும்! இந்தப் பெருமிதத்தோடு விழா வெற்றி பெற வாழ்த்துகிறேன்.



**– பூவண்ணன்**

கல்கி சதாசிவம் நூற்றாண்டு விழாவும் கல்கி இதழின் வைர விழாவும் சிறப்பாக அமைய வாழ்த்துகிறேன்.

**– சிவந்தி ஆதித்தன்**

அமரர் கல்கி அவர்களை நினைக்கும் போது மலைப்பாக இருக்கிறது. பாரதி - பாவேந்தர், வரிசையில் தமிழ் நாவல்களுக்குச் சிறப்பிடம் பெற்றுத் தந்த எழுத்துலக மேதை அவர். சில நாட்களுக்கு முன் என் மகள் வீட்டுக்குச் சென்றிருந்தேன். பொன்னியின் செல்வன் புத்தம் புதிய பதிப்பை ரசித்து படித்துக் கொண்டிருந்தாள். எத்தனைப் பெரிய அதிசயம் அது! தமிழிலக்கிய வாசகர்கள் தூத்தை கல்கியைப் போல் விரிவுப் படுத்தியவர் வேறு யார்? விழா சிறக்க வாழ்த்துகிறேன்.

**– பொன்னீலன்,** மணிகட்டிப் பொட்டல்

கல்கி பத்திரிகை தாய்நாட்டுப் பற்று, தரமான இலக்கியம், கலை மற்றும் பண்பாடு பற்றிய அக்கறை - ஆகிய லட்சியங்களிலின்று சிறிதும் விலகாமல் இத்தனை ஆண்டுகள் தொடர்ந்து இயங்கி வந்திருப்பது ஒரு மாபெரும் சாதனை. இதற்கு இதன் நிறுவனர்களின் உறுதியான கொள்கைப் பிடிப்பும் அவர்கள் பதித்துவிட்டுப் போன அழுத்தமான அடிச்சுவடும்தான் காரணமென்று நினைக்கிறேன். இதே உயர் லட்சியங்களை அடியொற்றி கல்கி இதழ் இன்னும் பல்லாண்டுகள் தொடர வாழ்த்துகிறேன்.

**– ஆர். சூடாமணி,** சென்னை

விழா இனிதே நிறைவெய்த இருவருளைச் சிந்தித்து வாழ்த்துகிறோம்.

**– பொன்னம்பல அடிகளார்,** குன்றக்குடி.

கல்கி, அரசியல் துறையிலும் சமூகத் துறையிலும் இசைத் துறையிலும் இலக்கியத் துறையிலும், பக்தித் துறையிலும் ஆற்றி வரும் பணிகள் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்தவை. இந்தத் தொண்டும் பெருமையும், புகழும் இன்னும் பல்லாண்டு தொடர திருவருள் துணை நிற்பதாக.

**– ரா.கி.ரங்கராஜன்,** லண்டனிலிருந்து

நாட்டுப் பற்று, மொழிப் பற்று, தமிழ் இனப் பற்று, இவற்றுடன் அழகியல், அறிவியல், அற இயல், இவற்றிலும் ஆழ்ந்த நாட்டம் கொண்டு தமிழ் இதழியல் துறையில் தரம் உயரப் பணியாற்றி வரும் கல்கி இதழுக்கும், ஆசிரியர் குழுவினருக்கும் என இதயங்கனிந்த வாழ்த்துக்கள்.

**– தி.க.சி.** நெல்லை - 6.

# காவிரிக்குத் தண்ணீர்ப் பாக்கெட்!





தமிழகத்தில் காவிரி பாயும் பகுதிகளில் கொண்டாடப்படும் முக்கிய விழாக்களில் ஒன்று ஆடிப்பெருக்கு. நீர் ஆதாரத்தை வழங்கும் காவிரித் தாய்க்கு நன்றி சொல்லும் வகையில் விவசாயிகளும் மற்றவர்களும் காவிரிக் கரையில் கூடி, காவிரித் தாயை வணங்கி வருவது ஆண்டாண்டு காலமாக நடந்து வரும் பழக்கம். ஆனால், இந்த ஆண்டு எல்லாமே கனவாகி விட்டது.

ஒவ்வொரு ஆண்டும் ஜூன் மாதம் பன்னிரண்டாம் தேதி மேட்டூர் அணையிலிருந்து தண்ணீர் திறந்து விடப்படும். அதனால் ஜூலை மாத இறுதி அல்லது ஆகஸ்டு மாத முதல் வாரத்தில் வரும் ஆடிப்பெருக்கு அன்று காவிரியில் வெள்ளம் கரைபுரண்டு ஓடும். பதினெட்டு படிகளுக்கு மேலே தாவி வந்து, தொங்கும் நுரையுமாய் சுழித்தோடும் தண்ணீர்.

இந்த ஆண்டு மேட்டூர் அணையே காய்ந்து கிடப்பதால், அகண்ட காவிரி வறண்ட காவிரியாக காட்சி தருகிறது. ஆடிப் பெருக்கு விழாவன்று ஆற்று மணல் நடுவே ஊற்று தோண்டியும் தண்ணீர் எட்டிப் பார்க்க மறுத்து விட்டது!

அதனால் வழக்கம் போல் அம்மாமண்டபம் படித் துறையில் அலைமோதும் பொதுமக்கள் கூட்டம் இந்த ஆண்டு மிஸ்ஸிங்! வந்திருந்த மக்களிடமும் உற்சாகம் காணப்படவில்லை. படித் துறைகளில் வைத்து பூஜைகள் செய்வதற்காக தட்சணைத் தட்டுகள் வாங்கிய ஒவ்வொருவரும் கூடவே இரண்டு தண்ணீர் பாக்கெட்டுகளை மறக்காமல் வாங்கிச் சென்றது பரிதாபம்! பூஜைப் பொருட்கள் மீதும், அவரவர் தலைகள் மீதும் தண்ணீர் தெளித்துக் கொண்டு காவிரித்தாயை வணங்கி வழிபட்டு வெளியேறினார்கள்.

காவிரியிலிருந்து புனித நீர் எடுத்துச் செல்லும் காலம் போய், இன்று காவிரிக்கே தண்ணீர் பாக்கெட் வாங்கிச் செல்லும் நிலை! ஆண்டவா!

கட்டுரை, படங்கள்:
ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு



# கதையல்ல நிஜம்!



ஆறு அடி, நான்கு அங்குலம் உயர முள்ள 'காலாட்படை' கதாநாயகன் ஜெய்யை, கழுத்து வலிக்க நிமிர்ந்து நிமிர்ந்து பார்த்த பின்பு, டாப் ஆங்கிள் காட்சியெல்லாம் கிரேன் வசதி இல்லாமல், இவரது உதவியோடு எடுத்துவிடலாம் என்று ஜோக் அடிக்கத் தோன்றுகிறது. (நடிகர் ரகுவரனே ஆறு அடி இரண்டு அங்குலம்தானாம்!) இந்த உயரமான நடிகர், முந்நூற்று ஐம்பது மணி நேரம் உயர, உயரப் பறந்துவிட்டு வந்திருக்கும் விமானி.

"பத்து வயதிலேயே, சினிமா ஆசை வந்துவிட்டது. ஆனால், அம்மா, அப்பா விருப்பத்திற்காக பாண்டிச்சேரி ஓரியண்ட் பிளைட் ஸ்கூலில் கமர்ஷியல் பைலட்டாக மூன்று வருடம் படித்து முடித்து 'கேப்டன்' ஆனேன். பைலட் உரிமம் கிடைத்தபிறகு எனது சினிமா ஆசை லட்சியமாகவே மாறி விட்டிருந்தது. எனது உறுதியைப் பார்த்து, பெற்றோர் பச்சைக்கொடி காட்ட, களத்தில் குதித்தேன். எனது புகைப்படங்களை எல்லா படக் கம்பெனிகளுக்கும் அனுப்பினேன். 'சோழா கலைஞர்கள்' பட நிறுவன அதிபர் பொன்னுரங்கமும், இயக்குனர் ஜே. ரமேஷும் என்னை நேரில் வரச் சொன்னார்கள். முதலில் தமிழ் தெரியுமா என்றார்கள். தாய் மொழியைப் பேச என்ன தயக்கம் என்றேன். அவர்கள் கேட்காமலேயே நடித்துக் காட்டினேன். நீதான் ஹீரோ, உனது குரலும்கூட இனிமை, உனக்கு நீயே டப்பிங் பேசு' என்றார்கள். வங்கக் கடலுக்கு மேலே, அயோடின் காற்று முகத்தில் தழுவ, தனிக்ளைடரில் பறப்பது மாதிரி உணர்ந்தேன். ஆனால் என்னாலேயே நம்ப முடியவில்லை. நான் ஹீரோவாகத் தேர்வான அன்றே சகர்ரா ஏர்லைன்சில் இருந்து பைலட்டாக வந்து சேருமாறு அழைப்பு! ஆனால் பைலட் நியமன உத்தரவைத் திருப்பி அனுப்பிவிட்டு நடிக்க வந்துவிட்டேன்" என்று சொல்லும் ஜெய், பிறந்தது வளர்ந்தது எல்லாம் சென்னையிலாம்.

இவருக்கு ஜோடியாக (நாயகி) அறிமுகமாகும் 'விது' சிங்கப்பூர் ஏர்லைன்ஸில் விமான பணிப் பெண். இவரும் சினிமாவுக்காக விமான பணிப் பெண் வேலையைப் பாதியில் விட்டுவிட்டு வந்தவர்.

— ஸ்ரீ சக்கரம்



# இரண்டு தலைமுறைகளின் வரலாறு!

இரண்டு தலைமுறைகளின் வரலாற்றை நல்ல நாவலாக்கி 'காரணங்களுக்கு அப்பாலி'ல் தந்திருக்கிறார் ஆசிரியர் ஐசக் அருமைராஜன். ஒரு மரண ஊர்வலத்தில் தொடங்கும் நாவல் இன்னொரு மரண ஊர்வலத்துடன் முடிவது நிலையாமையின் நிதர்சனத்தைச் சப்தமில்லாமல் விரிக்கிறது.




எளிய குடும்பத்தில் எழும் சிக்கல்கள், மன வேற்றுமைகள், குளறுபடிகள் எல்லாவற்றையும் நுட்பமாகச் செதுக்கிக் கொண்டே போகிற நடையில் நம்மையும் ஒரு கதாபாத்திரமாக்கி விடுகிறார்.

நாகர்கோவில் வட்டார வழக்கு வார்த்தைகளில் கதை விரிந்தாலும், கதாபாத்திரங்களும், மன உணர்வுகளும் எந்த வட்டாரத்திற்கும் அன்னியமானவை அல்ல என்றே தோன்றுகிறது.

தந்தை - மகன், தாய் - மகன், அண்ணன்-தம்பி உறவுகள் என்பதெல்லாம் வெளிப்பார்வைக்கும் உள்ளார்ந்த மன உணர்வு களுக்கும் எத்தனை இடைவெளியோடு இருக்கிறது என்பதை ஆசிரியர் சிக்கல் இல்லாமல் விவரித்து இருப்பது விஷேசம்.

ஒரு குடும்பத்தின் முழு சித்திரத்தையும் வரையும்போது அதில் வராத பிரச்னைகளே இல்லை என்பதை எல்லா அம்சங்களையும் எல்லா கோணங்களிலும் நின்று பார்க்கிற ஆசிரியரின் பார்வை துல்லியமானது.

தனக்குத் தெரியாமல் தறி புரையில் இருந்து நூல் விற்கும் மகனை, தந்தை கண்டிக்கவில்லை. மாறாக தனது தந்தைக்குத் தெரியாமல் திருடி விற்றதை மகன் நினைத்துப் பார்க்கும் இடங்கள் தத்துவார்த்த ரீதியில் எழுதப்பட்டுள்ளன. மகன்தான் தனக்குக் கிடைத்த தண்டனை என்று பேசும் தகப்பனின் துயரம் நம்மையும் கவ்விக் கொள்கிறது.

ஒவ்வொரு பாத்திரத்தின் வாயிலாக ஒரு குணத்தின் தன்மையை விரிப்பது என்பது நாவலின் சிறப்பு அம்சம். சிக்கலான மன உணர்வுகளை, சிரமமின்றி நூலாக்கி இருப்பது எழுத்தின் லாவகம்தான்.

அரசியல், பண்பாடு, கலாசாரம், சமய நம்பிக்கை, மூட நம்பிக்கை எதையும் விட்டு வைக்கவில்லை ஆசிரியர். எல்லாம் அதனதன் இயல்பில் விரிந்து கொண்டும், நறுக்கு தெறித்தது போலவும் வந்து போகின்றன.

தறிப்புரையில் எச்சில் சோறு தின்றவன் எம்.எல்.ஏ ஆகிவிடுவதும் அடுத்தவன் பிழைப்பைக் கெடுக்க, சிற்றுண்டி வாங்கி தருபவன் தொழுநோய் வந்து சாவதும் எது தர்மம் என்பதை, புரிந்தும் புரியாமலும் சொல்வது மாதிரி இருக்கிறது. அரசியல் களம் கதைக்குள் நுழைவது கதையின் காலத்தைப் பின்னோக்கி தள்ளுவது மாதிரி உள்ளது.

பாழ் அடைந்த பங்களாவில் ஒதுங்கியவன் மகான் ஆகிவிடுவதும் நடிகர் கட்சியில் சேர்ந்த சாராய வியாபாரி எம்.எல்.ஏ ஆவதும் வாசகனுக்கு எதையோ உணர்த்த வேண்டும் என்கிற ஆசிரியரின் ஆவலை தெரியப்படுத்தினாலும் எல்லாம் இயல்பு மாறாமல் இருப்பது தான் சுவாரஸ்யம்.

பாலியல் சமாசாரங்கள் கொஞ்சம் தூக்கல்தான் என்றாலும் விரசமில்லை. உண்மை தேடி ஓடிப் போனவனின் கடிதம் சிந்திக்க வைக்கிறது.

வீட்டுக்குள் நடந்த சண்டை, வீட்டுக்காக நடந்த சண்டை என எல்லாவற்றுக்கும் முற்றுப் புள்ளி வைப்பது போல், வீட்டுக் கதவில் பூட்டு தொங்கும்போது ஒரு வெறுமையை உண்டாக்கி விடுகிறது.

**மருதா பதிப்பகம், 3 அடித்தளம், ரியல் ரீஜென்ஸி, 102, பாரதி சாலை, சென்னை- 14, விலை ரூ. 75.**

– ஆரண்யா

# INSTITUTE FOR PSYCHOTHERAPY & MANAGEMENT SCIENCES



67, Hemma Villa, 2nd Flr., Jawahar Nagar, Near Railway Station,
Goregaon (W), Mumbai - 400 062.
☎ 8790891/90, Website : impsmumbai.org.

## அஞ்சல் வழி கல்வி சேர்க்கை அறிவிப்பு

| | |
|---|---|
| எம்.எஸ். (ஆங்கிலம்/தமிழ்)<br>(உளநல சிகிச்சை & ஆற்றுப்படுத்துதல்) *M.S. (Psychotherapy & Counselling)* | .... 2 வருடம் |
| பி.ஜி.டி.பி.சி. (ஆங்கிலம்/தமிழ்)<br>*P.G. Diploma in Psychological Counselling* | .... 1 வருடம் |
| பி.ஜி.டி.சி.சி. (ஆங்கிலம்/தமிழ்)<br>*P.G. Diploma in Career Counselling* | .... 1 வருடம் |
| எம்.பி.ஏ. (ஆங்கிலம் மட்டும்)<br>*M.B.A. (Mater of Business Administration)* | .... 2 வருடம் |

**தகுதி : பட்டப்படிப்பு**

விளக்கவுரை மற்றும் விண்ணப்பப் படிவம் ரூ. 50 நேரில் அல்லது மூலம் செலுத்தி பெறலாம்.

**• சிறப்பு அம்சங்கள் •**

- இந்தியாவிலேயே எம்.எஸ். அளவில் உளநல சிகிச்சை பயிற்சி அளிக்கும் மிகச் சிறந்த கல்வி நிலையம்
- பட்ட மேற்படிப்பு பயில்வோரும் அனுமதிக்கப்படுவர்.
- கல்விச் சான்றிதழ்களின் ஜெராக்ஸ் பிரதிகளை மாத்திரம் சேர்க்கைக்கு இணைத்தால் போதுமானது.
- எமது கல்வி நிறுவனம் திறந்த நிலை பன்னாட்டு பல்கலைக்கழகத்தினரால் அங்கீகரிக்கப்பட்டது.
- திறமை வாய்ந்த நிபுணர்களால் தயாரிக்கப்பட்ட பாடத் தொகுப்புகள் வழங்கப்படுகிறது.

## For Admissions Contact :

- Mrs. SHAKUNTALA SENGUPTA, 23/J, Bade Raipur Road, Near Shaktigarh Play Ground, Jadavpur, KOLKATA - 700 032. ☎ 033-414 0781/414 1689.
- Mrs. UMA JAYARAMAN, 36, Ayyapan Street, Off. Patel Road, Vijaya Laxmipuram, Ambattur, Chennai - 600 053. ☎ 044-6571479
- Mr. GIRISH VAIDYA, 405, Barton Centre, M.G. Road, BANGALORE. ☎ 5091560, Mob : 9845072073.
- MRS. VINITA KUMAR, E-1, Popular Heights No. 2, Koregaon Park, PUNE- 411 001. ☎ 9520 - 612 9524.
- MR. M. NAGESWARAN, P. No. 28, Meenakshi Hospital, Krishna Nagar, MADURAI - 625 001. ☎ 0452-681777/681920.
- MRS. K. REVATHI, 133, Venakataswamy Road West, R.S. Puram, COIMBATORE - 641 002. ☎ 0422-540754.
- MR. PROBODH YELNE, 50, S.E. Rly. Colony, 2, Ranapratap Nagar, NAGPUR - 22. ☎ 0712-265763
- MRs. NAVNEETA SRIVASTAVA, 401, Susampada, 11-B, Old Palasia, INDORE, Madhya Pradesh, ☎ 0731-496 819.
- MR. DEVARAJ MICHAEL, 4/467, Mehala Bhavan, 20th Street, Shanthi Nagar, PALAYAMKOTTAI - 627 002. ☎ 0462-54208. Mob : 98430 77420

# பொய்யில் பூத்த நிஜம்

ராஜாவின் முகத்தில் சங்கடம் தெரிந்தது. அவளுக்குப் பரிதாபம் கூட ஏற்பட்டது.

விதியின் வக்ர விளையாட்டில் அகப்பட்டுக்கொண்டது அவள் மட்டும் இல்லை, அவனும்தான். அவனுடைய நிலை அவளுடையதை விட மோசம். மனோ வளர்ச்சியில் ஐந்து வருடத் தேக்கம் என்பது ஒரு சின்ன மரணம். அவனாக விட்டு வந்த சிறையில் மீண்டும் சிறைப்பட்டது கொடுமையானது. அதில் அவன் வீர்யமிழந்து போனது தெளிவாகத் தெரிந்தது. ஆற்றல் மிகுந்த பெண், புருஷனின் ஆதிக்கத்தில் வெறும் பதுமையாக மாறிவிடுவது போல. ராஜாவைப் பார்த்து பரத் மீண்டும் சிரித்த போது, ராஜாவின் கண்களில் ஒரு மிருகத் தன்மை படர்வதை அவள் கவனித்தாள்.

சகுந்தலா அவனைத் தீர்க்கமாகப் பார்த்துக்கேட்டாள், "இந்தக் குழந்தை உனக்குள்ள எந்த சலனத்தையும் ஏற்படுத்தல்லியா?"

"ஸாரி" என்றான் ராஜா தன்னைச் சமாளித்துக்கொண்டு. "எனக்குச் சுத்தமாக நினைவில்லை." அவனுடைய குரல் சற்று தெம்பாக இருப்பதாகத் தோன்றிற்று. துஷ்யந்தனாக மாறிவிட்டதுபோல அவனுக்குப் பிரமையேற்பட்டது.

"அது உன் தப்பில்லை" என்றாள் நிதானமாக. "ஆனால், நீ அதற்குத் தகப்பன் என்பது உண்மை. நா உன்னை மிரட்ட வரல்லே. மிரட்டறதுதான் என்னுடைய நோக்கம்னா அதுக்கு வேற வழியெல்லாம் இருக்கு. உன்மேல் எனக்கு இருக்கிற பிரியத்தை நான் கேவலப்படுத்த விரும்பல்லே. இரண்டு நாள் அவகாசம் கேட்டே, என்ன முடிவுக்கு வந்தேன்னு எனக்குத் தெரியணும். எங்களுக்குத் தெரிவிக்காமியே நீ ஆஸ்பத்திரியிலேந்து கிளம்பினது நிறைய சந்தேகத்தை ஏற்படுத்தியிருக்கு_"

"உங்களுக்குத் தெரிவிக்காம இருக்கணும் என்கிற எண்ணம் எனக்கில்லே" என்றான் ராஜா. "ஆஸ்பத்திரியிலே இதையெல்லாம் பேசறது சரியில்லேன்னுதான் கிளம்பினேன். எனக்கு இன்னும் அவகாசம் தேவைப்படுகிறது. என் குழப்பத்தை நீங்கள் புரிந்துகொள்வீர்கள். நல்லவேளை என் பெற்றோர்கள் இங்கு வந்திருக்கிறார்கள். அதனால்"

அவன் நிறுத்தி அவளைப் பார்க்கக் கூச்சப்படுபவன் போல் விவேக்கைப் பார்த்துச் சொன்னான்.

"அதனால், நான் இப்போது என் பெற்றோர்களோடு சென்னைக்குச் செல்கிறேன்." இதை எதிர்பார்த்திருந்த நிதானத்தோடு அவள் கேட்டாள்.

"எத்தனை நாளைக்கு?"

அவன் உதட்டைப் பிதுக்கினான். மறுபடி விவேக்கைப் பார்த்து பதில் சொன்னான்.

"இரண்டு மாசம் லீவு போடலாம்னு நினைக்கிறேன். நினைவு திரும்புகிற வரையாவது."

"என்னையும் குழந்தையையும் விட்டுட்டு நீ போயிட்டியானா எங்களைப் பத்தி உனக்கு நினைவு எப்படித் திரும்பும்?" குரல் உடைந்தது. வார்த்தைகள் தமிழில் வந்தன.

காமாட்சியின் குரல் வெளியே உயர்ந்து கேட்டது. "இவளை உள்ளே விட்டதே தப்பு. தாலிகட்டின பெண்டாட்டிக் கணக்கா இல்லே பேசறா!"

"சும்மா இரு காமாட்சி!"

"எப்படிங்க சும்மா இருக்கிறது? அடாவடித்தனமா அவ பேசறா!"

"உஷ்"_

சகுந்தலா, ராஜாவைப் பார்த்தாள்.

அவனுக்கு அந்தப் பேச்சுக் காதில் விழாமல் இருந்திருக்காது. ஆனால் சலனமில்லாமல் உட்கார்ந்திருந்தான், தனக்கு அது சம்பந்தமில்லாதது போல. அல்லது அவனே அப்படி நினைக்கிறவனாக, ஆமோதிப்பவனாக மாறியிருக்கவேண்டும். இவன் அவளுக்குப் பரிச்சயமில்லாத மனிதன் என்று அவளுக்கு அச்சமேற்பட்டது. அவள் தடுமாறியபடி ஆங்கிலத்தில் தொடர்ந்தாள்.

"ராஜா உனக்கு நினைவுதான் இல்லையே தவிர, மூளை இயங்குகிறது. உன்னுடைய குழப்பம் எனக்குப் புரிகிறது. அதுபோல என்னுடைய கஷ்டம் உனக்குப் புரிகிறதோ?"

ராஜா மறுபடி தலையைக் குனிந்து கொண்டான். "எனக்குப் புரிகிறது. நான் அதற்கு வருத்தப்படுகிறேன்."

வெளித் தாழ்வாரத்தில் காதைத் தீட்டிக் கொண்டு இருவர் நிற்பது சகுந்தலாவிற்கு அவமானமாக இருந்தது. அவள் குழந்தையை விவேக்கிடம் கொடுத்து விட்டு ராஜாவுக்கு அருகில் இருந்த நாற்காலியில் அமர்ந்து கொண்டு மெல்லிய குரலில் சொன்னாள்.

"நீ அஞ்சு வருஷத்துக்கு முந்தி எப்படி இருந்தேன்னு எனக்குத் தெரியாது. நாம் சந்திச்சபோது புரட்சிகரமான எண்ணங்கள் உனக்கு இருந்தது. சேர்ந்து வாழணும்ங்கறது நீ செஞ்ச முடிவு. நீ என்னைக் கட்டாயப்படுத்தினதாச் சொல்ல மாட்டேன். உன்மேல் இருக்கிற நேசத்தினால"—

ராஜா சட்டென்று குரலை உயர்த்தி — "ப்ளீஸ், ஸ்டாப்" என்றான். "மேற்கொண்டு பேசாதீர்கள். எனக்கு நினைவு திரும்பும்போதுதான் என்னால் அதைப் புரிந்து கொள்ள முடியும். நீங்கள் சொல்வது உண்மையாக இருந்தால், ஒரு வேளை ஏற்றுக் கொள்ள முடியும் — அதுவரை நீங்கள் எனக்கு அன்னியம்."

அவளுக்குத் திடீரென்று அசதியாக இருந்தது. யுத்தத்தில் தோற்றுப் போனபின் கருணையை எதிர்பார்த்து யாசிப்பது போல இருந்தது. முகம் தெரியாத யாருடனோ ஆன யுத்தம், முகம் புலப்படாத பகைவன்.

"என்னை நீங்கள் மன்னிக்க வேண்டும்" என்றான் அவன். "நினைவு திரும்பும்வரை என்னால் எந்த முடிவும் எடுக்க முடியாது." உனக்கு நினைவே திரும்பவில்லையானால் என் கதி என்ன? என்று அவள் கேட்கவில்லை. செத்துப் போனவனிடம் கேட்க வேண்டிய கேள்வி அது. அவள் சோர்வுடன் எழுந்தாள்.

விவேக்கிடமிருந்து குழந்தையை வாங்கிக்கொண்டு, "அப்பாவுக்கு டாட்டா சொல்லு!" என்றாள். பரத், ராஜாவிடம் தாவப் பார்த்துக் கையை நீட்டினான். அவள் அவன் கையை மடக்கி, "டாட்டா சொல்லு" என்றாள். 'டாட்டா' என்று அவன் கையசைத்தபோது ராஜாவின் தசைகளில் தென்பட ஆரம்பித்த இளக்கம் விரிவதற்குள், சரவணனும் காமாட்சியும் உள்ளே நுழைந்தார்கள். ராஜாவைத் திரும்பிப் பார்க்காமல் சகுந்தலா, குழந்தையுடன் வெளியேறினாள். கதவருகில் சென்ற அவளை, ஒரு நிமிஷம் பொறு என்று விவேக் தடுத்து நிறுத்தி ராஜாவின் பக்கம் திரும்பினான். கன்னங்கள் சூடாகிப் போயிருந்ததை உணர்ந்து சகுந்தலா கதவுக்கு வெளிப்பக்கம் பார்த்தபடி நின்றாள். மனசு விவஸ்தையில்லாமல் ஓ என்று ஓலமிட்டது. தெரு ஓரத்தில் அமர்ந்து வெட்கம் மானம் எல்லாம் மறந்து தலையில் அடித்துக் கொண்டு அழவேண்டும் போலிருந்தது.

விவேக் உள்ளே ஏதோ சொல்லிக் கொண்டிருந்தான் ஆங்கிலத்தில்.

"ராஜா, உனக்கு இது மருத்துவ பிரச்னை என்பதைவிட சித்தாந்தப் பிரச்னையாகிவிட்டதுபோலப் படுகிறது."

"நீ எப்படி வேணும்னாலும் நினைத்துக் கொள். எனக்கு ஞாபகம் வராத நிலையில் என்னால் ஒரு பெண்ணுடன் எப்படி வாழ முடியும் என்று நினைக்கிறாய்?"

## எங்கேயோ கேட்ட கதை

டவுன் பஸ்ஸில் ஏறிய கிழவர், பெண்கள் பகுதி இருக்கை ஒன்று காலியாக இருக்கவே, அதில் சௌகர்யமாக உட்கார்ந்து கொண்டார். அடுத்த நிறுத்தத்தில் ஒரு பெண் ஏறிவிடவே, அவர் எழுந்து இடம் கொடுக்க முயன்றார்.

ஆனால் அந்தப் பெண் "பரவாயில்லை உட்காருங்கள்" என்று கூறி அவரைப் பிடித்து உட்கார வைத்துவிட்டாள்.

அடுத்த நிறுத்தத்திலும் அதே மாதிரி

நடந்தது. தொடர்ந்து இரண்டு பஸ் நிறுத்தத்திலும் கிழவர் எழுந்திருப் பதும் அப் பெண் அவரை உட்காரச் சொல்லி வற் புறுத்துவதுமாக இருக் கவே...

ஒரு கட்டத்தில் கிழ வருக்குக் கோபம் வந்து விட்டது. "நீ இப்படிச் செய்தால் நான் எங்கே தான் இறங்குவது?" என் றார்.

பெண் முகத்தில் ஈயாட வில்லை. ○



'சகுந்தலா சட்டப்படி உன் மனைவியாக இருந்திருந்தால்?...'

கேள்வி அபத்தமாகப் பட் டது. கேள்வி கேட்ட விவேக் கின் மீது ஆத்திரம் வந்தது. எதுவும் பேசாமல் குழந் தையை சமேலி வாங்கிக் கொண்ட பிரக்ஞை இல் லாமல் கனவில் சஞ்சரிப் பவள் போல் சகுந்தலா முன் இருக்கையில் அமர்ந்த போது, மகாபாரத காலத் தில் உறைந்து போயிருந்தான்.

'துஷ்யந்தனே – கேள் – சத் தியத்தைவிட உயர்ந்த சட்டம் ஏதுமில்லை. சத்தியத்தை விட மேன்மையானது ஏது மில்லை. ஒரு பொய்யைவிட தீமையானது இந்தப் புவியில் வேறெதுவுமில்லை – உண் மையே அழிக்க முடியாத சாஸனம் – அத னுடன் தான் உனக்குக் கூட்டணி இருக்க வேண்டும் – பொய்மையுடன் அல்ல. பொய்மையுடன் நீ வாழ முடிவெடுத்தால், என் மீது உனக்கு நம்பிக்கை இல்லை என்றால், நான் போகிறேன். உன்னைப் போன்ற ஒருவனுடன் உறவு வைத்துக் கொள்வதில் எந்த அர்த்தமுமில்லை. நீ இல் லாமல் துஷ்யந்தா, என் மகன் இப்புவியை ஆள்வான்!'

"சகுந்தலா சட்டப்படி உன் மனைவி யாக இருந்திருந்தால்? உன் பெற்றோர்கள் இங்கு வராமல் இருந்திருந்தால்?"

ராஜாவின் குரல் மெதுவாகக் கேட்டது – "அந்தக் கேள்விக்கே இப்போது இடமில்லை."

"பிரச்னை ஏற்படுத்தவே வந்தீர்களா இரண்டு பேரும்?" என்றார் சரவணன் ஒடு கிய குரலில். "குழந்தையைக் காட்டி அந்தப் பெண் பயமுறுத்துகிறாள். நீயானால், 'உன் பெற்றோர்கள் இல்லையென்றால்' என்று எங்களுக்குச் சமாதி கட்டப் பார்க்கிறாய். என் மனைவி சொன்ன மாதிரி உங்களை உள்ளே விட்டிருக்கக் கூடாது. அவனுக்கு நினைவு இருந்தால் பிரச்னை வந்திருக் குமா? இரண்டு மூன்று மாதங்களுக்குத் தானே லீவு எடுக்கிறதாகச் சொல்கிறான்? குடி முழுகிவிட்ட மாதிரி ஏன் இரண்டு பேரும் மாய்ந்து போகிறீர்கள்?" தெருவைப் பார்த்தபடி நின்றிருந்த சகுந்தலா திரும் பாமலே, 'விவேக், வா போகலாம்'' என்றாள்.

'வரேன்' என்றான் விவேக் அவளிடம் இந்தியில். பிறகு உன் பக்கம் பார்த்து, "ஓ.கே. ராஜா, அப்ப உன் இஷ்டம்" என்று தொடர்ந்தான். "உடம்பைப் பார்த்துக் கொள். எங்களுடன் நீ தொடர்பு கொள்ளணும். என்னுடைய ஈ மெயிலுக்கு நீ எழுதலாம். என் கார்டைத் தரேன்." சகுந்தலா காரை நோக்கி நடந்தாள். பரத் உற்சாகத்தில் காலை உதைத்துச் சிரித்தான்.

"நாம தோத்துப் போயிட்டோண்டா கண்ணா'' என்றாள் அவள் உடைந்த குரலில்.

தசை நரம்புகள் மெல்லத் தளர்ந்தன. பல யுகங்களைப் பயணித்ததுபோல இருந் தது அவனுக்கு. சுயபிரக்ஞை வந்தபோது ஜுரம் வந்து எழுந்த உடம்புபோல உடலை அசதி ஆட்கொண்டது. யாரோ அவன் கையைத் தொட்டார்கள். அவன் திரும் பினான். விவேக் காரைச் செலுத்திக் கொண் டிருந்தது அப்போதுதான் தெரிந்தது. அவள் கையை இலேசாகத் தட்டி "டேக் இட் ஈஸி''– என்றான். கன்னங்கள் நனைந் திருந்ததை உணர்ந்து அவள் கைக்குட்டை யால் துடைத்துக் கொண்டாள். அவனைப் பார்த்து அவள் இலேசாகப் புன்கைத்தாள். ''தாங்க்ஸ்'' என்றாள். ''நா சமாளிச் சுக்குவேன் கவலைப்படாதே."

"குட்!" என்றான் அவன். "உன்னுடைய கார் சாவியைக் கொடு!"

''ஏன்?'' என்றாள் அவள். வண்டி அவளுடைய வீட்டுக்குச் செல்லும் பாதை யில், நிஜாமுதின் பாலத்தில் செல்வதை அப்போதுதான் கவனித்தாள்.

''நா உன்னை வீட்டிலே கொண்டு

விடறேன். பிறகு உன் காரைக் கொண்டு வந்து சேர்த்துடறேன்."

உனக்கு ஏன் சிரமம் என்று அவன் கேட்கவில்லை. அவளுடைய மனநிலையில் அவள் ஓட்டுவது சரியில்லை என்று அவன் நினைப்பது நெகிழ்ச்சி அளித்தது.

"தாங்க்ஸ் விவேக்" என்றாள். தன்னுடைய கைப்பையிலிருந்து கார் சாவியை எடுத்துக் கொடுத்தாள். சமேலி அமர்ந்திருக்கிறாள் என்கிற உணர்வில் அவன் மெல்ல ஆங்கிலத்தில் பேசினான்.

"உணர்ச்சிவசப்படாமல் மூன்றாம் நபரைப்போல யோசித்துப் பார்த்தோமானால் ராஜாவுடைய பிரச்னையைப் புரிந்து கொள்ள முடியும்"_

"எனக்குப் புரிகிறதே" என்றாள் அவள் இலேசாக. "என் பிரச்னை அது இல்லை விவேக்".

விவேக் அவள் சொல்வதைப் புரிந்து கொண்டவனைப் போல மௌனமாக தெருவைப் பார்த்தபடி ஓட்டினான். எதைப் பற்றியும் எதுவும் பேசாமல் இருந்தால் போதும் என்று இருந்தது அவளுக்கு. நிலைமை அவளை மீறிப் போய்விட்டதாகத் தோன்றிற்று. குருட்டு அதிர்ஷ்டத்திற்குக் கூட வாய்ப்பில்லை என்கிற அதைரியம் ஏற்பட்டிருந்தது.

"அவனுக்கு மெல்ல மெல்ல நினைவு வரும்- என்கிறார் டாக்டர். நினைவு வந்ததும் நிலைமை மாறிடும் சக்கு. ராஜா புரிந்துகொள்வான்."

சகுந்தலா உற்சாகத்தை வரவழைத்துக் கொண்டு சிரித்தாள்.

"ஓ.கே.! அதுவரை காத்திருந்தாப் போச்சு! என்னுடைய காலேஜ்ல பரிமளான்னு ஒரு தமிழ்ப் பெண் என் வகுப்பிலே இருப்பாள். தலையெல்லாம் நரைத்துப் போயிருக்கும். அவளுடைய குழந்தை ஒரு வயதாயிருக்கும்போது புருஷன் ஒரு வாரத்திலே திரும்பி வரேன்னு ஊருக்குப் போனாராம். வருவார் வருவார்னு இவ பாவம் காத்துக்கிட்டே இருந்திருக்கா. ஒரு நாள் கண்ணாடியிலே பார்த்தப்ப தலை நரைச்சுப் போயிருந்ததாம். குழந்தைக்குப் பத்து வயசாயிருந்ததாம். இனிமே டயத்தை வீணாக்கக் கூடாதுன்னு காலேஜிலே சேர்ந்தேன்னா."

விவேக் தீவிரமாக முகத்தை வைத்துக் கொண்டு சொன்னான்.

"உனக்கும் அவளுக்கும் சம்பந்தமில்லே!" அது காதில் விழாததுபோல சகுந்தலா தொடர்ந்தாள்.

"ஒரு வேடிக்கை தெரியுமோ? நா தமிழ் பேசறவ என்கிற காரணத்தாலேயோ என்னவோ எங்கிட்ட தன் கதையைச் சொன்னா. மத்த எல்லார்கிட்டயும் புருஷன் அமெரிக்கா போயிருக்கார்னு சொல்லுவா."

விவேக் எதுவும் பேசவில்லை. சகுந்தலா மீண்டும் சிரித்தாள்.

"எந்த கற்பனை கதையையும் நா சொல்ல வேண்டியதில்லை. நா என் நிஜக் கதையைச் சொன்னாலும் யாரும் நம்பப் போறதில்லே."

"நம்பிக்கை வை சக்கு" என்றான் விவேக் மென்மையாக.

"வைக்கிறேன்" என்றாள் சகுந்தலா. "ஆனால் பரிமளா மாதிரி இருக்க மாட்டேன் நிச்சயமா."




**சிம்னி விளக்கு**
**சிந்திய ஒளியில்**
**அடையாளமானது**
**மின் கட்டண அட்டை!**
**- ச. முருகேசன்**

பின் வீட்டில் சப்தமே இல்லாமலிருப்பது எப்படி என்று அவள் திரும்பிப் பார்த்தாள். பரத், சமேலியின் மடியில் படுத்துத் தூங்கியிருந்தான். சமேலியும் தூங்கிக்கொண்டிருந்தாள். இன்று நடந்ததெல்லாம் சமேலிக்குக் குழப்பத்தை அளித்திருக்கும். விஷயம் தெரிந்தால் அதிர்ச்சி அடைவாள். இப்படியும் ஒரு அதிசய கதை இருக்குமா என்று அந்தக் கட்டிடத்தில் இருப்பவர்களிடமெல்லாம் அவள் சொல்லிச் சொல்லி பிரலாபிக்கலாம். இந்தக் கதை ஒரு சுற்று உலவிவிட்டு வருவதற்குள் பரிமளாவைப்போல சகுந்தலாவுக்குத் தலை நரைத்துப் போயிருக்கும்.

அவள் திடீரென்று நினைவு வந்தவளாய் விவேக்கிடம் இயல்பாகச் சொன்னாள்.

"ராஜாவுடையத் துணியையெல்லாம் நாளைக்குப் பாக் பண்ணித்தரேன். கொஞ்

சம் கொடுத்துட்டு வர்றியா?"

"சரி" என்றான் விவேக் சாதாரணமாக. "எல்லாத்தையும் கொடுக்காதே."

அவளுக்குச் சிரிப்பு வந்தது. எடுக்கும் எச்சரிக்கைகள் எல்லாம் சிறுபிள்ளைத் தனமாக, அர்த்தமற்றவையாகப் போனதை அறியாமல் அவன் பேசுவதாகப்பட்டது. வீடு வந்து அவர்கள் இறங்கிக் கொண்டதும், விவேக் ஜன்னல் வழியாக அவளைப் பார்த்து, "சக்கு, ஜஸ்ட்..." என்று ஆரம்பித்ததும், "ரிலாக்ஸ்!" என்று முடித்து அவள் சிரித்தாள். "காரைக் கொண்டுவிட வரும் போது, மேலே வந்து என்னோட டீ சாப்பிடு."

அவன் புன்னகையுடன் தலையை அசைத்துவிட்டுக் கிளம்புவதை அவள் சற்று நேரம் பார்த்துக் கொண்டிருந்துவிட்டு வீட்டுக்கு விரைந்தாள். சமேலி, பரத்துடன் முன்னால் சென்றிருந்தாள். வீட்டிற்குள் அவள் நுழைந்தபோது, பரத் அவனது கட்டிலில் தூங்கிக் கொண்டிருந்தான். சமேலி சமையலறையில் தேநீர் தயாரிப்பதில் இருந்தாள். படுக்கை அறையிலிருந்து பாத்ரூமுக்குச் செல்லும் வழியில் கம்ப்யூட்டர் டேபிளில் இருந்த புகைப் படத்திலிருந்து ராஜா சிரித்தான். பாத்ரூமிற்குள் நுழைந்து முகம் கழுவுகையில் கண்ணாடியில் தெரிந்த முகம் பயங்கரமாக இருந்தது. கிட்டத்தட்ட பரிமளாவின் சாயலில். சில மணி நேரங்களில் பத்து வயது கூடிவிட்டது போலிருந்தது. ராஜா எங்கே என்று அக்கம்பக்கத்தவர், சினேகிதர், சினேகிதிகள் கேட்டால் என்ன சொல்லப்போகிறோம் என்று அவள் யோசித்தாள். சென்னைக்குப் போயிருக்கிறார் என்பதற்கும் பரிமளாவின் 'அமெரிக்கா போயிருக்கிறார்' என்பதற்கும் அதிக வித்யாசமில்லை என்று தோன்றிற்று. ஏன் போனார், எதுக்குப் போனார், எப்ப வருவார். உடம்புக்கு ரெஸ்டுக்காகப் போயிருக்கார். வந்துடுவார் இரண்டு மூணு மாசத்திலே. நிச்சயமா? நிச்சயமாக, அதாவது நினைவு திரும்பின உடனே. நினைவு வேற இல்லையா? ஈசுவரா. கோமாவிலேயா இருக்கார்? ஆமாம். கிட்டத்தட்ட. இரண்டு வருஷம் ஒண்ணா படுத்து, ஒண்ணா சிரிச்சு, ஒண்ணா சிந்திச்சது, பிள்ளைப் பெத்தது எல்லாம் மறந்து போச்சுன்னா கோமா இல்லாம என்ன அது? கோமாவைவிட மோசம். பொறுக்கி எடுத்து யாரோ சாபமிட்டாப்பலே சில வருஷ ஞாபகம் கழண்டு போச்சுன்னா யார் நம்புவா? அவள் முகத்தில் நீரை வாரி வாரி இரைத்துக் கொண்டாள். குமுறி குமுறி துக்கம் வெடித்தது. நிற்காமல் வழிந்த கண்ணீரை அவள் நீர் விட்டுக் கழுவினாள். முகத்தை டர்கிஷ் டவலால் துடைத்துக் கொண்டபோது அதில் ராஜாவின் வாசனை இருந்தது. வெளியில் வந்து சமேலி நீட்டிய தேநீர் கோப்பையை வாங்கிக் கொண்ட போது செவி மடல்களில் வாசனை தவழ்ந்தது. சூடாக தேநீர் உள்ளே இறங்கியதும் சமேலியைப் பார்த்துச் சொன்னாள், "பரத்துடைய அப்பாவுக்கு என்னோடு வாழ்ந்ததே மறந்து போச்சு சமேலி."



சமேலியின் விழிகள் அகன்றன.

"என்னாலே நம்பமுடியல்லே தீதி" என்றாள்.

"என்னாலேயும் நம்ப முடியல்லே சமேலி" என்றாள் சகுந்தலா. "ஆனா அது உண்மை."

"முன்னாவைப் பார்த்தும் நினைவு வரல்லையா?"

சகுந்தலா தலையைக் குனிந்துகொண்டாள். காளிதாசனின் துஷ்யந்தன் எதிரில் நின்றான்.

'என் பெயரைக் களங்கப்படுத்தி என்னை நாசமாக்கப் பார்க்கிறாயா?

மரங்களைப் பெயர்த்து நீரைக் கலங்கடித்து தன்னுடைய கரைகளையே தகர்க்கும் நதியைப் போல?'

(தொடரும்)





• ஷியாமளன்

தீவிர மத போதகர்தான் அவர். ஆனால் அவரது அருமை மனைவி சாலை விபத்தொன்றில் கொடூரமான முறையில் இறந்ததிலிருந்து மனம் மாறிவிடுகிறார். "என்னத்த சாமியோ போ" என்றபடி தன் அண்ணன் குடும்பத்துடன் பண்ணை வீட்டில் தங்குகிறார். இனியாவது தன் வாழ்க்கை கொஞ்சம் சீராகும் என்று நம்புகிறார். ஆவதில்லை.

அவர்கள் வீட்டைச் சுற்றியுள்ள விவசாய நிலத்தில் திடீரென்று வட்டமான தடங்கள். யாரோ நள்ளிரவில் கூட்டமாக அங்கு வந்து சென்றிருக்கிறார்கள் என்ற சந்தேகம் எழுகிறது. தொடர்ந்து வரும் ஓர் இரவில் அங்கு நின்று கொண்டிருக்கும் ஓர் உருவத்தை மேற்படி குடும்பத்தினர் அனைவருமே பார்க்கிறார்கள். ஆனால் பிடிக்கப்போகையில் அந்த உருவம் காற்றில் மாயமாக மறைந்துவிடுகிறது!

இப்படிப் போகிறது "சைன்ஸ் (sign's) (அறிகுறிகள்)திரைப்படம். இயக்கியவர் மனோஜ் நைட் ஷியாமளன். புரூஸ் வில்லியைக் கதாநாயகனாக வைத்து "சிக்ஸ்த் சென்ஸ்" திரைப்படத்தை எழுதி இயக்கி ஹாலிவுட் பாக்ஸ் ஆபீஸில் சரித்திரம் படைத்த நம்மூர்க்காரர். 'சைன்ஸ்"'ம் இந்த பாக்ஸ் ஆபீஸ் வரலாற்றை மீண்டும் படைத்து வருகிறது.

பரபரப்பை ஏற்படுத்திவரும் 'சைன்ஸ்' படத்தின் நாயகன் மெல் கிப்ஸன். நடிக, இயக்குனரான இவர் "ப்ரேவ்ஹார்ட்" படத்திற்காக சிறந்த இயக்குனருக்கான ஆஸ்கர் பெற்றவர்.

தமது எல்லாப் படங்களிலுமே அமானுஷ்ய சக்திகளைப் புகுத்திவிடுகிறார் ஷியாமளன். அவரது உள்ளுணர்வே அவரது

# ஷியாமளனுக்குள் ஒரு பட்சி!

வாழ்வில் பலவித மாயங்களைச் செய்தது இதற்கு ஒருவித காரணமாக இருக்கக் கூடும். தம் வருங்கால மனைவியுடன் நடந்த முதல் சந்திப்பிலேயே "இவ, இவதான் என் மனைவி



• கிப்ஸன்

யாகப் போறா" என்று தோன்றியதாம். பில டெல்பியாவில் வாடகைக்கு வீடுதேடியபோது கண்ணில் ஒரு கட்டடம் தென்பட, 'இதுக்கு நான் சொந்தக்காரனாவேன்' என்றதாம் அவருக்குள் ஒரு பட்சி(!) சில வருடங்களில் அதை வாங்கிப் போட்டுவிட்டார்! "சிக்ஸ்த் சென்ஸ்" படத்தைத் திரைக்கதையாக எழுது வதற்கு முன்பே "இதை எழுதி இயக்குவதற்காக எனக்கு இரண்டு மில்லியன் டாலர் தொகை கிடைக்கும்" என்று உள்ளுணர்வு தோன்ற அதுவும் பலித்தது (சின்ன திருத்தத்தோடு – கொசுறாக ஒரு மில்லியன் டாலர் கிடைத்தது)

இன்றைய தேதிக்குத் திரைக்கதைக்காக உச்சமான தொகையை வாங்குவது இவர்தான். இரண்டு மில்லியன் டாலர் தொகையைத் தயங் காமல் வழங்கியிருக்கிறது டிஸ்னி நிறுவனம். "சைன்ஸ்" படத்திற்காக பன்னிரண்டரை மில்லியன் டாலர் பெற்றிருக்கிறார்.

தன்னுடைய ஒவ்வொரு திரைப்படத்தின் முதல் காட்சியையும் தான் வசித்த பிலடெல் பியா நகரில் எடுப்பதை வழக்கமாகக் கொண்டி ருக்கிறார். (ஏதாவது அமானுஷ்ய சென்டி மெண்ட்டோ?). 'சைன்ஸ்' படப்பிடிப்பு தொடங் கப்பட்டது நியூயார்க் வர்த்தக கோபுரங்கள் வீழ்ந்த இரண்டாவது நாள். அதாவது பதிமூன் றாம் தேதி!

கிராஃபிக்ஸ் என்றெல்லாம் கலக்காமல் ஆழ்ந்த உள்ளுணர்வுகளையும், இனம் காண முடியாது உலவும் பிற சக்திகளையும் படைத்து பயம் காட்டுவதில் இவரை ஹிட்ச்காக்கோடு ஒப்பிடத்தொடங்கிவிட்டார்கள் சினிமா விமர்சகர்கள். இன்னொரு ஒற்றுமையும் இருக் கிறது. ஹிட்ச்காக் போலவே ஷியாமளனும் தமது ஒவ்வொரு படத்திலும் ஏதாவது ஒரு காட்சியில் தலைகாட்டுவதை வழக்கமாகக் கொண்டிருக்கிறார். "சைன்ஸ்" படத்தில் அவர் கதாநாயகனின் பக்கத்து வீட்டுக்காரராக வரு கிறார்.

— ஜி.எஸ்.எஸ்.

13

# மனம் உருகுதே...

கோபமில்லாத நிலையே சக்தி. இது முதுரை. மகாகவியின் வாக்கு. ஆனால், சக்தியைச் சேமித்து வைக்கவோ, தனக்குள் நிலைநிறுத்திக் கொள்ளவோ மனிதர்களுக்குத் தெரிவதில்லை. அவ்வப்போது எடுத்துச் சிதறடித்துவிட்டுக் காலியாகக் கிடப்பதையே இவர்கள் வழக்கமாகக் கொண்டிருக்கிறார்கள்.

கோபம் வருவதற்குக் காரணமென்ன?

நான் என்னும் அகங்காரம்.

நான் என்னும் அகங்காரம் எதனால் ஏற்படுகிறது?

சிறிதளவு ஞானம். பூரணமில்லாத புத்தி. முழுமையில்லாத அனுபவம். முதிர்ச்சியில்லாத புத்தி.

மீண்டு வர என்ன செய்ய வேண்டும்?

ஒருவர் தன்னுள் இடையறாது உற்றுப் பார்த்துக் கொள்ள வேண்டும். தனக்குள் தோன்றுவது என்ன? எங்ஙனம் தோன்றுகிறது? எதனால் தோன்றுகிறது? தோன்றுதலின் நடுநிலைமை என்ன? என்று பார்க்க வேண்டும்.

ஆனாலும், மனிதர்களால் பார்க்க முடியவில்லையே... காரணம் என்ன?

மனத்திற்குக் கடிவாளம் இல்லாமல் ஓட விடுதல். உணர்வு தோன்றியவுடனேயே செயலில் இறங்கிவிடுதல். பசித்தவுடனேயே நாய் இரை மீது பாய்வதைப்போல, கோபம் கொண்டவுடனேயே புலி சீறித் தாக்குவதைப் போல, தனக்கருகே கால் தெரிந்ததும் யார் என்று பார்க்காமல் பாம்பு கொத்துவதைப்போல. இரைபறித்துப் போவதைப் பார்த்தவுடன் கோபப்பட்ட காக்கைகள், எந்த வலியுமின்றி கழுகைத் துரத்திக் கொண்டு போய், சோர்ந்து விடுவதைப் போல, கைபட்டால் மூடிக் கொள்ளும் தொட்டால் சிணுங்கியைப் போல எண்ணமும் செயலும் ஒரே வேகத்தில் வெளியாகின்றன.

உணர்வை மனிதர்கள் கவனிப்பதே இல்லை. பல நேரங்களில் அவர்கள் விலங்குகள் போல, ஐந்தறிவு உயிரினம் போல செயல்படுகிறார்கள்.

கோபம் வரும்போது என்ன செய்ய வேண்டும்?

தோன்றும்போது அதை ஏற்றுப் பார்த்து விட வேண்டும். எனக்குக் கோபம் வருகிறது. கோபத்தை வெளியிடுவதில் என்ன லாபம்? வெளியிடாது போனால் என்ன குறை? எப்படி வெளியிட்டால் சிறப்பாக இருக்கும்? என்றெல்லாம் யோசித்து விடுவது நல்ல காரியம்.

ஏன் செய்ய முடியவில்லை.?

பயிற்சியின்மை.

பயிற்சி யார் தருவார்கள்?

இது தந்து பெறுவதல்ல. உங்களுக்குள் நீங்களே சரி செய்து கொள்ள வேண்டும்.

எப்படி.... எப்படி ஐயா இதைச் சரி செய்து கொள்வது?

ஆஹா... இப்பொழுது கதறுகிறீர்களே. உரக்கக் கூவுகிறீர்களே. இம்மாதிரி பலமுறை உள்ளுக்குள் கூவ, ஏதேனும் வழி தெரியலாம்.

வீட்டுக்காரன் பிள்ளையை விரட்டி விட்டு ராதாகிருஷ்ணன் மாடியின் வராண்டாவில் குறுக்கும் நெடுக்கும் நடந்தவிதமாக யோசித்தார்.

மனம் பின்னல் பின்னலாய்ப் பல்வேறு சிந்தனைகளை வெளிப்படுத்தியது. கலவரம் அடிவயிற்றில் ஏற்பட்டது. கோபத்தைவிட, கோபத்தைப் பற்றிச் சிந்திப்பதைவிட அதனால் ஏற்படும் இந்தக் கலவரம்தான் மிகப் பெரியதாகவும் கொடுமையாகவும் இருக்கிறது.

ராதா கிருஷ்ணன் என்ன செய்வதென்று தெரியாமல் தவித்தார்.

என்ன முட்டாள்தனம்! ஏன் இந்த வேலையைச் செய்துவிட்டேன். அது அவ

னுடைய வீடு. அவன் வந்து தொந்திரவு செய்தாலும் மரியாதையாகச் சொல்லியிருக்கலாம். என்னால் அடித்து ஆளை விரட்ட முடியும். பிடித்து ஆளைச் சாய்க்க முடியும். சுருட்டி எறிய முடியும் என்கிற உடல் கர்வத்தோடு நடந்து கொண்டேன். ஆனால், இப்பொழுது ஓர் அறை வாங்கினால் செத்துப் போய் விடுவேனோ என்று பயப்படுகிறேன். நான் நான்கு மணி நேரம் முன்பு கோபப்பட்டதற்கும் இப்பொழுது பயப்படுவதற்கும் இடையில் எவ்வளவு வித்தியாசம். எந்த உணர்வு உண்மை? எந்த உணர்வு பொய்? நான் இரண்டும் இல்லாதவனா? அல்லது இரண்டுமே உடையவனா?

மனம் மீண்டும் மீண்டும் தவித்தது.

ரேவதி சமையலறையில் வேலை செய்து கொண்டே புருஷன் படுகிற வேதனையைப் பார்த்தாள்.

இப்பொழுது போய் என்ன உபதேசம் சொன்னாலும் அது எதிர்ப்பாகத்தான் இருக்கும். மறுபடியும் இன்னொரு கோபமாகத்தான் பொங்கும். நான் அப்படித்தான் செய்வேன் என்று பிடிவாதமாக மாறும். எனவே, அவரே அடங்கி என்ன செய்யலாம் என்று யோசனை கேட்கிற பொழுது, இது செய்யலாமா என்பது போல் பேசுவது நல்லது என்ற முடிவுக்கு வந்தாள். எப்பொழுது பேசுவார் என்று காத்திருந்தாள்.

அவர் பேசக் காணோமே என்று வருத்தப்பட்டாள்.

கீழே வாசற்பக்கம் கதவு திறக்கும் ஓசை கேட்டது.

நாடார் மேலே ராதா கிருஷ்ணன் பெயரைச் சொல்லி கூவும் சப்தம் கேட்டது.

ராதா கிருஷ்ணன் வெளியே நடக்க முற்பட, அவன் அவரைப் பார்த்து இங்கேயே இருங்கள்; வர வேண்டாம் என்று அடிக்குரலில் எச்சரித்துவிட்டு மடமடவென்று கீழே இறங்கினாள். யார் என்று பார்த்தாள்.

வாசலில் பத்துப் பன்னிரண்டு பேர் நின்றிருந்தார்கள். நடுவிலே வீட்டுக்காரனின் பிள்ளை விரைப்பாக நின்றிருந்தான். கதவு திறந்து வாங்கோ என்று சொன்னாள்.

"என்ன வாங்கோ. எங்க இருக்கான் உன் புருஷன்?"

வேகமாக, கோபமாக வீட்டுக்காரன் பிள்ளை கேட்டான்.

நாடார் மெல்ல அவனைத் தோளில் தட்டி, பெண் பிள்ளையிடம் வேகமாகப் பேச வேண்டாம் என்று சொல்ல, "விடுய்யா. எனக்குத் தெரியும். நீ என்ன நடுவில்? எங்கம்மா... எங்க உன் புருஷன்?" என்று கேட்க, "அவர் போலீஸ் ஸ்டேஷனுக்குப் போயிருக்கார்" என்று அவள் நிதானமாக பதில் அளித்தாள்.

சட்டென்று அங்கு அமைதி நிலவியது.

"இங்க இருக்கிற போலீஸ் ஸ்டேஷனுக்குப் போயிட்டு அங்கேயிருந்து கமிஷனர் ஆபீஸுக்கு மனு எடுத்துண்டு போயிருக்கார்."

"எதுக்காக?"

"நீங்க அடிக்கடி வந்து தொந்திரவு பண்றேள். உரக்கக் கத்தி கலாட்டா பண்றேள். எங்களுக்கு அவமானமா இருக்கு அப்படின்னு சொல்லி ஒரு மனு கொடுக்கற

> **கோட்டு சூட்டு போட்டுட்டு ஒராளு உன்னைக் காரணமே இல்லாம திட்டிட்டுப் போறானே எதுக்கு?"**
>
> **"போன தடவை லுங்கி-முண்டாக பனியன்ல வந்து திட்டினான். 'கொஞ்சம் டீசன்டா பேசக் கத்துக்கோ'ன்னேன். அதுக்குத்தான் இந்தக் கோலத்துல வந்து திட்டிட்டு போறான்!"**
>
> **- சகிதா முருகன்**

துக்காக போயிருக்கார்" என்று நிதானமாகச் சொல்ல, நாடார் திகைத்தார்.

இறங்கினாமாதிரி தெரியலையே என்று யோசித்தார். உற்று ரேவதியைப் பார்த்தார். ரேவதி சலனமில்லாமல் இருந்தாள். வந்திருந்த கும்பல் கிசுகிசுவென்று தங்களுக்குள் பேசிக் கொண்டது.

"எந்தக் கமிஷனரும் எதையும் கிழிக்க முடியாது!" அந்தப் பையன் மறுபடியும் கத்தினான்.

"இல்லீங்க. அப்படியில்லை."

நாடார் சொல்ல எல்லோரும் அவரைத் திரும்பிப் பார்த்தார்கள்.

"என்னாண்டதான் வந்து பேசிகிட்டிருந்தாரு. இப்படி மிரட்டறாரே, என்னா பண்றது அப்படின்னு கேட்டிருந்தாரு. நான் பதற்றமா பேசாதிங்க வேற ஒன்றும் பண்ண முடியாது சொத்து அவங்களது. அவங்க கேட்கறபோது கொடுத்துதானே ஆகணும். அதுனா காசு வாங்கிக்கிட்டு விட்ருங்க

அப்படின்னேன். வக்கில்கிட்டே போலாமா அப்படின்னு சங்கரன் பத்தி விசாரிச்சாரு அவருகிட்ட யாரோ சங்கரனைப் போய் பார்க்கும்படியா சொல்லியிருக்காங்க போல, இன்னிக்குப் போய் காலையில பார்த்துட்டு வந்தாப்போல... ஏம்மா பார்த்துட்டு வந்தீங்களா?"

"ஆமாம். அவர் வீட்டுக்குப் போயிருந்தோம்."

ரேவதி பொதுவாக பதில் சொன்னாள்.

"அதான் சங்கரன் சொல்லியிருப்பார் போல, இவர் மனு எடுத்துக்கிட்டு போலீஸ் ஸ்டேஷனுக்கும், கமிஷனருக்கும் போயிருப்பார்போல."

சட்டென்று அந்த வீட்டுக்காரனின்



முகம் வெளிற நின்றான்.

"சங்கரன்கிட்ட போனாரா? என்னத்துக்குச் சரிடா... நீங்கல்லாம் போங்க" என்று திரும்பிப் பார்த்து தன்னுடன் வந்த ஆட்களை வெளியே அனுப்பினான்.

அவர்கள் ஏதோ முணுமுணுக்க, சட்டென்று பையைப் பிரித்து ஒரு கட்டு நோட்டை எடுத்து இரண்டாக உடைத்து ஒரு பாதியை அவர்களிடம் நீட்டினான். வெளியே போகச் சொன்னான். உள்ளே நுழைந்து நாடாரினுடைய அறைக்குள் அமர்ந்து 'ஏ.சி. போடுங்க' என்று சொல்லி அங்குள்ள பாட்டிலைத் திறந்து குளிர் பானத்தை வேகமாகக் குடித்தான்.

ரேவதி வாசலில் காத்திருந்தாள்.

"அந்தம்மா வெளியே நிக்குது. இருக்கச் சொல்லவா; மேல போகச் சொல்லவா?"

"உள்ள வரச் சொல்லுங்க."

அவர் கதவு திறந்து "உள்ள வாங்க தாயி" என்று கூப்பிட்டார்.

அவள் உள்ளே போனாள்.

"நாங்க காலி பண்ணிடறோம்னுதானே சொல்லியிருக்கோம். திரும்பத் திரும்ப வந்து தொந்திரவு பண்ணா என்ன அர்த்தம்?"

"எப்போ காலி பண்ணுவீங்க! அது இல்லை முக்கியம்."

"உரக்க கத்தினா உடனே காலி பண்ணிட முடியுமா? உங்க கம்பெனிக்கு நாயா உழைச்சிருக்கார். அந்த நன்றியே இல்லாத அதட்டலா மிரட்டலா பேசறேனே?"

"உங்க வீட்டுக்காரர்தான் பேசினாரு. வெளிய போடா நாயேன்னு சொன்னாரு என்னைச் சொன்னா, சும்மா விட்டுவேனா?"

"என்ன பண்ணிட முடியும். பதிலுக்கு நாயேன்னு சொல்வேன். இல்லை, ஆளை வச்சு அடிப்பேன். அதானே. காலி பண்ணிட முடியாதுன்னுட்டா?"

"என்னா! காலி பண்ண மாட்டீங்களா?"

நாடார் உள்ளுக்குள் புகுந்தார்.

"இதோ பாருங்க நீங்க விஷயத்தை அணுகுமுறை ரொம்ப தப்பா இருக்கு தம்பி. வயசு கோளாறால இந்த விஷயத்தை தப்பா பண்ணிடாதீங்க. உங்களுக்கு இந்த வீட்ல உரிமை இருக்கு. அதே சமயம் அவர் இந்த வீட்டைக் காலி பண்ணணும்னு எந்த அவசியமுமில்லை. கோர்ட்டுக்குப் போனாக்க இனிக்கு இந்த விஷயம் முடியாது. சுமுகமாக தீர்க்க முயற்சி பண்ணுங்க. அதை விட்டுட்டுப் பொம்பளைங்ககிட்ட எகிறி பேசினா, இதுவும் ஒரு தப்பான விஷயமாகும். இந்தம்மா போய் போலீஸ் ஸ்டேஷன்ல நீங்க அசிங்கமா பேசினீங்க. தவறா கூப்டீங்க அப்படின்னு ஒரு மனு எழுதிக் கொடுத்தாங்கன்னா, உங்க பக்கம் பெரிய பிரச்னை வந்துரும். ராதா கிருஷ்ணன் நினைச்சார்னா இந்த மனுவும் அவரால கொடுக்க முடியும். அந்த மனுவுலயே அவர் கொஞ்சம் முன்ன பின்னதான் உங்களைப் பத்தி எழுதியிருக்காரு."

"என்னா... எழுதியிருக்காரு?"

"அம்மா... சொல்லுங்கம்மா."

வாய்க்கு வந்தபடி அவளை அடக்குவதற்கு விதம்விதமான அம்புகளைப் போட்டுவிட்டு அவர் இப்பொழுது ரேவதியின் பக்கம் திரும்பிவிட்டார்.

"எனக்குச் சரியா தெரியலை. ஆனா, இடையராத வழிமுறையை ஈடுபடாதீங்கறதை மட்டும் அவர் தெளிவா எழுதியிருக்கார். கொலை முயற்சியில் முடிந்தாலும் முடிய

லாம். எனக்குப் பாதுகாப்பு வேண்டும்னு சொல்லியிருக்கார்."

"நான் ஏங்க உங்களைக் கொலை பண்ணப் போறேன்?"

"எனக்குத் தெரியாது. அவரு எழுதினதைச் சொல்றேன்."

டெலிபோன் எடுத்து யாரோடோ பேசினான். செல்லில் யாரோடயோ தொடர்பு கொண்டான்.

அவனுக்கு ஃபோன் கால்கள் வந்தன.

நாடாரும், ரேவதியும் காத்திருந்தார்கள். ரேவதி போகட்டுமா என்பதுபோல் நாடாரைப் பார்க்க, நாடார் இருங்கள் என்று சைகையில் சொன்னார். மேலே ராதாகிருஷ்ணன் தவித்துக் கொண்டிருந்தார்.

மாடியிலிருந்து இறங்கி என்ன நடக்கிறது என்று பார்த்தார்.

அவர்கள் உள்ளுக்குள்ளே பேசிக் கொண்டிருக்கிறார்கள் என்று நாடாருடைய வேலைக்காரன் சொன்னான்.

அவர் மறுபடியும் மாடிக்குப் போய் கதவு தாழிட்டுக் கொண்டார்.

ஏதோ ரேவதி சுமுகமாத் தீர்க்கறாப் போல இருக்கு. நான் நினைச்சதுபோல பயமா இருக்காது. வந்த ஆளுங்களைத் திருப்பி அனுப்பிவிட்டான். நாடார் எதுவோ மிரட்டறார். கடவுளே பெரிய ஆபத்துலேர்ந்து காப்பாத்திட்டப்பா. வந்த ஆள் உள்ளுக்குள்ள நுழைஞ்சிருந்தா நான் அப்போ எகிறிப் பேசியிருந்தா பல்லு பேந்திருக்கும். மூஞ்சி உடைஞ்சிருக்கும். கையோ, காலோ வெட்டுப்பட்டிருக்கும். ரணகளம் ஆகியிருக்கும். இந்த அவஸ்தைய என்னால தாங்க முடியுமா? என்னால சண்டை போட முடியுமா? ஆனால், கோபம் மட்டும் நாய்க் குணமா வருதே! ஒரு அடி அடிக்க முடியாது. ரெண்டு அடி தாங்க முடியாது. ஆனால் உள்ளுக்குள் ஆத்திரம் மட்டும் ஏன் இப்படிப் பொங்குகிறது. என்ன தவறு என்னிடத்தில். இதை வேறுவிதமாக நான் அணுகியிருக்க வேண்டும். ஏன் அணுகவில்லை.

"ஏங்க மனுவெல்லாம் கொடுக்க வேணாம். போலீஸ்கார்கிட்ட கொடுத்த மனுவெல்லாம் வாபஸ் வாங்கிருங்க. நான் உங்களுக்கு எவ்வோ வேணுமோ தரேன். எவ்வோ கேட்பாரு."

"அவங்ககிட்ட கேட்டா, என்னங்க தெரியும்? இது போலீஸ் வச்சு முடிக்க வேண்டிய காரியம்"

"ஆனா, போலீஸுக்குப் போறதுக்கு எங்களுக்கும் விருப்பமில்லை. வேற வழியில்லாம தான் போறோம். இவரு, வந்து கைகாட்டி மிரட்டறாருன்னுதான் போறோம். இவரு சின்னவயசு பளிச்சுனு அடிச்சுடலாம். அவரால அடிக்க முடியுமா? எங்களுக்கு வேற என்ன வழி போலீஸுக்கு போறது தவிர?"

"சரி, சங்கரன் என்ன சொன்னாரு?"

அந்த வீட்டுக்காரப் பிள்ளை விசாரித்தான். அவனுக்குச் சங்கரனைப் பற்றி தெரிந்திருந்ததுபோல் அவன் பேச்சு தொனித்தது.

(தொடரும்)

## எங்கேயோ கேட்ட கதை

### பண்ணையாரின் சொகுசு பங்களா

ஒரு பண்ணையார் பணத்தை வாரி இறைத்து ஒரு சொகுசான பங்களா கட்டினார். அதனுள் மூன்று நீச்சல் குளங்கள் உட்பட அனைத்து நவீன வசதிகளும் இருந்தன.

தன்னைப் பார்க்க வந்த உறவினர் ஒருவரை அழைத்துக் கொண்டு போய் தனது ஆடம்பர பங்களாவைச் சுற்றிக் காட்டினார் பண்ணையார்.

மூன்று நீச்சல் குளங்களையும் பார்த்துவிட்டு உறவினர், "எதற்காக மூன்று நீச்சல் குளங்களைக் கட்டியிருக்கிறீர்கள்?" என்று கேட்டார்.

"முதல் குளம் சுடுநீர்க்குளம். இரண்டாம் குளம் குளிர் நீர்க்குளம்." என்றார் பண்ணையார்.

"அது சரிதான். ஆனால் மூன்றாம் குளத்தில் நீர் கூட இல்லை. அது எதற்கு?" என்றார் உறவினர்.

"அது நீச்சல் தெரியாதவர்களுக்காக" என்று பதிலளித்தார் பண்ணையார்.



# கொதித்தெழுந்த சுப்புடு!



எடின்பரோவில் இந்த வருடம் கலா - 2002 என்னும் இந்தியக் கலாசார விழா நடைபெற உள்ளது. இந்த விழாவுக்கு மத்திய அரசின் கீழ் இயங்கும் இந்தியக் கலாசார உறவு மையம் கலைஞர்களைத் தேர்ந்தெடுத்து அனுப்புகிறது. அவர்களுக்கு, தெற்கிலிருந்து எந்தக் கலைஞனும் கண்ணில் படவில்லை. எல்லாம் வடக்கத்திய ஜாம்பவான்களே. இதுகுறித்துக் கேட்டதற்கு, 'பரத நாட்டியக் குழு ஒன்றைத்தான் அனுப்புகிறோமே. அந்த நாட்டியத்துக்கு கர்நாடக சங்கீதத்தைத்தானே பாடப்போகிறார்கள். அதற்கெனத் தனியாக ஒரு கலைஞரும் குழுவும் எதற்கு?' என்று பதில் வந்திருக்கிறது.

மத்திய அரசின் இந்தப் போக்கைக் கண்டித்து வெகுண்டெழுந்தார் சுப்புடு. பரபரப்புடன் தீட்டினார் ஒரு கடிதத்தை அமைச்சர் ஜக்மோகனுக்கு. அவரும் உடனடியாக தம்முடைய துறைச் செயலர் கோபால்சாமியை அழைத்து இதுகுறித்து ஒரு விசாரணை மேற்கொள்ள ஆணையிட்டார். ஆனால் இதுவரை ஏதாவது நடந்ததா என்று தெரியவில்லை. ஆத்திரம் அடங்காத சுப்புடு தி ஸ்டேட்ஸ்மேன் நாளிதழில் ஐஎஃப்எஸ் அதிகாரிகளின் கலாசார வறுமையைப் பற்றி நார்நாராகக் கிழித்து ஒரு கட்டுரை எழுத, அது பெரும் பரபரப்பைக் கிளப்பியிருக்கிறது.

மத்திய பிரதேசத்தின் பன்னா மாவட்டத்தைச் சேர்ந்த தமோலி பட்னா கிராமம். இது மாவட்ட தலைநகருக்கு அருகிலுள்ளது. இக்கிராமத்தில் குட்டு என்று 66 வயதுப் பெண்மணியின் கணவர் இறந்துவிட, அக்கிராமத்தின் முக்கியஸ்தர்கள் கணவரின் சிதைக்கு அருகிலேயே அந்தப் பெண்மணிக்கும் ஒரு சிதையை ஏற்பாடு செய்து அப்பெண்மணியை 'சதி' மாதாவாக்க தயார்ப்படுத்திக் கொண்டிருந்திருக்கிறார்கள். பஜனைகளும் மந்திர கோஷங்களும் வானைப்பிளக்க ஆயிரத்துக்கும் மேற்பட்டவர்கள் இதில் கலந்து கொண்டிருக்கிறார்கள். எட்டு கிலோமீட்டர் தள்ளியிருந்த ஒரு காவல் நிலையத்துக்கு எப்படியோ செய்தி எட்டியது. அங்கிருந்த மூத்த காவல் அதிகாரி துணைக்கு இன்னொருவரையும் அழைத்துக் கொண்டு அந்த இடத்துக்கு விரைந்திருக்கிறார். சிதையில் எரிய ஆரம்பித்த அந்தப் பெண்மணியை மீட்க முயற்சி செய்திருக்கிறார். அங்கு கூடியிருந்த ஆயிரத்துக்கும் மேற்பட்டவர்கள் அந்தக் காவல் அதிகாரியையும் கூட வந்தவரையும் அடித்துத் துவைத்து, மீட்க விடாமல் அப்பெண்மணியை முழுதுமாக அச்சிதையில் எரியவிட்டிருக்கின்றனர். இதில் பெரிய கொடுமை என்னவென்றால், அக்காவல் அதிகாரிகளை அடித்து விலக்கியவர்களில் சிதையில் எரிந்த அப்பெண்மணியின் வயதுக்கு வந்த மகன்களும் அடக்கம். காவல் அதிகாரிகள் உயிர்பிழைத்து தட்டுத்தடுமாறி காவல் படைகளை அழைத்து வந்தபோது, அந்த கிராமமே சூன்யமாகி விட்டிருந்தது. பத்திரிகைகளில் இந்தச் செய்தி பரவி, மத்திய பிரதேச சட்டசபையில் பெரிய சர்ச்சையைக் கிளப்பியபின் விசாரணைக் குழுக்கள் தமோலி பட்னா கிராமத்துக்குச் செல்ல, முழுக்கவும் காலி செய்யப்பட்ட கிராமத்தைத்தான் அவர்களால் எதிர்கொள்ள முடிந்திருக்கிறது.

– ராகவன் தம்பி

# நடக்கும் என்பார்; நடக்கும்!



**மேஷம் :** குருபகவான் 4ல் உச்சம் என்பதால், தெளிவான மனநிலை, உடல் ஆரோக்கியம், நண்பர்கள், உறவினர்களின் ஒத்துழைப்பு என சுமுகமான வாரமாக அமையும். உத்தியோகஸ்தர்களுக்கு நல்ல திருப்பம் ஏற்படும். சுயமாகத் தொழில் செய்பவர்கள் முன்னேற்றம் காண்பார்கள். புதிய பொறுப்புகள் வந்து சேரும். இயந்திரம், போக்குவரத்து சாதனம், மரம், ரியல் எஸ்டேட், மனை, வீடு, வாகனம் போன்ற இனங்களில் எதிர்பாராத அனுகூலம் உண்டாகும்.



**ரிஷபம் :** வியாபாரத்தில் செழிப்பான நிலைமை உருவாகும். கொடுக்கல் வாங்கல் இனங்களில் சுமுகமான திருப்பம் ஏற்படும். புதிய வியாபாரம் அல்லது தொழில் ஆரம்பிக்க நல்ல சமயம். கணவன் - மனைவி உறவு சீராக இருக்கும். நண்பர்கள், நெருங்கிய உறவினர்கள் உதவ முன் வருவார்கள். மாணவர்கள் வெற்றி நடை போடுவார்கள். பெண்களுக்கு யோகமான பலன்கள் அமையும் அதிர்ஷ்டமான வாரம்.



**மிதுனம் :** சனி பகவான் உங்கள் ஜென்ம ராசியில் உலவுவதால், கடன் தொல்லை, நோய் நொடி விலகி, மன அமைதி கிடைக்கும். தெய்வானுகூலம் அதிகரிக்கும். அலுவலகத்தில் நல்ல பெயர் கிடைக்கும். சிக்கலான காரியங்களையும், சாமர்த்தியமாகச் செய்து முடித்து வெற்றியும் காண்பீர்கள். பூர்வீக சொத்து விவகாரங்கள் அனுகூலமான திருப்பம் தரும். பெண்களுக்கு பொன், பொருள் சேரும்.



**கடகம் :** கிரக சஞ்சாரங்கள் அவ்வளவு சிலாக்கியமாக இல்லை என்றாலும் தெய்வ பலம் இருப்பதால், சில சிக்கலான சூழ்நிலைகளைக்கூட சமயோசிதமாகச் சமாளித்து, வெற்றி அடைவீர்கள். அலுவலகத்தில் ஒற்றுமையான சூழல், அமைதியான போக்கு இருப்பதால், தெம்பாகப் பணியாற்றுவீர்கள். வியாபாரத்தில் நல்ல அனுகூலமான திருப்பம் ஏற்படும். பணவசதி தாராளமாக இருப்பதால், குடும்பத்திலும் சுமுகமான சூழ்நிலை இருக்கும். சாதுக்கள் தரிசனம், கிரக வழிபாடு நன்மை தரும்.





**சிம்மம் :** எக்கச்சக்கமான பண நெருக்கடி, எந்தப் பக்கம் திரும்பினாலும் கடன்காரங்க தொல்லை, ஜாண் ஏறினா முழம் சறுக்கிற பொருளாதாரம்னு சிரமப்பட்டுக்கிட்டிருந்தீங்க இல்லையா? இப்ப கிரகச்சாரப்படி, ராகு 10ல், மற்றும் 11ல் சனி என்பதால் எதிர்பாராத அனுகூலம் உண்டாகும். பண நெருக்கடி விலகி, சுபிட்சம் ஏற்படும். கணவன்-மனைவி உறவு நிலை பாசமுள்ளதாக இருக்கும். மாணவர்களின் உழைப்பும் திறமையும் வீண் போகாது.





**கன்னி :** ராசி நாதன் 12ல், மிதுனத்தில் உலவும் சனியின் பார்வை பெற்று இருப்பதால், நிறைந்த அறிவு, கல்வி கேள்விகளில் அனுகூலம் உண்டாகும். 'மறைந்த புதன், நிறைந்த கல்வி' என்பதால், மாணவர்களுக்கு நல்ல பலன்கள் தருவார். உத்தியோகத்தில் இதுவரை இருந்து வந்த தாமதம், தடைகள் நீங்கி முன்னேற்றமான போக்கு உண்டாகும். புதிய முயற்சிகள் அனைத்துமே நலமாகும். உங்கள் திறமை, தன்னம்பிக்கை, உழைப்பு, அனுபவம் எல்லாவற்றுக்கும் ஏற்ப நல்ல பயனைப் பெறுவீர்கள். ஞான மார்க்கத்தில் நாட்டம் ஏற்படும்.



**துலாம் :** உற்சாகமான மன நிலை, எடுத்த காரியங்களில் வெற்றி, உடல் ஆரோக்கியம் என அனுசரணையான வாரமாக இருக்கும். மறைமுக, நேர்முக எதிரிகள் விலகிப் போவார்கள். வெற்றிலைத் தட்டு மாற்றிக் கொள்ளும் நேரம் வந்தாச்சு. காரணமேயில்லாமல் தடை ஏற்பட்டுக் கொண்டுவந்த கல்யாண காரியங்கள் சுமுகமாக முடியும். பொன், வெள்ளி, நவரத்தினம், ஆபரணங்கள், ரசாயனம், கம்ப்யூட்டர் இனங்கள் கொள்ளை லாபம் கொண்டு வரும். புனித யாத்திரை, தெய்வ தரிசனம் போன்ற பவித்ரமான காரியங்கள் நிகழும்.



புகைப்படக் கலைஞர் யோகாவுக்கு (தனுசு) பொருளாதார நிலையில் சுபிட்சம் உண்டாம்.



**விருச்சிகம் :** புதிய சந்திப்பு, புதிய நட்பு, புதியவர்கள் அறிமுகம், புதிய முயற்சி, புதிய பயணம் என்று வெற்றிக்கான அறிகுறிகள் ஜோராக இருக்கின்றன. உத்தியோகத்தில் இருந்துகொண்டே வேறு வகையில் வருமானம் ஏற்படவும் வாய்ப்புள்ளது. பண வசதியைப் பற்றிக் கவலையே வேண்டாம். குற்றால அருவி போல தங்குதடையின்றிக் கொட்டும். குருபலம் நிறைந்துள்ளதால் புதுமனை புகுவிழா, திருமணம் போன்ற சுப விசேஷங்கள் நடக்க சந்தர்ப்பம் கூடி வரும்.



**தனுசு :** கலைத்துறை, சினிமா, நாடகம், சிற்பம், நாட்டியம், இசை, அழகு சாதனம், அலங்காரப் பொருட்கள் ஆகியவை ஆதாயம் கொண்டு வரும். குடும்ப வாக்கு தனஸ்த்தானமாகிய இரண்டாம் இடத்தை குரு பார்ப்பதால், குடும்பத்தில் திருமணம் போன்ற சுபகாரிய முயற்சிகள் நல்ல திருப்பங்கள் கொண்டு வரும். பெண்கள் ஏற்றம் பெறுவார்கள். ஒரு சில மாணவர்களுக்கு உயர் கல்வியும், மேல்நாடு போகும் வாய்ப்பும் அமையும்.



**மகரம் :** உங்கள் ராசிநாதன், மிதுனத்தில் 6ம் இடத்தில் சஞ்சாரம் என்பதால், மனத்தில் துணிச்சல், நம்பிக்கை, உற்சாகம் உண்டாகும். இதுவரை தாமதமாகி வந்த காரியங்கள் கிடுகிடுவென நடக்கும். தனகாரகன் குரு 7ல் உச்சம் பெற்று உலவுவதால், பணவசதி சரளமாக இருக்கும். எதிர்ப்புகள் முற்றிலும் விலகி, மன நிம்மதி ஏற்படும். தெய்வ பலம் கூடும். கிரக வழிபாடு நன்மை தரும்.



**கும்பம் :** உங்கள் ராசிநாதன் சனி, பூர்வ புண்ணியஸ்தானமாகிய 5ல் அமர்ந்து மற்றும் பதினேழாம் தேதி சூரியன் தன் ஆட்சி வீடான சிம்மத்துக்கும் செவ்வாய், 19ம் தேதி முதல் தன் நட்பு வீடான அதே சிம்ம ராசிக்குப் பிரவேசம் என்கிறபடியால் சகல காரியங்களிலும் வெற்றி உண்டாகும். உற்சாகமான மன நிலை இருக்கும். சக ஊழியர்களிடம் சுமுகமான நிலை உருவாகும்.

**மீனம் :** ராசிநாதனாகிய குரு, பூர்வ புண்ணிய ஸ்தானத்தில் உச்சம் பெற்றுள்ளதால், தெளிவான மன நிலையோடு, நல்ல காரியங்களில் ஈடுபடுவீர்கள். புதிய உத்தியோக முயற்சிகள், அனுகூலம் தரும். தனியார் நிறுவனத்தில் பணிபுரிவோர் செல்வாக்கு, அந்தஸ்து உயரப் பெறுவீர்கள். பண வசதி சரளமாக இருக்கும். சனி 4ல் சுகஸ்தானத்தில் சஞ்சரித்தாலும், புதன் 6ல் மறைந்து இருப்பதால், சுகபங்கம் ஏற்படாது. கடன் பிரச்னைகள் ஏதும் இருப்பின் அவை நீங்கிவிடும். பொன், வெள்ளி, பொருள், ஆடை, அணிகலன், ஆபரணச் சேர்க்கை நடைபெறும். குருபலம் பூரணமாக இருப்பதால், திருமணம் போன்ற சுபகாரியங்கள் கூடிவரும்.



அக்னி சர்மா பக்கம்

ஆகஸ்ட் 14 முதல் 20 வரை

# 3 முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

காஞ்சிபுரத்திலே பிரம்மோத்ஸவம். பெரிய மூட்டையோடு பார்க்க வந்திருக்கிறார் ஒருத்தர். பகவான் கருட வாகனத்திலே எழுந்தருளிவிட்டான். கங்கை கொண்டான் மண்டபத்தில்தான் போய் சேவிக்க முடியும். பக்கத்தில் இருந்த ஒருவரிடம் மூட்டையைக் கொடுத்து, 'பார்த்துக்கோங்கோ!' என்று சொல்லிவிட்டு, இவர் சேவிக்கப் போய்விட்டார்.

போனவர் அரை மணியில் வந்துவிடுவார் என்று பார்த்தால் ஒரு மணி ஆயிற்று. இரண்டு மணி ஆயிற்று. மூன்று மணி நேரம் ஆன பிறகும் வரவில்லை!

மூட்டையை வாங்கி வைத்துக் கொண்டவர் படாத பாடு படுகிறார். உரியவரிடம் கொடுத்துவிட்டால் விசாரமில்லாமலிருக்கும் என்று தவிக்கிறார்.

'நம்மை நாமே ரக்ஷித்துக் கொள்ளலாம். அதற்கான சக்தி நமக்கு இருக்கிறது' என்று நாம் நினைத்துக் கொண்டோமானால், மூட்டையைத் வாங்கி வைத்துக் கொண்டு தவிக்கிறவன் கதையாகிவிடும்.

மாறாக; நம் ஆத்மாவை எம்பெருமான் திருவடியிலே வைத்துவிட்டோமானால், அதை வாங்கிக் கொள்கிறவன் தானே அதை ரக்ஷிக்க வேண்டும்! பொறுப்பு அப்புறம் அவனுடையதுதானே! அவன்தானே பரிபாலனம் பண்ணுகிறான்!

வைகுண்டத்திலே ஒரு குகை இருப்பதாகச் சொல்கிறது உபநிஷத் - பரம் என்று பெயர். குற்றமில்லாத தோஷமில்லாத இடம் அது. அதைக் காட்டிலும் உயர்ந்த ஸ்தானம் இல்லை என்று அர்த்தம்.

அவனைக் காட்டிலும் மேம்பட்டது இல்லை; அவன் இருக்கிற இடத்தைக் காட்டிலும் மேம்பட்டது இல்லை.

பகவானே இதை கீதையிலே சொல்கிறான். பகவானுடைய வார்த்தையைக் காட்டிலும் நமக்குப் பிரமாணம் என்ன வேண்டும்....?

"என்னைக் காட்டிலும் மேம்பாடுடைய வஸ்து வேறொன்று இல்லை. உயர்ந்த சித்-அசித், சேதன-அசேதனம் எல்லா பொருட்களும் என்னுள்ளே கோக்கப்பட்டுள்ளன..." என்கிறார்.

ஒரு சூத்திரத்திலே - நூலிலே -பல மணிகள் கோக்கப்பட்டிருக்கின்றன. அந்த மணிகளின் வரிசை மிக அழகாக இருக்கிறது. அந்த மாதிரி அண்டசராசரங்களின் வரிசையை ஊடுருவி நிற்கும் நூலாகத் திகழ்பவன் பரமாத்மா அவன் உள்ளுக்குள்ளே இருந்தபடி சமஸ்தத்தையும் தாங்குகிறான். அவை யவை வரிசை குலையாமல் தாங்குகிறான்.

நட்சத்திர மண்டலம், சந்திர மண்டலம், சூர்ய மண்டலம், பூ மண்டலம், கீழே அதல விதல பாதாளாதி லோகங்கள், மேலே ஏழு லோகங்கள், அண்ட சராசரங்கள் அத்தனையையும் தாங்குகிறான்.

அப்படிப்பட்ட உயர்ந்த பராத்பரனான எம்பெருமானிடத்திலே ஆத்ம தியாகம், ஆத்ம சமர்ப்பணம் - பண்ணக் கூடியவர்கள் அம்ருதத்தை அடைவார்கள்.

ஆத்மாவாகிற ஹவிஸினால் அவன் திருவடியிலே ஹோமம் பண்ணிச் சமர்ப்பித்தாயானால் நீ தெரிந்துகொள்வாய் அவன் எப்படிப்பட்டவன் என்பதை - எவ்வளவு உயர்ந்தவன் என்பதை!

பரமாத்ம சப்தத்தை உணர வேண்டுமானால், ஆத்ம தியாகம் ஒன்றுதான் வழி. அவன் ஒருவனுக்கே இது உரியது என்கிற திடமான பற்று வேண்டும்.

இதைத்தான் ஆண்டாள் காட்டினாள். ஒரே பாசுரத்திலே:

*வானிடை வாழும் அவ்*
*வானவர்க்கு*
*மறையவர் வேள்வியில்*
*வகுத்த அவி*
*கானிடைத் திரிவது ஒரு நரி*
*புகுந்து*
*கடப்பதும் மோப்பதும்*
*செய்வது ஒப்ப,*

*ஊனிடை ஆழி சங்கு உத்தமர்க்கு என்று*
*உன்னித்து எழுந்த என் தடமுலைகள்*
*மானிடவர்க்கு என்று பேச்சு படில்*
*வாழ கில்லேன் கண்டாய், மன்மதனே.*

அழகான பாசுரம் இது.

*வானிடை வாழும் அவ்வானவர்க்கு,*
*மறையவர் வேள்வியில் வகுத்த அவி..*

யக்ஞத்திலே நாம் பார்க்கலாம். மூன்று கபாலங்களிலே புரோடாசத்தை எடுத்து வைப்பார்கள். புரோடாசம் என்றால் அரிசியினால் தட்டிய அடை. அதை நெய்யினால் நடவ வேண்டும். கபாலம் என்றால் அதற்கான பாத்திரம். மூன்று கபாலங்களிலே விஷ்ணுவுக்கு என்று எடுத்து வைத்து, எட்டு கபாலங்களிலே இந்திரனுக்கு என்று எடுத்து வைத்து, பரமசிவனுக்கு ஏகாதச (11) கபாலங்களில் எடுத்துவைத்து; சூரியனுக்கு 12 கபாலங்களில் எடுத்து வைத்து - இப்படியே முறைப்படி எடுத்து வைக்க வேண்டும்.

பிறகு அந்தந்த தேவதைக்குரிய மந்திரத்தைச் சொல்லி அபிமந்திரிக்க வேண்டும். அபிமந்திரணம் செய்வது என்றால், அந்தந்த தேவதையின் பெயரைச் சொல்லி அதைப் பக்குவமாக எடுத்து வைப்பது. அவ்வாறு செய்த பிறகுதான் அதை அக்னியிலே சேர்க்க முடியும். எந்தெந்த தேவதையின் பெயரைச் சொல்லி எந்த கபாலத்தை எடுத்து வைத்தோமோ அந்தந்த தேவதைக்குரிய மந்திரத்தின் போதுதான் அதையதைச் சமர்ப்பிக்க முடியும். மாற்றிச் சமர்ப்பித்துவிட்டால் பலனே எதுவும் இராது.

'எல்லாம் கபாலம்தானே, எல்லாவற்றிலும் இருப்பது புரோடாசம்தானே; அதிலேயிருந்து எடுத்து இரண்டை இதிலே போட்டு சமர்ப்பணம் பண்ணினால் என்ன ஆகும்...?' என்று கேட்கலாம்.

யக்ஞம் கெட்டுப் போய்விடும்! கெட்டுப் போவதுமல்லாமல், செய்யத்தகாத காரியத்தைச் செய்ததற்காக கெடுதலான பலன்கள் பல ஏற்படும்.

யக்ஞம் கெடுவதோடு அல்லாமல், பார்த்துக்கொண்டிருக்கிறவர்கள், யக்ஞத்தைப் பண்ணுகிறவர்கள். எல்லோருக்கும் கெடுதல் சம்பவிக்கிறது. ஆகவே, எந்த தேவதைக்கென்று ஏற்பட்டிருக்கிறதோ அந்த தேவதைக்குத்தான் அதைச் சமர்ப்பிக்க வேண்டும்.

இதைத்தான் ஆண்டாள் பாசுரத்திலே சொல்கிறாள்.

'வானிடை வாழும் வானவர்க்கு மறையவர் வகுத்த அவி...'

- வானவர்களுக்காக, வேதம் ஓதுவோர் எடுத்து வைத்ததை..

'கானிடைத் திரிந்த நரி புகுந்து...'

- எங்கேயோ காட்டிலே திரியக்கூடிய குள்ளநரி வந்து அந்த புரோடாசத்தையெல்லாம் எடுத்துக் கொண்டு போய்விட்டால் அது எப்படி ஒரு கேலிக் கூத்தாகுமோ, அதுபோல, கண்ணனின் பொருட்டு என்று என் உடல் பொருள் ஆவியையெல்லாம் எடுத்து வைத்துவிட்டேன். இன்னொரு மனிதனுக்கென்று

## எங்கேயோ கேட்ட கதை

குப்புசாமி மாடியில் இருந்து கீழே விழுந்து விட்டான். மயங்கிய நிலையில் இருந்த அவனை வீட்டுக்குள் தூக்கிச் சென்றார்கள்.

சிறிது நேரத்தில் ஒரு டாக்டர் அவனைப் பரிசோதித்துவிட்டு "இந்த ஆள் இறந்து விட்டான்" என்றார்.

அரை மயக்கத்தில் இருந்த குப்புசாமி, காதில் இது விழுந்தது. அவன் திடுக்கிட்டு விழித்தான். "டாக்டர் நான் இன்னும் இறக்கவில்லை. உயிருடன் இருக்கிறேன்" என்றான்.

பக்கத்தில் நின்ற அவன் மனைவி "வாயை மூடுங்கள்! டாக்டருக்குத் தெரியாதது உங்களுக்கு என்ன தெரியும்?" என்றாள்.



நான் வாழ்க்கைப்படுவேனாயில், நரியி னால் அந்த யக்ஞம் எப்படி கெட்டுப் போகிறதோ அப்படித்தான் ஆகிப் போகும்.

நாரணனே! உன்னையன்றி வேறு கதியில்லை என்றார் திருமழிசை யாழ்வார்.

'உனக்கு என்னை நன்றாகத் தெரியும். எனக்கு உன்னை நன்றாகத் தெரியும். ஆகையால், உன்னையன்றி எனக்கு வேறு கதியில்லை. என்னை ரக்ஷிப்பதைத் தவிர உனக்கு வேறு கதியும் இல்லை!' என்றார்.

பராத்பரனான எம் பெருமானை நினைந்து, மேல் புண்டரீகத்தலே எழுந் தருளியுள்ள எம் பெருமானை, இங்கே யிருந்து கொண்டு உபாஸிக்க வேண்டும். உபாஸிக்கிறபோது, 'இது அவனுடையது' என்று உபாஸிக்கிறவர்களுக்கு - அந்த பிரும்ம வித்தையில் பூர்த்தியை அவர்கள் அடைந்தால், பாரத்பரனான எம் பெரு மானை அடையலாம்.

'பரமாத்மா எவ்வளவு உயர்ந்தவன், அவனை எப்படி அடையலாம்?' என்பதை நாராயண உபநிஷத் காட்டித் தருகிறது.

அதையே ரொம்ப உயர்ந்ததான பர்யந்த வித்யா - கௌசிதகி உபநிஷத் குறிப்பிடுகிறது.

'பர்யந்தம்' என்றால் படுக்கை. பகவான் படுத்துக்கொண்டிருக்கிறான். அந்தப் படுக்கையிலே நமக்குக் கிடைக் கக்கூடிய யோகம் என்னவென்று இந்த வித்யையானது விவரிக்கிறது.

சுவாமி தேசிகன் வியாஸ திலகம் என்கிற நூலிலே இதைக் கொண்டாடு கிறார்.

சாதாரணமாக உலகிலே ஒரு வீட்டுக்கு யாராவது போனால் - வந்தால், அந்த வீட் டுக்காரர், பாயும் தலையணையும் கொடுத்து 'இந்த இடம் உனக்கு' என்று ஒதுக்கித் தருவார். 'காற்று நன்றாக வரும்; இங்கே படுத்துக் கொள்ளுங்கள்' என்று சொல்லுவார். அவர் காண்பிக்கிற இடத் திலேதான் விருந்தாளி படுத்துக் கொள்ள வேண்டும்.

உலகத்திலே யாராவது தன்னுடைய படுக்கையிலேயே மற்றவருக்கு இடம் கொடுப்பார்களா? என்று கேட்டால், பகவான் ஒருத்தன் தான் கொடுக்கிறான்! தான் லக்ஷ்மியுடன் இருக்கும்படியான படுக்கையிலேயே நம்மை ஏற்றி, அவ னுக்குத் துல்யமான போகத்தை நமக்குக் கொடுக்கிறான்.

இதைத்தான் பிரும்ம சூத்ரம் சொல் கிறது - 'மிக உயர்ந்த இடத்தை பரமாத்மா நமக்குக் கொடுக்கிறான்' என்கிறது.

அந்த இடத்தை நாம் அடைவது அவ்வளவு சுலபமல்ல..? பரமாத்மா இருக்கிற இடத்தை அடைய வேண்டுமானால் அதற்குக் காட்டப்பட்டுள்ள உபாயத் தின்படி நாம் நடந்து கொள்ள வேண்டும். இந்த உபாயம்தான் கௌசீதகி உபநிஷத் சொல்கிறது - பகவானாலேயே அமைக் கப்பட்ட நல்ல உயர்ந்த வழி அது.

(வளரும்)

# ஜெயஸ்ரீ ராஜ்

"மம்மி..யாரிந்த அங்கிள்?" கையில் பிடித்திருந்த ஃபோட்டோவை நோட்ட மிட்டவாறே ருசிதா கேட்ட கேள்வியில் ஆடிப்போய்விட்டாள் அவளுடைய அம்மா.

"ஏண்டீ... உனக்கிவனைப் பாத்தா அங்கிள் மாதிரியா இருக்கு? வயசு இருபத்தேழு கூட முழுசா ஆகலை.. சின்னப் பையன்; அமெரிக்காவுல இருக்கறவன்... அதான் நல்ல பர்சனாலிட்டியா இருக்கான்.." அம்மாவுக்கு ஆற்றாமை தாளவில்லை; அவள் தேடித் தேடி தேர்வு செய்திருந்த வரன்களில் முதன்மையானது இந்த ஃபோட்டோவில் இருக்கும் பையன்தான்.

"இதுவா? பர்சனாலிட்டியா?" என்று விட்டு ஓஹோவென்று பெரிய ஜோக்கை கேட்டது போல் சிரித்த ருசிதா, "அம்மா... இதெல்லாம் உன் காலத்து ஹீரோக்கள்மா... இந்த ஜெனரேஷனுக்கேத்தாப் போல ஏதாவது காட்டு" என்று பரபரத்தாள்.

அடுத்ததை, "க்யூட் பேப்.. பேரு சுருளி ராஜனா?" சுருள் சுருளான முடிகளுடன் காட்சி தந்த ஃபோட்டோ நாயகனைப் பார்த்து நக்கலடித்தாள்.

பொறுமையாக மூன்றாவது ஃபோட்டோவை நீட்டினாள் அம்மா; 'வைத்தீஸ்வரன்' என்று போட்டிருந்த பெயரை அடித்துவிட்டு 'தத்தீஸ்வரன்' என்று எழுதினாள் ருசிதா.

'ஆண்டவா... இவனை யாவது இந்தப் பெண்ணுக் குப் பிடிக்கணுமே' என்ற பிரார்த்தனையுடன், அம்மா நாலாவது ஃபோட் டோவைக் காட்ட...

"சீ... மீசை எல்லாம் வச்சுண்டு... ஒரே பொம்பளைவிஷ்ஷா இருக்கு.." ருசிதா அதைத் தூக்கிப் போட் டதும், அம்மாவுக்கு உண்மையிலேயே தூக்கிவாரிப் போட்டது.

"அடிப்பாவி... மீசை வெச்சுக்கறது ஆம்பிளைக்கு லட்சணம்னு சொல்லுவா..." நீட்டி முழக்கிக் கொண்டே வந்த பாட்டிக்கு, பற்றிக் கொண்டு வந்தது.

"பாட்ஸ்... அதெல்லாம் தாத்தா காலத்து பட்சணம்... ஸாரி... என்ன சொன்ன... லட் சணம், நம்ம ஹ்ருத்திக், ஷாருக், டாம் க்ரூஸ், ப்ராட்பிட் இவங்களுக்கெல்லாம் மீசை இருக்கா? அம்மாவாவது அங்கிள்ஸை கொண்டு வரா; உன்கிட்ட விட்டா, ரிங்க்கிள்ஸ் இருக்கற தாத்தாஸ் பட்டாளத்



# கேளாமலே...



தையே அழைச்சுண்டு வந்துடுவே போலருக்கு... ப்ளீஸ்... என்னைக் கொஞ்சம் ஃப்ரீயா விடுங்களேன்; இப்பத்தானே ட்வென்ட்டிஸிக்ஸ் ஆகியிருக்கு? அதுக்குள்ள கல்யாணத்துக்கென்ன அவசரம்? அடுத்த மாசம், ஒரு புது ப்ராஜக்ட் சம்பந்தமா எனக்கு கலிபோர்னியா போற சான்ஸ் கிடைக்கலாம். அதை ஒரு த்ரீ டு ஸிக்ஸ் மன்த்ஸ் இழுத்தடிக்கலாம்; அமெரிக்காவெல்லாம் சுத்திப் பாத்துட்டு அப்புறமா நிதானமா கல்யாணம் பண்ணிக்கறேன்... அதுவரை ஆளை விடுங்க" ஒரு பெரிய கும்பிடாகப் போட்டுவிட்டு, ருசிதா பறந்தே விட்டாள்.

கையில் இன்னும் இரண்டு ஃபோட்டோக்கள் பாக்கி இருந்தன. நிச்சயம் அந்தச் சுந்தரவதனங்களை "கார்ட்டூன்" என்றோ 'பஃபூன்' என்றோ ஒதுக்கியிருப்பாள்; பெருமூச்சுடன் அம்மா அவற்றை மூடி வைத்தாள்.

"உன் பொண்ணாச்சு; நீயாச்சு; அவ எப்ப சரின்னு சொல்லி ஒரு பையனை செலக்ட் பண்றாளோ, அப்ப கல்யாணத்தை நடத்தி வைக்கறது என் பொறுப்பு" என்று அப்பா எப்போதோ கை கழுவிக் கொண்டு விட்டார். எத்தனை ஜாதகமென்றுதான் பார்ப்பார்? இண்டர்நெட்டில்... நியூஸ்பேப்பரில்... மாத, வார இதழ்களில்... அறிந்தவர் தெரிந்தவர் இல்லங்களில்...? எத்தனை 'நேர்காணல்'களுக்கு ஏற்பாடு செய்திருப்பார்?

"சீ.. இவன் மத்தேஸ்... சுவாரஸ்யப்படாது."

"ஐயோ இவன் ஓவர் ஸ்மார்ட்... சரிப்படாது."

"ஒரு கார் கூட இல்லை; கஞ்சக் கேஸ்."

"நாலு கார் வச்சிருக்கான்; லஞ்சக் கேஸ்."

"என்னை வேலைக்குப் போகக் கூடாதுங்கறானே இவன்..



''கட்டாய ஓய்வு வாங்கிட்டு அப் பாடான்னு இருக்கலாமுன்னா காரியம் கைகூட மாட்டேங்குது.''

''ஏன் உங்க ஆபீசுல இன்னும் வீ.ஆர்.எஸ். வரலியா?''

''இல்லை. இன்னும் வேலை கிடைக் கலை!''

— சகிதா முருகன்

---

மேல்சாவனிஸ்ட்..''

''டாமிட்... நான் வேலைக்குப் போயே ஆகணும்கறாம்பா... சுய கௌரவமோ சுய நம்பிக்கையோ இல்லாதவன்...''

''இவனுக்கு இவ அம்மாவையும் தங்கையையும் தவிர வேறு பொம்பிளைகளையே தெரியாதாம்... ரொம்ப போரிங்...''

'நிறைய கர்ல் ஃபிரெண்ட்ஸ் உண்டுங்கறான்... சரியான ஃப்ளர்ட்.''

''எல்லாத்துலயும் மூக்கை நுழைக்கறான்... இண்டர்ஃபியரிங் டைப்.''

''எதையுமே கண்டுக்க மாட்டேங்கறான்... சன்யாசி டைப்.''

இவ்வாறாக, இப்படி என்றால் அப்படி, அப்படி என்றால் தப்படி என்று தடாலடியாக எல்லாவற்றையும் இவள் நிராகரித்ததில், அப்பாவி அப்பா, வாழ்க்கையையே வெறுத்தார். பாட்டிதான் போக வர புலம்பித் தீர்ப்பாள். 'இவ வயசுல நான் மாமனார், மாமியார், மச்சினர், நாத்தனார், நாலு குழந்தைகள்னு பெரிய குடும்பத்தைச் சமாளிச்சேன்; ஏன் உனக்கே ருசிதாவும் ரிஷியும் பிறந்துட்டாளே? என்னமோ பொம்பளை சுதந்திரம் கிதந்திரம்னு பேசி, எல்லாம் குட்டிச் சுவரா நிக்கறதுகள்; கல்யாணம் பண்ணாம அமெரிக்காவெல்லாம் அனுப்பிடாதே.. அந்த சேஷன் பொண்ணு கதை தெரியுமோன்னோ? ஒரு மாசத்துல வரேன்னவ... வருஷக்கணக்காச்சு... அமெரிக்காவுல வீடு இருக்காம்... கார் இருக்காம்... இனிமே கல்யாணம் எதுக்குங்கறாளாம்...''

''நாம நினைக்கறா மாதிரிதான் எல்லாம் நடக்கறதா?'' அம்மா அடங்கித்தான் போனாள். ருசிதா தானாகவே 'ஃப்ரீஸீட்' வாங்கி என்ஜினீயரிங் படித்தவள்; காம்பஸ் இண்டர்வியூவிலேயே வேலையும் அவள் திறமையைத் தேடி வந்ததுதான். அதனால் தார்மீகமாக இவர்களால் எந்தவித எதிர்ப்பும் காட்ட முடியவில்லை.

அவள் ஆபீசிலிருந்து லேட்டாக வீடு திரும்பினால், பாட்டியாவது ''ஏன்டீ லேட்டு'' என்று அங்கலாய்ப்பாள். அம்மா வாயே திறக்கமாட்டாள்; அப்பா ''ஒரு ஃபோன் பண்ணக் கூடாதா?'' என்று மென்மையாகக் கண்டிப்பதற்கே அவள் முகம் வாடிவிடும். ''நான் என்ன ஊரைச் சுத்திட்டா வரேன்? எத்தனை வேலைன்னு வந்து பாரு. சும்மா ஒருத்தன் இருபதாயிரம் முப்பதாயிரம்னு சம்பளத்தைத் தூக்கிக் குடுப்பானா?'' என்று வெடிப்பாள்.

அதற்காக 'வேலையை விட்டுத் தொலை' என்று விட முடிகிறதா? பிள்ளை வீட்டாரெல்லாம், 'ப்ரொஃபஷனலி குவாலிஃபைட், பிரிஃபரப்லி வர்க்கிங்' பெண்கள்தானே வேண்டுமென்கிறார்கள்.

அத்துடன் ''நாம்தான் வீட்டுக்காரருக்கும், மாமியார் மாமனாருக்கும் நடுங்கி கஷ்டப்பட்டோம்; இவர்களாவது சொந்தக் கால்களில் நின்று மதிப்போடும் மரியாதையோடும் வாழட்டுமே'' என்று நினைக்காத அம்மாக்கள் யாரிருக்கிறார்கள்? ஆனாலும், 'இப்படிச் சுதந்திரமாக வளர்த்துவிட்டோமே... இத்தனை ரோஷமெல்லாம் இருக்கிறதே.. இவள் ஒருவனுடன் அடங்கி ஒடுங்கி குடித்தனம் நடத்த வேண்டுமே' என்ற கவலை கலவரப்படுத்தாமலில்லை.

ஏதோ அவளால் முடிந்தது, ஊரிலிருந்த சுடலைமுத்து, காத்தாயி சாமிகளிலிருந்து, ஃபிலடெல்ஃபியா பாலாஜி, லண்டன் ஸ்வாமி நாராயண் வரை பெட்டிஷன் போடுவதுதான். கூடவே, கல்யாண மாலையில் இவள் கண்டிஷன்களைத் தெரிவிக்கலாமா, மாதுரி தீக்ஷித்தை 'மாட்ச் மேக்கிங்'குக்கு

"உன்னிடம் கொடுத்த ஐந்நூறு ரூபாயைத் திரும்ப வாங்குவதற்குள் பாதி உயிர் போயிடுச்சு."

"இப்படித் தெரிந்தால் ஆயிரம் ரூபாய் வாங்கியிருப்பேனே!"

— எஸ். மோகன்



அழைக்கலாமா என்று அம்மா தீவிரமாக யோசித்துக் கொண்டிருந்தபோதுதான், அந்த அதிசயம் நிகழ்ந்தது. வழக்கம்போல் அம்மா காட்டிய ஃபோட்டோக் குவியல்களில் ஒன்றை, ஒரு மாதிரியாக ருசிதா 'ஓகே' செய்துவிட்டாள். நேர்காணலின் போதும் அவன் தேறியதுதான் பேரதிசயமாகப்பட்டது.

'சமைக்கத் தெரியுமா?' என்று இவள் கேட்டபோது, "தெரியாதுதான்; ஆனால் உன்னைப் போன்ற அழகான பெண் கற்றுக் கொடுத்தால் நான் கற்கத் தயார்' என்று இவளை மடக்கியதென்ன...?

'நான் வேலைக்குப் போகலாமா?' என்ற இவள் கேள்விக்கு 'போவதும் போகாததும் உன்னிஷ்டம்; ஆனால் உன்னைப் போன்ற மனைவி வாய்க்கும் அதிர்ஷ்ட சாலிக்கு, உன்னைப் பிரிந்து வேலைக்குப் போவதே கஷ்டம்' என்று அசத்தியதென்ன...?

'என்னவெல்லாம் பிடிக்கும்?' என்று இவள் வினாவிடுத்ததற்கு, 'உன்னைப் பிடிக்கும்; அதனால் உனக்குப் பிடித்ததெல்லாம் சேர்த்துப் பிடிக்கும்' என்று லாவகமாக விடை தொடுத்ததென்ன...?

"ஓகே... லெட்ஸ் ட்ரை ஹிம்" என்று விட்டாள் கடைசியில். அவள் மனம் மாறுமுன் பெற்றோரும் 'டும்டும்டும்'கொட்டி மாப்பிள்ளையுடன் பெங்களூருக்கு அனுப்பி வைத்து விட்டார்கள்.

பாட்டி அடிக்கடி, "இந்தப் பொண்ணு என்னத்தை குப்பை கொட்றதோ... அந்த இளிச்சவாயனை என்னமா ஆட்டி வைக்கிறதோ" என்று கவலைப்பட்டுக் கொண்டே இருந்தாள். ஆறே வாரத்தில் 'டைவர்ஸ்' என்று ஓடி வந்துவிடக் கூடாதே என்று கலவரப்பட்டார் அப்பா. ஈமெயிலிலும் ஃபோனிலும், "மாப்பிள்ளை எப்படிப்பட்டவர் டீ?" என்று அம்மா கேட்டபோதெல்லாம் "ரொம்ப நல்லவர்மா; நான் நல்லாத்தானிருக்கேன்" என்று ருசிதா பதில் சொன்னபோதெல்லாம்... லுங்கியை மடித்துக் கரண்டியும் கையுமாய் கிச்சனில் நிற்கும் மாப்பிள்ளையையும், கம்ப்யூட்டரைத் தட்டிக் கொண்டிருக்கும் பெண்ணையும் மனத்திரையில் கண்டு நிலவரத்தை அளந்தாள் அம்மா.

ஆனாலும் ஆறு மாதங்கள் முடிவடைந்ததில், இருப்புக் கொள்ளாமல் விழுந்தடித்துக் கொண்டு, பெண் குடித்தனம் செய்யும் அழகைக் காண பெங்களூருக்கு ஓடினார்கள். அங்கே...

மாப்பிள்ளை கால்மேல் கால்போட்டு அமர்ந்து பேப்பர் படித்துக் கொண்டிருந்தார்; நடு நடுவே கம்ப்யூட்டரில் ஒரு பார்வை. தப்பித் தவறிக் கூட இப்படி இருந்ததை அப்படி நகர்த்தவில்லை. மாறாக இவள் தான் ஓடி ஓடி வேலை செய்தாள்; அவருக்கு அது பிடிக்கும் இது பிடிக்கும் என்று, வீட்டைத் துப்புறவாக வைத்து, ருசியாக சமைத்து, அன்பாக உபசரித்து... வேலையிலும் திறமையாகச் சமாளித்தாள்.

"என்னடாப்பா சொக்குப் பொடி போட்ட?" பாட்டிதான் துருவினாள்.

"அவகிட்ட அன்பைக் கொடுத்தேன்... அதைப் பத்து மடங்காத் திருப்பறா; அவளுக்குச் சுதந்திரத்தைக் கொடுத்தேன்... அவ என்னையும் என் தேவைகளையும் மதிக்கறா!"

'தட்டுங்கள் திறக்கப்படும்; கேளுங்கள் கொடுக்கப்படும்..' – கடவுளுக்குப் பொருந்தலாம். கேட்காமலே கொடுக்கும் கணவன் கண்கண்ட தெய்வம்தான்.' – பாட்டி மனத்துக்குள் நினைத்துக் கொண்டாள். ○



# லட்சுமி

"இத்தனை நாளும், என் தோளைத் தட்டி, 'இதோ பார்!' என்று காட்டிய உலகத்தை நான் ரசித்துக்கொண்டிருந்தேன். ஆனால், இப்போது, என் தலையில் சம்மட்டியால் அடித்து, 'இந்த உலகம் எந்த லட்சணத்தில் இருக்கிறது பார்த்தாயா?' என்று கேட்கிறார் போல இருக்கிறது" என்கிறார் நடிகை லட்சுமி. இவரது மனமாற்றத்துக்குக் காரணம் 'கதையல்ல.. நிஜம்..!'

தினமும் பகல் மணி பன்னிரண்டரை முதல் ஒன்றரை வரை நேரடியாக ஒளிபரப்பாகும் இந்த நிகழ்ச்சி, ஊரெங்கும் மிகவும் பரபரப்பாகப் பேசப்படும் ஒன்றாகிவிட்டது.

லட்சுமியைச் சந்தித்த போது, மனம் நெகிழப் பேசினார்:

"சுமார் முப்பத்தைந்து வருஷம் சினிமாவில் இருந்திருக்கிறேன். ஆனாலும், இத்தனைக் காலத்தையும் வீணாக்கி விட்டோமோ என்று வருத்தப்படுகிறேன். இது போன்ற ஒரு நிகழ்ச்சியை நடத்த முன்பே வாய்ப்பு கிடைத்திருந்தால், வாழ்க்கை எத்தனை அர்த்தமுள்ளதாக இருந்திருக்கும் என்று நினைக்கத் தோன்றுகிறது.

"எனக்கு ரொம்ப நாட்களாகவே, இந்தச் சமுதாயத்துக்கு ஏதாவது செய்யணும்... செய்யணும்னு என்ற எண்ணம் உண்டு. ஒரு கட்டத்தில் அரசியல் மூலமாகத்தான் ஏதாவது செய்ய

# "நான் நடிக்கவில்லை!"

முடியும் என்று நினைத்தேன். வெறுமனே அரசியல் ஒரு சாக்கடை என்று வெளியில் நின்றுகொண்டு விமர்சனம் செய்து கொண்டிருந்தால் என்ன பிரயோஜனம்? அப்படிச் சொல்கிறவர்கள், அந்தச் சாக்கடையில் இறங்கி சுத்தம் செய்ய முன்வர வேண்டும் என்றுகூட நான் பேசி இருக்கிறேன். ஆனால், வெகு சீக்கிரமே, அரசியல் என்பது சாக்கடைதான்; அதில் இறங்கி நிற்கிற அரசியல்வாதிகள், அந்தச் சாக்கடையைச் சுத்தம் செய்ய வேண்டும் என்கிற நோக்கம் இல்லாமல், அதை மேலும் குழப்பி, எவ்வளவு ஆதாயம் தேடலாம் என்பதில்தான் தீவிரமாக இருக்கிறார்கள் என்பது புரிந்தது. இவற்றுக்கெல்லாம் மேலாக அங்கே ஆதிக்கம் செலுத்தும் ஜாதி... 'ஐயோ... வேண்டாம் அரசியல்!' என்று ஒதுங்க வைத்துவிட்டது.

"அந்தக் குறையை தீர்த்து வைக்க 'கதையல்ல... நிஜம்...!' நிகழ்ச்சி நடத்தும் வாய்ப்பு கிடைத்திருக்கிறது. இப்படி ஒரு வாய்ப்பை எனக்குக் கொடுத்த பகவான் சாய் பாபாவுக்குத் தினமும் நன்றி சொல்லிக் கொண்டிருக்கிறேன். தினமும் ராத்திரி படுத்தால், ஏதோ உருப்படியாகச் செய்த திருப்தியுடன் நிம்மதியாகத் தூக்கம் வருகிறது."

"இது போல, தினம் ஒரு பிரச்னையாகப் பேசுவதால், அவை தீர்ந்துவிடும் என்று நினைக்கிறீர்களா?"

"இல்லை... நான் நிச்சயம் அப்படி நினைக்கவில்லை. அந்த மனிதர்கள், ஏற்கெனவே பாதிக்கப்பட்டு, நொந்து போயிருக்கிறவர்கள். அவர்களின் சோகத்தை நான் பகிர்ந்து கொள்ளுகிறேன். 'மனம் தளராதீர்கள்; தைரியமாக இருங்கள். கஷ்டம் தீரும்' என்று அவர்களுக்கு நம்பிக்கை ஊட்டுகிறேன். நம்பிக்கைதானே வாழ்க்கை!"

"நடிகை என்கிற அந்தஸ்து, இந்த நிகழ்ச்சிக்குப் பலமா? இல்லை, உங்கள் நிஜமான ரியாக்ஷனைக் கூட நடிப்பு என்று விமர்சித்து விடுவார்களே என்பதால் பலவீனமா?"

"சத்தியமாக நான் கதையல்ல நிஜம் நிகழ்ச்சியில் நடிக்கவில்லை; ஆனால், நடிகை என்கிற பாபுலாரிடி, மக்கள் இந்த நிகழ்ச்சியைப் பார்க்க வைக்க பெரிய தூண்டுகோலாக இருக்கிறது என்பது உண்மை. சினிமாவில், (கற்பனை) கதாபாத்திரங்களில் நடித்திருக்கும் நான், இங்கே, நிஜக் கதைகளை, நிஜ மனிதர்களைச் சந்தித்துப் பேசுகிறபோது, ரொம்ப எமோஷனல் ஆகி விடுகிறேன். சில சமயங்களில் இந்தச் சமுதாயம் மீதும், ஆண்களின் மீதும், இன்னும் சில சமயங்களில் பாதிக்கப்பட்ட பெண்களின் மீதும் கூட எனக்குத் தார் மீகக் கோபம் வருகிறது. என்னை ரொம்பவும் கட்டுப் படுத்திக் கொண்டு, ரியாக்ட் பண்ண வேண்டியிருக்கிறது. காரணம், இந்த நிகழ்ச்சி நேரடி ஒளிபரப்பு ஆயிற்றே!"



''நடிகை

*"நீங்கள் இந்த நிகழ்ச்சி மூலமாகப் பெற்ற அனுபவங்களில் சிலவற்றைப் பகிர்ந்து கொள்ளுங்களேன்!"*

"பரமாச்சாரியாரின் அருள்வாக்கில், நான் படித்த ஒரு விஷயம் எனக்கு நினைவுக்கு வருகிறது. நாம் சைக்கிள் பெடலை வேகமாகச் சுற்றிவிட்டு, நிறுத்தின பிறகும் கூட, சிறிது நேரம் பெடல் தானாக சுற்றிக் கொண்டிருக்கும். அது போல, பெற்றோர்கள் செய்கிற பாவமும் சரி, புண்ணியமும் சரி, அவர்களுடைய குழந்தைகளுக்கும் தொடரும் என்று சொல்லி இருப்பார். மனவளம் குன்றிய குழந்தைகளைப் பார்க்கிறபோது இந்தச் சின்னக் குழந்தைகள் என்ன பாவம் செய்தன? ஏன் ஆண்டவன் இவர்களை இப்படிப் படைத்தான்? என்று கேட்கிறபோதே, நானே பெற்றோர் பண்ணிய பாவம்தான் காரணமாக இருக்குமோ என நினைப்பேன். அதே எண்ணம்தான், இந்த நிகழ்ச்சியில் அரவாணிகளைப் பார்த்தபோதும், எய்ட்ஸ் பாதிப்புக்குள்ளான இளம் பிஞ்சுகளைப் பார்த்தபோதும் எனக்கு ஏற்பட்டது.

"படித்தவர்கள் எல்லாரும்கூட, அதிக வட்டிக்கு ஆசைப்பட்டு, பைனான்ஸ் கம்பெனிகளில் முதலீடு செய்து, மோசம் போனதைப் பார்த்தபோது, கோபமும், பரிதாபமும் ஏற்பட்டது.

"கணவனால் விபசாரத்திற்குக் கட்டாயப் படுத்தப்பட்ட மனைவிக்கு எய்ட்ஸ் வந்து சாகிறபோது, ஒரு மூன்றாவது நபரான ஏழு மலை என்பவரிடம், தன் பிள்ளை உமா சங்கரை ஒப்படைத்து, தன் பெற்றோர் களைக் கண்டுபிடித்து, சேர்ப்பித்து விடும்படி கேட்டுக்கொள்ளுகிறாள். ஏழுமலை, மனித நேயத்துடன், அந்தப் பிள்ளையை வளர்த்து வருகிறார். எங்கள் நிகழ்ச்சியில், அவர்கள் பங்கேற்க, அதைத் தொடர்ந்து, கோவையில் வசிக்கும் அந்தப் பையனின் பாட்டி, தாத்தா நிகழ்ச்சியைப் பார்த்து விட்டு, நேரில் வந்தும் விட்டார்கள். ஆனால் பாட்டி, தாத்தாவைக் கண்டு பேரன் சந்தோஷப்பட்டாலும், தான் வளர்ப்பு பெற்றோரிடமே இருக்க விரும்புவதாகவும், லீவு விட்டதும் அவர்களுடன் கொஞ்ச நாள் வந்து இருப்பதாகவும் சொன்னபோது, என் மனம் நெகிழ்ந்தது.

"கல்லூரிக்குச் சென்ற தங்கள் மகள், வீடு திரும்பாமல் மாயமான சோகத்தை பெற்றவர்கள் என்னுடன் பகிர்ந்து கொண்ட நேரத்திலேயே கோவையிலிருந்து ஒரு நேயர், டீ.வியில் காட்டப்பட்ட போட்டோவில் உள்ள காணாமல் போன பெண்ணை நான் கோவையில் ஒரு குறிப்பிட்ட பகுதியில் அடிக்கடி பார்த்திருக்கிறேன். நீங்கள் புறப்பட்டு வாருங்கள். நாம் எப்படியும் தேடிக் கண்டு பிடித்து விடலாம் என்று சொன்னது இனிய ஆச்சரியம்.

''நிகழ்ச்சியின் முடிவில், அந்தப் பெற்றோரிடம், உங்கள் பெண்ணை யாரும் கடத்திக் கொண்டு போயிருக்க மாட்டார்கள். அவளாகவே முடிவு செய்து, யாருடனாவது போயிருக்கக் கூடும். அவளைத் தேடிக் கண்டு பிடித்து விடலாம். ஆனால், மறுபடி அவளைப் பார்க்கிறபோது, வீணாய்ப் பதற்றப்படாதீர்கள். அவள் விரும்பி இணைந்தவருடனேயே சந்தோஷமாய் வாழ வாழ்த்துங்கள். உங்கள் பெண், காணாமல் போய் விடவில்லை; என்று நிம்மதி அடையுங்கள் என ஆலோசனை கூறி அனுப்பி வைத்தேன்... ஒவ்வொன்றும் ஒருவிதம்; யாவுமே கதையில்லை... நிஜம்.!''

சந்திப்பு:
**எஸ். சந்திரமௌலி**

# வாழ்க்கை வரலாறு வெளிவருமா...?

செம்மங்குடியின் 95வது பிறந்த நாளை வேத கோஷங்களுடன் கொண்டாடியது 'கர்நாடிகா' அமைப்பு. நீண்ட காலமாக பொது நிகழ்ச்சிகளில் தலை காட்டாமல் ஓய்வில் இருந்து வரும் சங்கீத பிதாமகர் அன்றைய நிகழ்ச்சிக்கு வந்து கலந்து கொண்டதும் உரையாற்றியதும் தனிச் சிறப்பு.



• செம்மங்குடியின் பிறந்த நாள்...

கடந்த தி.மு.க. ஆட்சிக் காலத்தில் செம்மங்குடியின் வாழ்க்கை வரலாறை எழுத தமிழக அரசு ஏற்பாடு செய்யும் என்று அறிவித்தார் கலைஞர். அதைத் தொடர்ந்து, கே.வி. திருவேங்கடம் (சென்னை வானொலியின் முன்னாள் இயக்குனர்), வித்வான் காரைக்குடி சுப்ரமண்யம் ஆகியோர் முயற்சியில் அவ் வரலாறு எழுதப்பட்டுவிட்டது. தமிழக அரசிடம் ஒப்படைக்கப் பட்டும்விட்டது. பிரசுரம்தான் ஆக வேண்டும். இன்றைய தமிழக அரசு கவனிக்குமா...?



• பி.எஸ். நாராயணசாமிக்குப் பாராட்டு!

செம்மங்குடியின் சிஷ்யர்களுள் முக்கியமானவர் பி.எஸ். நாராயணசாமி. சென்னை, ஸ்ரீ கிருஷ்ணகான சபா இவருக்கு சங்கீத சூடாமணி என்ற விருது வழங்கிச் சிறப்பித்ததையொட்டி நாராயணசாமியின் சிஷ்யர்கள் அவருடைய 'மினி' வாழ்க்கை வரலாறை வெளியிட்டுள்ளனர். அந்தப் பதினாறு பக்க கையேட்டில் பாதிக்கு மேல், தமது குரு செம்மங்குடியின் சங்கீதம் பற்றி நாராயணசாமி கூறியுள்ளவைதான் இடம் பெற்றுள்ளன!

- அம்மு
படங்கள் : யோகா

காதில் விழுந்தவை:

# அறிவாலயத்திற்கு ஆபத்தா?



இணைப்பு விழா நெருங்க, நெருங்க த.மா.கா. தனது கோரிக்கைகளை நிறைவேற்ற வேண்டும் என்று காங்கிரஸ் தலைமைக்குக் கடுமையான அழுத்தம் கொடுத்துக் கொண்டிருக்கிறதாம். வாசனுக்கு ஏ.ஐ.சி.சி. பொறுப்பு, சட்டசபைக் கட்சித் தலைவர் பொறுப்பு மற்றும் 75 சதவீத கட்சி நிர்வாகிகள் பதவிகள் ஆகியவற்றை முதலில் கேட்டது த.மா.கா. ஆனால் இப்போது அவற்றையெல்லாம் மூட்டைகட்டி வைத்துவிட்டு மாநிலத் தலைவர் பதவியை மட்டும் கைப்பற்றுவதில் முனைந்துவிட்டதாம் அது. மாநாட்டின் விழா மேடையில் தன்னையோ தனது பிரதிநிதியையோ தலைவராக சோனியா காந்தி அறிவிக்க வேண்டும் என்று மிகவும் விரும்புகிறாராம் வாசன். அடுத்ததாக, தலைவர் பொறுப்பு இளங்கோவனிடம் இருப்பதைவிட த.மா.கா. பிரமுகர்கள் கையில் இருந்தால் கூட்டணி பேசுவது சுலபம் என்று அம்மா கருதுகிறாராம். அதனால் தலைவர் பொறுப்பைக் கைப்பற்றும்படி அட்வைஸ் செய்திருக்கிறாராம். ஆனால் இளங்கோவன் மீது பாசமாக இருக்கும் சோனியா, இந்த மாற்றத்துக்கு ஒப்புக் கொள்ள மாட்டார்" என்று சொல்கிறார்கள் இளங்கோவனின் தோழர்கள்.



• வெற்றிவேல்

● அறிவாலய வளாகத்தில் முன்புறம் காலியாக உள்ள நிலம் அங்கீகரிக்கப்பட்ட ப்ளான்படி இல்லை; எனவே அதை மாநகராட்சியிடம் ஒப்படைக்க வேண்டும் என்று பூகம்பத்தைக் கிளப்பிவிட்டிருக்கிறார் மாநகராட்சி த.மா.கா. தலைவர் வெற்றிவேல். இதனால் கொஞ்சம் ஆடித்தான் போயிருக்கிறது தி.மு.க.

கலைஞர் பெங்களூரில் ஓய்வெடுக்கப் போய்விட்ட நிலையில், இது பற்றிப் பேச தி.மு.க.வினர் யாரும் தயாராக இல்லை. மாநகராட்சி ப்ளான் அங்கீகாரக் கமிட்டியின் தலைவராக வெற்றிவேல் வந்த பிறகு, பல தி.மு.க. தலைவர்கள் சென்ற ஐந்தாண்டுகளில் செய்த கட்டட முறைகேடுகளைத் தோண்டியெடுத்துள்ளாராம்.

— சஞ்சயன்

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Pvt. Ltd. Editorial Team : C. Egnath Raj, Anuradha Sekhar, Jesudoss. Layouts : S.Stephen, P.R. Rajan.
Editor : Seetha Ravi.
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 330/-; Overseas : Rs. 2000/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 165/-; Overseas : Rs. 1000/- (Air Mail)

